உ

கடவுள் துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவரவர்களியற்றிய

# பஞ்சபாண்டவர்

## வனவாசம்.



இஃது,

மணிமங்கலம்.

வடிவேலுமுதலியாரவர்களால்

பரிசோதிக்கலுற்று,




மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

P. N. C. கடைகாரியம்,

M. கிருஷ்ணப்பிள்ளையவர்களால்



பிடாரித்தாங்கல்.

நாராயணசாமிமுதலியார்குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை குயப்பேட்டை,

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1912.

இதன் விலை அ[illegible]—12.

உ

மகாகணபதிதுணை.

நீதிநெறி நாடக உபாத்தியாயர்

சங்கிலியா பிள்ளையவர்க ளியற்றிய

புதியவர்ணமெட்டுள்ள

நீதிநெறி

# அரிச்சந்திர நாடகம்

## அச்சிட்டு வந்து விட்டது.

இதற்கு முன் இப்பெரும் நாடகத்தை சில வர்ண மெட்டுகளி லமைத்து நீதிநெறி அரிச்சந்திர நாடகமெனப் பெயர் கொடுத்துப் பாடிய வித்வான் ம-ா-ா-ஸ்ரீ சங்கிலியாபிள்ளை யவர்களால் இப்போது தற்கால நாகரீகத்துக்கேற்றவாறு பாரீஸ்-இந்துஸ்தான்-திருப்புகழ் முதலிய பல வர்ணமெட்டுகளிற் புதிதாய் அமைத்து நீதிநெறி நாடக உபாத்தியாயர் சங்கிலியாபிள்ளை யியற்றிய புதிய வர்ணமெட்டுள்ள அரிச்சந்திரநாடகமெனப் பெயர்கொடுத்து ஷை உபாத்தியாயரைப் போல லெத்தகிராப் படமும் அத்துடன் ஷை புஸ்தகத்துக்கேற்ற ஐதீகப்படங்களும் சேர்த்து உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு நேர்த்தியான காலிக்கோபயிண்டு செய்து விற்பனைக்கு தயாராயிருக்கிறது. ஷைபுஸ்தகம் 1-க்கு விலை ரூ 1 4 0 பிரியமுள்ளவர்கள்நேரிலும், வி-பி-போஸ்டு மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

எமது கம்பெனியின் கேட்லாக் தேவையானால் அரைய ணாஸ்டாப்பு அனுப்பினால் அனுப்பப்படும்

இப்படிக்கு

பி. நா. சிதம்பரமுதலியார்

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு

மதராஸ்.



துருவாசமகாரிஷிக்கி பஞ்சபாண்டவாள் போஜனமளித்தல்.



உ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# பஞ்சபாண்டவர் வனவாசம்.

விநாயகர் தோத்திரம்.

ஐந்துகரத்தோனே அரனார்திருமகனே
அறுமுகற்குமுத்தவனே ஆனைமுகப்பிள்ளையாரே
தொந்திவிநாயகரே தொப்பைக்கணபதியே
பானைவயிற்றோனே பழமேந்துங்கையோனே
மூலமுதலேநீர் முன்னடக்கவேணுமையா

சரஸ்வதி தோத்திரம்.

நாவிற்சரஸ்வதியே நான்முகனார்தேவியரே
சதுர்முகனார்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய் மறையவனார்தேவியரே
இந்தகதைசொல்வதற்கு என்கருத்தில்வாருமம்மா
தப்புகளில்லாமல் தாயேநீவாக்கருள்வாய்
பஞ்சவர்கள்தன்கதைக்கு பாரதியேமுன்னிருந்து
குற்றமதுவாராமல் கொண்டணைத்துக்காருமம்மா

கதையின் வரலாறு.

## முதலாவது சூரியவனம்.



காரானைக்கன்னே கணபதியேமுன்னடவாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
வனவாசம்போனபின்பு மகாராஜனென்னசெய்தான்
அம்மான்சகுனியின் அருகாகத்தானழைத்து
மாமன்சகுனியின மதிமுகத்தைதான்பார்த்து
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுசொல்வான்
சபைகள் நிறைந்ததிருக்கச்சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போய்ஞ்சாறுமாதமுண்டு

செத்தாரோபிழைத்தாரோ சேதிதெரியவில்லை
வனம்போனபஞ்சவர்கள் மாண்டாரெனவறியேன்
அம்மான்சகுனியை அகித்துவசன்கேட்கையிலே
மாமன்சகுனியுந்தான் மருமகனுக்கேதுரைப்பான்.
தூதரைப்போகவிட்டு தொலைதூரமேதேடில்
வனமாய்வனங்களிலே வனவாசஞ்செய்கிறது-
செத்ததுவும்பிழைத்ததுவும் சேதிதெரியுமென்றான்
என்றதுகேட்டவுடன் எழுந்தான்திர்யோதனனும்
அங்கிருக்குந்தூதர்களை அரசுமன்னன்தானழைத்து
ஐவர்வனம்போய் அநேகநாளாச்சுதே
எந்தவனத்தி லிருக்கிறாரெனறறிந்து
ஐவர்கண்காணாதே அதிசீக்கிரம்வாரும்
காற்றாய்ப்பறந்து கடுகியேவாருமென்றான்
தாம்பூலம்வாங்கித் தானடந்தார்தூதுவர்கள்
கோட்டைகடந்தார்கள் கொத்தளமுந்தான்கடந்தார்
பட்டணமுந்தான்கடந்து பாரவனம்போகலுற்றார்
செந்நாய்புலிகரடி சீறும்வனங்கடந்தார்
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனங்கடந்து
சூரியவனந்தனிலே போய்ச்சேர்ந்தார்தூதுவர்கள்
பர்னசாலைக்குள்ளிருக்கும் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்குமிடமறிந்து ஏகிநடந்தார்கள்
வனமாய்வனங்கடந்து வாரார்களம்பலத்தே
திரியோதிரனிருக்குஞ் சிங்காதனத்தின்முன்பாய்
சாஷ்டாங்கமாகவேதான் சரணமிட்டார்தூதுவர்கள்
மகாராஜாமெச்சுகின்ற மன்னவரே நீர்கேளும்
சூரியவனத்திலைவர் சுகமாயிருக்கிறார்கள்
பர்னசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டோமென்றார்
அவ்வார்த்தைகேட்டு அரசுமன்னனேதுசொல்வான்

மாமாசகுனி மன்னவரே நீர்கேளும்
எந்தவிதப்பண்ணூலும் இறவாமல்பஞ்சவர்கள்
தப்பிப்பிழைத்து யிருக்கிறூர் தாரணியில்
வனவாசந்தீர்ந்து வந்தார்களாமானல்
பங்குள்ளபிரகாரம் பாதிராச்சியங்கேட்பரே
வாராமல்பஞ்சவரை வனத்திலேகொல்லுகைக்கு
ஆலோசனைசொல்லுமையா அம்மானெனவுரைத்தான்
மாமன்சகுனி மருமகனுக்கேதுரைப்பான்
செல்வமருமகனே திரியோதிரா அஞ்சாதே
ஐவரைக்கொல்லவென்றல் ஆலோசனைசொல்லுகிறேன்
தேவலோகத்திற்குஞ் சினமுற்றதுருவாசர்
(அவரை)வருந்திதபசுபண்ணூல்வந்திடுவார்பொழுதே
வந்தபொழுதில் வருந்திச்சரணஞ்சொல்லி
அடிசல்சமைத்து அமுதுபடைத்திரானல்
போஜனமிட்டு புகழ்வேந்தேபொற்பதத்தில்
சரணமடைந்தால் சந்தோஷப்பட்டிடுவார்
துருவாசர்தன்மகிமை சொல்லிமுடியாது
தேவாலாசுராது செயிக்கமுடியாது
ஆராலுமாகாது அந்தரிஷியைஜெயிக்க
அப்படிக்கொத்தவரை அழைத்துநிரன்னமிட்டால்
சந்தோஷப்பட்டிடுவார் தபசில்பெரியவரும்
ஐவரைக்கொல்லுதற்கு அவரைமனுகேட்டால்
நல்லதென்றுசொன்னல் இராச்சியமுன்னுதடா
பாரதலேபாரும் ஐவரைக்கொல்லவென்றல
என்றுசொல்லக்கேட்டு இராஜனதிரியோதிரனும
உள்ளங்குளிர்ந்து உடனேகத்தானெழுந்தா
அங்கொருவர்தானறியா தரவக்கொடியோனடந்தான்
முத்துமிதியடியை தொட்டுநடந்தசைந்தான்
பூங்காவனம்புகுந்து புதுக்கங்கைநீராடி
ஸ்நானங்கள்செய்து சபதபமுந்தான்முடித்து
நினைந்துசிவனை நெற்றியில்வெண்ணீரணிந்து
அரகராவென்று அள்ளியிட்டான்வெண்ணீறு

ஜலங்களைக்கொண்டு நிலஞ்சுத்திபண்ணி
தெற்பாசனம்போட்டு திரியோதிராஜன்
துருவாசமகாரிஷியை அருகுவரத்தானினைந்து
கண்ணிரண்டுமூடிக் கருத்தில்நினைந்தானே
அருந்தபசுபண்ணுனே அரவக்கொடியோனு
அப்போது அந்தரிஷி யறிந்துஞானதிருஷ்டியினால்
சர்ப்பக்கொடியோன் தபசுநிலையறிந்து
சந்தோஷமாகி தான்வருவார் அந்தரிஷி
சடையுஞ்சடைமுடியுந் தம்பிரானைப்போல
கையில்கமண்டலமுங் காசாம்பரமணிந்து
தெண்டுகமண்டலமுந் திருநீற்றுக்கோபியுடன்
வருகிறாரந்தரிஷி வானுலகந்தான்கடந்து
வனமாய்வனங்கடந்து வாழ்மலையுந்தான்கடந்து
திரியோதிரன்தபசு நிலைசேரவந்தரிஷி
கண்டவுடன்மன்னவனை கடுகியேதானெழுந்து
முக்காலுமன்னவன் முடிவணங்கிதெண்டனிட்டு
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றான்
சிறந்ததுருவாசரிஷி சித்தமகிழ்ந்தேகுளிர்ந்து
என்னையழைத்ததுதா னேதுகருமமென்றார்
மனதில்நினைந்ததெல்லாம் மன்னவுரையுமென்றார்
அஞ்சிப்பயந்தவனும் அரசுமன்னன்ஏதுசொல்வான்
அமுதுபடைக்கவென்று அநேகநாளென்மனதில்
எண்ணியிருந்தேன்காண இதுவேகருமமல்லால்
வாரும்மகாரிஷியே வருவீர்அமுதுசெய்வீர்
வருந்தியழைத்துவந்தான் மாளிகைவாசலிலே
வட்டமணைபோட்டு வந்திருமென்றுசொல்லி
கைக்குச்சலங்கொடுத்தான் கட்டழகன்கோமானும்
தலைவாழையிலைபோட்டுத் தண்ணீருந்தான்தெளித்தான்
முக்கனியுஞ்சர்க்கரையும்முன்படைத்தான் திரியோதிரன்
கட்டுவர்க்கமுடனே காவலனுந்தான்படைத்தான்
உண்ணுமுண்ணுமென்று வுபசரணைபண்ணலுற்றான்
அத்தனைபோஜனமும் அருந்தினாரந்தரிஷி

உண்டுபொசித்தாராய் உள்ளங்குளிர்ந்தாராம்
கையலம்பிக்கொண்டுபவர் கனிவாயுஞ்சுத்திபண்ணி
சிங்காதனத்தினிலே சேர்ந்தாரேயத்தரிஷி
தென்னமுடிவேந்தன் திரியோதிராஜன்
பொற்றாம்பாளந்தன்னிலே புட்பமுஞ்சந்தனமும்
தங்கத்தாம்பாளத்தில் தாம்பூலந்தான்கொடுத்தான்
மெத்தமகிழ்ந்தாரே மேன்மைதுருவாசரிஷி
சர்ப்பக்கொடிபடைத்த சதிமன்னனைப்பார்த்து
(உனக்) கென்னமனதில் இஷ்டமெல்லாங்கேட்டுவிடும்
மனதில்நினைந்ததொரு வரங்கேளுந்தாரேனென்றார்
என்றுமவருரைக்கவேதுரைப்பான்திரியோதிரன்
ஏதுவரந்தருவீரென்றுரைத்தான்திரியோதிரன்
அப்போதுமாமுனியும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
(நீ) கோரும்வரங்களெல்லாம் கொடுப்பனவேதாரேனெ
ன்றார், அப்போதுதிரியோதிரன் ஆணழகனேதுசொல்
வான், பங்காளிப்பிள்ளைகள் பஞ்சவர்களைவருண்டு
ஐவர்வனவாசம் ஆரணியம்போனார்கள்
சூரியனைவைத்திலேதான இருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரைக்கொல்லவென்று அனேகமனதாகி
உம்மைவருந்தினேன் உண்மையுள்ளமாமுனியே
பஞ்சவரைக்கொல்வேனென்று பரவசமாய்ச்சொல்லுமெ
ன்றார், எந்தவகையாலும் இறக்கவகைபண்ணுமென்று
ன், பாதம்பணிந்தானே பாம்புக்கொடியோனும்
துருவாசமகாரிஷியுஞ் சொல்லுகிறார்வாய்திறந்து
ஏதுதானும்மைசெய்தா ரிராஜாக்கள்பஞ்சவர்கள்
எப்படிக்கொல்வேனு னிராஜாக்கள்பஞ்சவரை
திரியனதுகேட்டு செப்புவான்வாய்திறந்து
ஆரணியந்தன்னிலே ஐவருகிற்சென்று
போஜனங்கேட்டாலே புகழ்வேந்தர்பஞ்சவரை
ஐவருக்குபோஜனங்க ளங்கேகிடையாது
வெற்றசோருண்டு விதமறியார்பஞ்சவர்கள்
போஜனமில்லையென்றால் பொட்டெனவேசாபமிட்டு

கில்லாகமண்ணைக் காவலரைச்செய்துவிட்டு
கடுகிவந்ததுசேதிசொல்லும் கனத்தரிஷியாரே
போய்வாருமென்று பொருந்தவேகெண்டனிட்டான்
துருவாசமகாரிஷியுஞ் சுருக்காகவேயெழுந்து
தெண்டுகமண்டலமுஞ் செப்புலித்தோலாசனமும்
கடுகிநடந்நாரே காடுஞ்செடிநோக்கி
அஸ்தினுபுரந்தாண்டி ஆறுஞ்சுனைதாண்டி
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
சில்லென்றுபூத்த செடியுப்வனந்திரமும
கடுகிவருகிறுர் கனத்தரிஷியவரும்
ஏழுலகையாண்ட வெப்பெருளிதையறிந்தார்
அடியளந்தமாயவனுர் ஆதிமூலமேதுசெய்தார்
நம்பினவரைக்காக்கும் நாராயணரெழுந்து
காவலர்கள்பஞ்சவர்க்கு கனமோசம்வந்ததென்று
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்வருகுதென்று
செல்வத்திரவியங்கள் சொழிந்துபோகுதென்று
தோளிற்செபமாலை சோரவிட நாளாச்சே
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
என்றும்பகையாளி யேற்பட்டான்பஞ்சவர்க்கு
இங்கேயிருந்தோமென்றுல் இறந்திடுவர்பஞ்சவர்கள்
நம்பினேமென்றவரை நாமல்லோகாக்கவேணும்
என்றுயெழுந்தாரே எம்பெருமாள்மாயவனும்
துவாரகாபுரிதாண்டி துழாய்மௌலிதான்வாரார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
சிறந்ததுருவாசருடன் சேர்ந்தாரேயெம்பெருமாள்
ஆலிங்கனம்பண்ணினுர் ஆயர்பெருமாளும
இந்தவனத்துக்கு யேதுகவையாய்ப்போறீர்
எங்கே நீர்போறீர்காண் என்றுர்பெருமாளும
மாரிஷிதுருவாசர் வாய்திறந்தேதுசொல்வார்
மாயன்பெருமாளே வந்ததென்னயிவ்வனத்தே
பார்வேட்டையாகவே பாரவனங்கள்வந்தேன்
வனசாரியாகவே வந்தேன்காணிவ்வனத்தே

அவ்வார்த்தைதான்கேட்டு அந்தரிஷியேது சொல்வார்
பஞ்சவர்கள் தாமிருக்கும் பாரவனங்களிலே
ஐவரிருக்குமந்த அடவியிலேயே வச்சேர்ந்தார்
புண்ணியவானைவரையும் போஜனங்கேட்கவந்தேன்
என்றுசொல்லக்கேட்டு எம்பெருமானவரும்
நாமுமவருமிரேரும் ராஜாக்களைப்பார்க்க
கூடநடந்தாரே கோபாலசுவாமியவர்
இருவருமாகவே யிருண்டவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்தோரு மூங்கில்வனந்தாண்டி
செந்நாய்புலிபாடி சிறுபவனந்தாண்டி
பாதிரிமுல்லை பருத்தவனந்தாண்டி
ஒருநாளைக்கிருநாளை மெசந்த கொம்பிலேயிருக்கும்
கருநாரைகிளைதேடும் கதலிவனந்தாண்டி
வந்திவருங்காலையிலே காரியமாமென்னசெய்தார
பலாமரத்தடைக்கண்டதுவும் பாரளந்தாரேது சொல்வார்
மெத்தப்பெரியவரே மேனதவஞ்செய்தவரே
இந்தப்பலாயிலேதான் எதுக்குதவுமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமேலவா ஆரியரிஷியேது சொல்வார்
இந்தப்பலாயிலையில் விரியபோசனங்களுண்டால்
பலாயிலையிலேபோசனங்கள் பண்ணவாகுதுஇட்டாலே
அமரருக்குமறிபுங்காண ஆர்க்குங்கிடையாது
எல்லோர்க்குங்கிட்டாது ஸ்ரீராமாவென்றுசொன்னார்
உசிதங்களைத்தான்கேட்டு உவந்து நடக்கையிலே
அந்தவனங்கடந்து அந்தவனம்போகையிலே
காமதேனுப்பாலை கருங்கல்லுப்பாறையிலே
வைத்திருக்கிறதைக் கண்டார்பெருமாளும
மாயனம்பெருமாளும் வார்த்தையவர்க்கேதுரைப்பார்
மெத்தப்பெரியவரே மேனதவஞ்செய்தவரே
தூயதவத்திற்சிறந்த துருவாசமாமுனியே
காமதேனுவின்பாலும் காரியத்துக்காகுமோதான்
(இது) எதுக்குதவுங்காணென்றார் பெருமாளும்
அவ்வார்த்தைதான்கேட்டு அந்தமுனியேது சொல்வார்

தேவலோகந்தன்னிலே தேவருக்குங்கிட்டாது
ஆர்க்குங்கிடையாது அமரருக்குங்கிட்டாது
(இது) எடுத்துப்பொசித்தாலோஸ்பருககற்புதங்காண்
என்றுசொன்னவார்த்தைதனை எம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுமவர் சாமிநடந்தாரே
அடுத்தவனந்தனிலே அவரிருவர்போகையிலே
தாமரைத்தடாகத்தை சாமிகண்டேதுசொல்வார்
ஐயாபெரியவரே அமரர்க்கரிதானவரே
இந்தஜலந்தானும் எதுக்குஆகுமென்றூர்
துருவாசமகாரிஷியுஞ் சொல்லுகிறூர்பொட்டெனவே
தாமரைப்பொய்கையிலே ஸ்நானங்கள்செய்தாலும்
தபங்கள்ஜெபங்கள்பண்ணி தாகத்துக்குண்டாலும்
சிவனேயவனுகுஞ் செப்பமுடியாது
என்றுசொன்னவார்த்தை யெம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுயப்போ சாமிநடந்தாராம
இருவருமாகவே ஏகிவழிநடந்தார்
சூரியன்வனந்தனிலே சேர்ந்தாரிருவருமாய்
பர்னசாலேமேலிருந்த பஞ்சவர்கள் கண்டுவிட்டார்
மாயன்பெருமாளும் மாமுனியானவரும்
வருகிறூரென்றுமந்த மகாராஜர்தானெழுந்து
நடுக்கிட்டுத்தான பதைத்துச் சீக்கிரமாய்த்தானெழுந்து
எதிர்கொண்டுஓடிவந்து இறங்கியேதெண்டனிட்டார்
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுதெண்டனிட்டார்
கடிகிழுடிகியே காட்டுத்தழையொடித்து
ஐந்தடுக்குமெத்தையதாய் ஆசனம்போட்டார்கள்
இடசிங்காதனத்தில் ஏறியிருவருமாய்
பச்சிலேமெத்தையிலே பதியக்கொலுவிருந்தார்
தக்கபுகழுடைய தருமராவர்கூறுவார்
திரியோதிரன்செய்த சேதிதனைக்கேட்டீரோ
நாடோடிருந்தவென்னை ராஜமன்னன்தானழைத்து
விருந்தருந்தவாருமென்று விருந்தோலைதானனுப்பி
வருந்தியெனையழைத்து வஞ்சனைகள்பண்ணினனே

கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
வாரவழிதனிலே வசிகளைத்தான்புதைத்தான்
அதுக்குப்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
வசநாபிதண்ணீர்பந்தல் வழியில்வைத்தான்மாபாவி
அதுக்குப்பிழைத்தோமே ஆண்டவனேஉன்னருளால்
பொற்குழிவெட்டியே பொற்சிங்காதனமிட்டு
கொல்லநினைத்தானே குடிகேடன்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
எண்ணெயிட்டுக்கொள்ளுமென்று எங்களையுந்தானழைத்
கொல்லநினைக்தானே குருடன்மகன்சத்ராதி (து
அதுக்குப்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
நீர்க்குழிதோட்டி நீராடவாருமென்றான
குளத்தில்வலைதாட்டிக்கொப்பெனவேபோங்களென்றான்
அதுக்கும்பிழைத்தோமே அரிராமர்புண்ணியத்தால்
உண்ணுகிறசாதத்திலே ஒருக்காலேநஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைகாரன்நஞ்சையிட்டான்
கொல்லநினைத்தானே குடிகேடனசத்ராதி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேயுன்னருளால்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே
சொக்கட்டானைபோட்டானைகாண சோழிவிளையாடி
பகடசாலைபோட்டு பந்தியங்கள்பேசினான்
நாடுகளுஞ்சீமைகளும் பாச்சியத்தான்பறித்தான்
தூயசிமையேழுந் துரைத்தனமுந்தான்பறித்தான்
பெருந்தவிலங்குமிட்டு பெருங்கிடங்கிலேயடைத்தான்
காற்றுநுழையாத கல்லறைக்கிடங்கிலிட்டான
தள்ளியிழுத்துவந்து தாள்விலங்குபோட்டுவிட்டான்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே
அறையிலிருந்தபெண்ணை அம்பலத்திற்கொண்டுவந்து
பாஞ்சாலைபெற்றபெண்ணை பாவையழகியளை
அரசர்சபைநடுவே அம்பலமேற்றிவைத்தான
சொல்லாதுஞ்சொல்லியல்லோ துகலுரிந்தான்மாபாவி
வாய்வரிசையில்லாமல் வயபரிகப்பேசினனே

பாரவனவாசம் பன்னிரண்டுவருடம்வரை
ஆரணியம்போயிருந்து அப்பாலொருவருடம்
அக்கியாதவாசம் யார்க்குந்தெரியாமல்
ஊரில்உருமாறி யொளித்திருந்துவந்தாக்கால்
காடுதிரிந்துவந்தால் காசிநகர் தரேனென்றான்
பங்குள்ளபிரகாரம பாதிநாடுதாரேனென்றான்
பாரவனவாசம பரதேசமவந்துவிட்டோம்
எங்கள்-பொழுதுதொலையுமோ பூமியரசாளுவமோ
என்றுதெளியுமோ எக்காலம்சென்றிடுமோ
நாங்கள்சுகமாக ராச்சியத்தையாளுவமோ
உம்முடையதிருவுள்ளம் எப்படியோ நாமறியோம்
பாதஞ்சரணமென்று பணிந்தாரே தருமராயர்
மாயன்பெருமாளும வார்த்தையவரேதுசொல்வார்
தலையிலெழுதினதை தள்ளிவைப்பாரொருவருண்டோ
வரும்வினைவந்தாக்கால் மடியேந்தவேண்டாமோ
ஈசனெழுதியதில் எவ்வளவுங்குறையாது
என்று-பிரியவசனத்தை பெருமாளுரைத்தாரே
தக்கபுகழுடைய தருமரவரேது சொல்வார்
இந்தரிஷியாரும் யேதுகவையாய்வந்தார்
என்றுமவர்கேட்க யேதுசொல்வார்மாயவரும்
வந்தவருத்தத்தை மாயவரும்கேளுமென்றார்
என்றுசொல்லக்கேட்டு இயலான தர்மலிங்கம்
துருவாசமாமுனிக்குத் தெண்டஞ்சமர்ப்பித்து
சொல்லுவராய்வாய்திறந்து சொற்பெரியதாமலிங்கம்
அடியேனைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
கமலபதமநொந்திடவே காலநடையாய்வந்தீரே
செந்தாமரைப்பாதம செம்புண்ணாய்ச்சிவந்ததுவே
தேடிவந்தகாரியத்தைச் செப்புமென்றார்மாமுனியே
துருவாசமாமுனியும் சொல்லுகின்றார்வாய்திறந்து
குருகுலவங்கிஷத்தில் குந்தியார்புத்திரரே
போஜனங்கேட்கவந்தேன் புகழ்பெரியகர்மரே நான்
தேவருக்குமற்புதமாய் சிவனார்க்குப்பிரீதியாக

இப்போதுபோஜனங்க ளிட்டாலேயல்லது
கல்லாய்ச்சபிப்பேனென்றார் கனத்தரிஷிபவரும்
மெத்தப்பயந்தார் சேவில்லை தர்மராஜர்
ஆயவரைப்பார்த்துமல்லோ அநேகவிசாரமிட்டார்
மடிந்துவிடுவோமென் செய்வோம
என்றுபுலம்புகையில் எம்பெருமாளே துசொல்வார்
வீமா சுருக்கேவே தாவாருமெனறார்
பருத்தவனங்களிலே பலாயிலை நீபறித்து
கருங்கல்லுபோலக் காமதேனின்பாலிருக்கும்
காராம்பசுப்பாலைக் கடுகியேபோர்த்தெடுத்து
தாமரைப்பொய்கையிலே ஜலங்கொண்டுவாருமென்றார்
என்றுசொல்லமாயன் எழுந்துநடந்தான் வீமன்
கடிதுமுடிகியே ஆற்றுப்பறந்துவந்து
காமதேனின்பாலையவன் கடுகியேபோர்த்தெடுத்து
பருத்தவனங்களிலே பலாயிலைகான்பறித்து
தாமரைப்பொய்கையிலே ஜலங்கொண்டுஓடிவந்தான்
துருவாசமாமுனியே சுவாமியெழுந்திரென்றார்
கைக்குஜலங்கொடுத்து கடுகவேதருமராயர்
வட்டமிணைபோட்டு வந்திருஞ்சுவாமியென்று
பலாயிலைபோஜனங்கள் பாங்காய்ப்படைத்தார்கள்
உபசாரணைபண்ணியே உண்ணுமையாசுவாமியென்றார்
போஜனத்தைமாமுனியும் பொசித்தபிரகாரம
ஆயாசந்தீர்ந்தாரே அந்தரிஷியாரும்
கையலம்பிக்கொண்டாராம் கடுகமகிழ்ந்தாராம
தாம்பூலமும்வாங்கிச் சந்தனமுந்தானணிந்து
ஐவரைக்கொல்லவந்த அந்ததுருவாசரிஷி
தேவர்களருந்துகிற திவ்வியமாபோஜனங்கள்
போதப்படைத்தார்கள் புகழ்வேதாபஞ்சவர்கள்
இப்படிக்கொத்தவரை எப்படிக்கொன்றிடலாம்
என்றுமனமகிழ்ந்து இராஜாக்களைவாழ்த்தி
ஐவர்பஞ்சபாண்டவரை அந்தரிஷிவாழ்த்தினர்
ஐவரையும் வாழ்த்தி ஆயமைதெண்டனிட்டு

இருங்களிருங்களென்று ஏழுந்துநடந்தாரே
கடிகிழுடியே கரியமலைதான் தாண்டி
சூரியன்வனந் தாண்டி சுருக்காகவருகிறாராம்
காடுகள் தாண்டியே கரியமலைதான் தாண்டி
அஸ்திநாபுரத்தை அடுத்தாரமர்த்தரிஷி
திரியோதிரனிருக்குந் திருச்சபைதன்னில்வந்தார்
திரியோதிரராஜன் தெண்டனிட்டான்மாமுனியை
அடிபணிந்துதெண்டனிட்டு ஐயாசரணமென்றான்
சிங்காதனம்போட்டு சிறாகவீற்றிரென்றான்
ஆசனத்தின்மேலாக அந்தமுனிவீற்றிருந்தார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்கேட்பான்
ஐவரையங்கொன்று அதயபண்ணிப்போட்டீரோ
கல்லாய்ச்சபித்தீரோ கடுகிவேந்தீரோ
என்றுசொல்லிக்கேட்டானே இயலரவராஜதுரை
துருவாசமாமுனிக்குத் தோஷிமொழிகேளாமல்
கோபமிகக்கொண்டு கொப்பெனவேயேதுசொல்வார்
ஐவரையுங்கொல்லென்று அனுப்பினாய்பாதகனே
ஐவர்போனுபசாரணை ஆரொருவர்செய்ததில்லை
தேவர்கள்தானருந்தும் திவ்வியமாபோஜனங்கள்
போதப்படைத்தார்கள் பொன்னடியைத்தான்வணங்கி
சரணமடைந்தார்கள் சந்தோஷமாகிவந்தேன்
ஐவரையுங்கொல்லவென்று அனுப்பினாய்பாதகனே
உன்னுடையவங்கிஷத்தில் ஒன்றும்விளங்காது
ஐவருடகையாலே அனர்த்தமாய்ப்போவென்று
சாபங்கொடுத்தாரே சபர்த்துள்ளமாமுனியும்
செப்பிநடந்தாரே தெய்வலோகந்தனிலே
துருவாசமாமுனியும் தெய்வலோகம்போனபின்பு
அப்போதிரியோதிரன் அங்கேவிசனமதாய்
எண்ணுதலெண்ணமெண்ணி இருந்தான் திரியோதிரன்
ஐவருக்காகவே ஆயிருக்கும்போது
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்

ஆயதேவுலகிருக்குந் தருவாசமாமுனியை
அட்டவடிகொடியோனும் அணுடயினுனுமைக்கொல்ல
திரியோதிரன்சொற்படிக்கச் சீறுந்தருவாசபுனி
உம்மைக்கொலைமனதாகி கோபித்துவந்தாரே
அதுவறிந்துங்களை நான் ஆதரிக்கஇங்குவந்தேன்
அல்லாதேயாமாளுல் அநீதமாய்மாண்டிடுவீர்
என்றுமாரக்கமாயவரும் எதுரைப்பார்தருமருமே
உம்மைநம்பியல்லோ உயிர்கொண்டுலாவுகிறோம்
நீரே துணையல்லால் வேறுதுணையுமுண்டோ
நம்பினயேர்களையே ரட்சிக்குந்தேவனல்லோ
அடியாரைக்காக்கின்ற ஆதிபரம்பொருளே
ஏழைகளைக்காக்கின்ற எம்பெருமாளாண்டவரே
பனிரண்டுதன்வருஷம் பாரவனந்திரியுமட்டும்
எதுவினைவருமோ எம்பெருமாளாண்டவரே
இனமென்னவஞ்சனேயோ எம்பெருமாள்நானறியேன்
வருமிவினைவாவுக்கும் மாயவரே துணைவாரும்
அரக்குமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்திர்
உன்மகிமையாரறிவார் உலகளந்தமாயவரே
சரணஞ்சரணமென்று தாள்பணிந்தார்பஞ்சவர்கள்
சஷ்டாங்கமாகவே சரணமிட்டார்பஞ்சவர்கள்
மாயன்பெருமாளும் மனதுமிகக்குளிர்ந்து
ஐவர்மேல்பட்சம் அதிகப்பிரியமுமாய்
சந்தோஷப்பட்டுசுவாமி தன்னுடன்மனங்குளிர்ந்தார்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
இந்தவனந்தனிலேதான் இனிவனம்போங்களென்றார்
மற்றொருவனத்திலேதான் மனனவரேபோங்களென்றார்
ஆமிந்தவனந்தனிலே ஐவரும்போய்வாசபண்ணு
தெற்குமேற்குக்கிழக்கு சேனதாரஞ்சென்றாலும்
வடக்குத்திசையிலேதான் மன்னவரேபோகவேண்டாம்
எதுவினைவந்தாலும் என்னைநினைத்திடுங்கள்
என்றுமவர்சொல்லி எம்பெருமாள்தானெழுந்தார்

வட்டமாங்கருடனேறி மாயவரும்போய்நடந்தார்
காடுசெடி தாண்டி கரியமலை தான்தாண்டி
அழகாம்துவாரகைக்கு ஆண்டவரும்போய்நடந்தார்

முதலாவது, சூரியவனம் முற்றிற்று.

## உ-வது, ராமரிஷிவனம்.

இரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
கூடைதலையேலே குடிவாழ்க்கைகானகத்தில்
முன்னைமுசுட்டையும் முகிழ்விரிந்த தூதுவளை
பண்ணைக்கலவையும் பறட்டைபுளிக்காளை
தின்றுதிரிகிறார்கள் தேசாந்திரிபோலே
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
ஐந்தடுக்குபர்னசாலை அவ்வனத்திலுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலைமேலாகப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்த-வனத்திலேஐவர் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலேதான் அழகானராமரிஷி
தபசிற்பெரியவரும் தப்பிராணைவரும்
சரணங்கள்பண்ணினாலே சாதங்கரியிடுவான்
போஜனங்களிட்டுமல்லோ புஷ்பங்கள்தான்கொடுப்பான்
காவிகாசாம்பரமும் கைமணியுந்தான்கொடுப்பான்
புலித்தோலுமாசனமும் பொருந்தவேதான்கொடுப்பான்
சரணமடைந்துமே சாமிபோய்வருமென்பான்
தாதாபெரியவர்கள் தப்பெடுத்துவந்தாலும்
அரிராமாவென்றுசொல்லி அனந்தம்பேர்வந்தாலும்
ராமாராமாவென்றசத்தம் ராமரிஷிகேட்டாலும்
அரிகரியென்றசத்தம் அந்தரிஷிகேட்டாலும்



பாம்பாக சபிக்கப்பட்டிருக்க இராமரிஷி பாண்டவர்களை எடுத்துவி ழுங்க கிருஷ்ணபகவான் எலியாக நுழைந்து விடுதலைசெய்தது.

கோவிந்தாவென்றசத்தம் குருமுனிதான்கேட்டாலும்
கோபித்துக்கண்சிவத்து கொப்பெனவேதானெழுந்து
சிறிவரும்புலிபோல் சிவ்வெனவேதானெழுந்து
கையிற்றடியெடுத்து டிகியடிப்பானே
வாரியெடுத்துமவர் வல்லுயிரைக்கொள்ளைகொள்வான்
அப்படியாகவே அநேகநாளிருக்கும்போது
மாயன்பெருமாளும் வார்த்தையதுவறிந்து
தள்ளாடுங்கிழவனைப்போல் தானேவடிவெடுத்தார்
பரதமூகம்நிறைந்த பழுத்தமரம்போலே
காதவடிவாக சாமிவருவாராம்
ராமரிஷிதானிருக்கும் நல்லவனந்தனிலே
அந்தரிஷியிருக்கும் ஆச்சிரமமுட்புகுந்து
ஹரிஓம் ஹரிஓமென்று அடித்தாராநந்தப்பதனை
சாரங்கபாணியென்று சங்குதனைத்தானூதினர்
அந்தச்சத்தந்தான்கேட்டு அரியரிஷிதானெழுந்து
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேதடியெடுத்து
ஆனையின்மேலேதான் ஆண்சிங்கம்புகுந்தாப்போல்
தாக்கிஒருவனையும் தடியாலடிக்கலுற்றான்
மாறியடித்தானே மதம்பெரியராமரிஷி
அந்த அடிபட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
மறுகாலொருதரமும் மாறினான்ராமரிஷி
அவ்வடியும்பட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
அவன்மாறியடித்தானே மாயனென்றறியாமல்
சுழட்டியடித்தானே சுவாமியென்றறியாமல்
அவ்வடியும்பட்டவுடன் அரிராமாகோபமாகி
கண்கள்சிவந்துமல்லோ காந்தாளமுமெழும்பி
ஆகாயமாகவே வளர்ந்தாரே ஆயரங்கே
விஸ்வரூபமாகவே மேகவண்ணர்தான்வளர்ந்தார்
கண்டானேராமரிஷி கால்கைதடுமாறி
அடித்தொடையுங்காலும் அதிரவிடவிடென்ன
மெத்தப்பயந்து விழுந்தானடிபணிந்தான்
சுவாமிசரணமென்று தாள்பணிந்தான்ராமரிஷி

முக்காலுந்தெண்டனிட்டு முடிவணங்கிபோற்றிசெய்தா
அப்போதுமாயவரும அருளாளரேதுசொல்வார் [ன்
மாயன்பெருமாளுமே வார்த்தையங்கேதுசொல்வார்
போஜனங்கள்போடுறதும் போதப்பணியுறதும
மயேஸ்பரரடியார்க்கு வணங்குவதேயல்லாது
எந்தனடியாரை இகழ்ச்சியாய்ப்பேசுறதும்
மாறியடித்துமே வாயாத்தம்பண்ணுறதும்
அகந்தைகள்பண்ணுறதும் ஆகுமோராமரிஷி
ஆகாதகாரியங்கள் அனர்த்தங்கள்தேடிக்கொண்டீர்
இவ்வார்த்தைகேட்டுமே இயலானராமரிஷி
மெத்தப்பயமாகி விஷ்ணுவைத்தான்பணிந்து
கைகட்டிவாய்புதைத்து கடிகியேயேதுசொல்வான்
ஆதிசிவன்பாதம அடியேனறிந்திருப்பேன்
உன்னுடையபாதம் ஒருக்காலுநானறியேன்
தேடியுங்காணுதால் தேவரீருன்பாதம்
ஆண்டவரேயுமைக்காண அநேகநாள் தவமிருந்தேன்
கோடித்தவமிருந்துங் கோவிந்தனைக்கண்டதில்லை
ஆகையினாலேதான் ஆயர்வுமைக்காண
உம்முடவடியாரை உதாசினம்பண்ணுறது
இத்தவிதமாக இருந்தேனெந்நாளாய்
என்வினையகலறதின்று எமபெருமாளும்மாலே
உன் - பாதமதைக்கண்டபோதே பாவங்கள்போக்கிவிட்
டேன், அஞ்சிப்பயந்தவனும் ஆசாரம்பண்ணினான்
காயாம்புவண்ணருமே கரியமாலேதுசொல்வார்
அகந்தைகள்செய்ததினால் அனேகபாவமுந்தனுக்கு
சாபப்பிடியுமென்றார் சௌரிபெருமாளும்
ஆயிரம்வருஷமட்டும் அரவமாய்ப்போகவென்றார்
தாராமூக்கன்மலைப்பாம்பாய்ச்சாபமிட்டாரெம்பெருமாள்
அப்போதுராமரிஷி ஆயனையேதுகேட்பார்
எமபெருமாளிச்சாப மெப்போதுதீருமென்றார்
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியமவாரார்கள்

வனவாசப்போனார்கள் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
தருமர்தம்பிநால்வர்களைத் தாமெடுத்துவிழுங்கிடுவீர்
வெற்றியதானை வீமனருச்சுனனை
நகுலர்சகாதேவர் ராஜாக்கள் நால்வரையும்
எடுத்துவிழுங்கியே இருக்கின்றவேளையிலே
அருச்சுனன்வில்லாலுன் அங்கப்பிளந்துவிடும்
அந்தச்சமயத்தில் அங்கேநான்வந்திருப்பேன்
நான்வந்திருந்து நற்சாட்சிதாரேனென்றார்
அப்போதுராமரிஷி அயரிட்டசாபமதால்
அரீராமர்சாபத்தால் அப்பாம்புமுண்டாச்சு
அநேகநாளாய்ப்பாம்பு அவ்வனத்திலேயிருக்கும்
அதுவரியார்பஞ்சவர்கள் அவ்வனத்திலேயிருந்தார்
இராமரிஷிவனத்தில் இராஜாக்கள் தானிருந்தார்
பர்ணசாலையுண்டுபண்ணி பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
காயும்பழமும் கந்தமூலங்களுண்டு
ஐவருமங்கேதான் அலித்திருக்குபோது
தெற்குமேற்குகிழக்கு தேடிகனிபறிப்பார்
வடக்குதிசைநோக்கி மன்னர்கள்போறதில்லை
அவ்வனத்திலேயொருநாள் அடங்காதவீமனவன்
மெத்தவகங்காரமுடன் வீமனுமங்கேநினைவாய்
கடுகியெழுந்திருந்தான் கனிகள்பறிக்கவென்று
வடக்குதிசைதனிலே மாயன்போகாதேயென்றார்
காயுங்கனியுமங்கே கடுகியேவிட்டாதோ
வேண்டியராட்சதர்கள் வேதமுனிகளுண்டோ
அவ்விடத்திலதிசயங்க ளெல்லாமறிவோமென்று
கடுகியெழுந்திருந்தான் கட்டழகன்வீமனவன்
சல்லடங்கள்போட்டல்லோ கட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சங்குவிட்டு
கையில்கதையெடுத்து கடுகியேதானடந்தான்
வடக்குதிசைநோக்கி வாரான்மதகரியான்
காயுங்கனியுமங்கே கடுகப்பழுத்திருக்கும்
அவ்விடத்திலேகனியும் அனேகம்பழுத்திருக்கும்

அருநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தைகளும்
கொச்சித்தமர்த்தையுடன் குடகுபலாப்பழமும்
மாங்கனியும்தேங்கனியும் வண்ணப்பலாப்பழமும்
மட்டில்லாப்பழங்களெல்லாம் வனத்திலேசொரிந்திருக்கு
ம், அளவில்லாக்கனிகளெல்லாம் அவ்வனத்தில்கானிரு
க்கும், கண்டானேவீமனவன் கண்கள்மிகக்குளிர்ந்தான்
பார்த்தானேவீமனவன் பாவைரெண்டுந்தான்குளிர்ந்தா
அங்கேகனிகள் அனேகப்பழுத்திருக்க [ன
மெத்தகனிகளிங்கே வேணதெல்லாந்தானிருக்க
உண்டுபிழைப்பார்களென்றல்லோ வுலகளந்தார்
தின்றுபிழைப்பார்களென்று திருமாலும்
வடகுத்திசை போகாதே யென்றுரோமயவரும்
சாமிபெருமாளவர் சந்நிதியைக்கண்டோமே
என்றுமனதிலெண்ணி ஏங்கிநடந்தானே
எண்ணாதுமெண்ணினான் இயலானவீமனவன்
அந்தவனத்திலவனாகவுள் நுழைந்து
மரத்தின்மேலேறினான் மதவீமராஜனவன்
உச்சியிற்கனிபறித்து உண்டுபொசித்தான்காண்
காயுங்கனிபறித்து கடுகவேதான்பொசித்தான்
வயாரத்தின்றுமே வயிராரத்தான்பொசித்தான்
அண்ணருந்தம்பியர்க்கும் அனேகங்கனிபறிக்க
அருநெல்லிசிறுநெல்லி அழகாந்தமர்த்தையுடன்
சோலைப்பலாக்கனியும் தய்யவிளாங்கனியும்
கிளையைவளைப்பானுங் கிள்ளியொருபழம் பறிப்பான்
செடியைவளைப்பானும் சிவந்தபழப்பறிப்பான்
அங்கேகனிகளனேகப்பறித்துகையிலே
அடுத்தபுகரிலேகாளரவமெழுந்திருந்து
சரிந்தவனத்திலேதான் சர்ப்பமெழுந்திருந்து
மதவீமராஜனை மலைப்பாம்புகண்டதுகாண்
தாராமுக்கண்மலைப்பாம்பு சந்தோஷமாகவேதான்
மனதுமிகக்குளிர்ந்து மதகரியானருகில்வந்து
வாயைத்திறந்துமங்கே மதவீமனையெடுத்து

அண்ணனைத்தேடிப்போ அழைத்தோடி வாராயோ
ஓடியழைத்தமே ஒருநொடியில் வாராயோ
கண்டு அழைத்துமே கடுகெனவே வாராயோ
அப்போது அருச்சுனனும் அழகனேதுசொல்வான்
அப்படியேபோய்வரேன் அடியேன்சரணமென்று
சரணஞ்சரணமென்று சாய்த்தான் திருமுடியை
பூக்கால்வலர் வந்து பூவொருக்கால்தெண்டனிட்டான்
போகவிடை தாருமென்ன போர்விஜயன் தெண்டனிட்டா
போய்வாருமென்றுசொல்லி போகவிடைகொடுத்தார் [ன்
விடைபெற்றெழுந்தார் விஜயபெருமானும்
ஜல்லடங்கள்தான்போட்டு கட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பில்லைமுதாடு பிசுவெடுத்தலொட்டியாணம்
பட்டுதட்டி கட்டியல்லோ பாளாவுந்தான்சொருகி
அர்புலில்லுந்தானெடுத்து அருச்சுனன்வாரானே
காடுசெடி தாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுசுனை தாண்டி பாகிவனந்தான்தாண்டி
சில்லென்ற காவிற்செடியுமலைதான்தாண்டி
காலடியைத்தேடியல்லோ கடிகிபோதானவருவான்
பாரவனங்களிலே பார்த்திபனைவாரானே
அவ்வனத்திலேகனிகள் அனேகம்பழுத்திருக்கும்
கண்டானே அர்ச்சுனனும் காவலனுமேதுசொல்வான்
காலடியைக்கண்டோமே காவலனைக்காணோமே
எங்கிலுங்காணோமே இயலானவீமனைத்தான
கூவியழைப்போமே வென்றல்லோ கொற்றவனும்
அண்ணாவீமாவென்று அழைத்தானே வாள்விஜயன்
கூவியழைக்கவுமே குரல்கேட்டுவீமனுக்கு
அருச்சுனனைத்தேடி அழைக்கிறாரென்றுசொல்லி
மாமுடியான் மகவீமனேதுசொல்வான்
காளையருச்சுனரே கடுங்காளை தூரநில்லும்
அருகேநீவாராதே அருச்சுனரே தூரநில்லும்
கிட்டநீவாராதே எட்டநில்லும் அருச்சுனரே

போய்வருமென்றனே போக்கடங்கா வீமனவன்
அவ்வார்த்தைதான் கேட்டு அருச்சுனன் துயரமுற்று
கண்ணீரைச் சொரவிட்டு காளையருச்சுனனும்
மெத்தச்சலித்துமே விசாரம்பெரிதாகி
அண்ணாவே பெரியவீமா அடியேனொருவார்த்தை
பாம்பின் வயிற்றிலே நீர் பார்வேந்தர் மாண்டதுவும்
அரவத்தின் வயிற்றிலே நீர் ஆணழகா மாண்டதுவும்
அண்ணன் தருமருடன் அடியேனொருவார்த்தை
உரைத்தேனேயானக்கால் உள்ளமிகப்பதறி
துள்ளிப்பதைத்துயிரை துடிதுடித்துவிட்டிடுவார்
எப்படிக்கு நானுரைப்பேன் என்னுடைய அண்ணாவே
போகமனம்வருமோ போர்வேந்தே அண்ணாவே
உன்னைவிட்டுநான்பிரிந்து உயிருந்தரிப்பேனோ
இப்பெரியபாம்புதனை இட்சணத்திற்கொன்றிடுவேன்
வயிற்றைக்கிழித்திடுவேன் வந்துவிடுமண்ணாவே
என்றுமெழுந்தானே எழில்சேருருச்சுனனும்
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக்குணத்தொலித்து
அப்புறத்தூணிமேலே அஸ்திரமெடுக்கையிலே
பாரமலைப்பாம்பு பார்த்தது அருச்சுனனை
கானமலைப்பாம்பு கண்டது அருச்சுனனை
அப்போமலைப்பாம்பு ஆவலுடன் ஓடிவந்து
அருச்சுனனைத்தான்பார்த்து அருகில்வந்துவாய்திறந்து
வாள்விழுங்கப்பார்த்து வாயைத்திறந்துவந்து
எடுத்துவிழுங்கிற்று இயலாமருச்சுனனை
பார்த்தனெனும் அருச்சுனனைப் பாம்புவிழுங்கியது
எடுத்துவிழுங்கியது ஏப்பம்விடுத்தானிருக்கும்
அப்போது வில்வளைத்த அருச்சுனனும் ஏதுசெய்தான்
அரவந்தன் வயிற்றில் அருச்சுனனுள் விழுந்தான்
அண்ணாவே அண்ணாவே அடியேனும் வந்துவிட்டேன்
உந்தனுடனாக வந்துவிட்டேனண்ணாவே
நானுமிங்கேவந்துவிட்டேன் நலம்பெரிய அண்ணாவே
அண்ணன் தர்மருக்கு ஆர்போயுரைப்பார்கள்

எழுத்தப்படியல்லோ இருவருக்கும்பாகுருச்சு
என்செய்வேனென்செய்வே னென்றுபுலம்புகையில்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
வில்விஜயாவேந்தன் விதித்தவிதியிப்படியோ
என்றாயிருவருமா யிருந்துபுலம்புகிறார்
ஆகேசநெடும்பொழுது ஆனபிறகாக
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
தம்பி நகுலா நீ தாமமுடியானே
வெற்றிமதயானை வீமனைத்தான்தேடி
போனதோ ரருச்சுனரை பின்னேவரக்காணேனே
இன்னம்வரக்காணேன் ஏதொன்றும்நானறியேன்
ஆரோடேசண்டைகள் ஆமரதுசெய்கிறரோ
இக்காட்டுராட்சதர்கள் எத்தனையோகோடியுண்டு
எவரோடேசண்டை யிடுகுருரெனறறியேன்
காணவும்போறேனே கட்டழகா தம்பியரை
பார்க்கவும்போறேனே பார்மன்னரிருவர்களை
தேடியழைத்து சீர்நகுலாவருவீரோ
பார்த்து அழைத்துப் பரிநகுலாவருவீரோ
என்றுரைத்தவர் எண்ணமிட்டுக்கொண்டிருந்தார்
இவ்வார்த்தைதானகேட்டு எழுந்தான் நகுலனுமே
பட்டுதட்டுடையாணைப் பசும்பொன்னுற்சமுதாடு
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளப்பூச்சல்லடமாம
தாக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்போட்டல்லவோ தட்டிவரிந்துகட்டி
கட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
தனுவையுதங்கட்டோடு தானெடுத்துச்சீர் நகுலன்
காடுசெடிதாண்டி கரியமலைதான் தாண்டி
செந்நாய்புலிகாடி சிறுபவனந்தாண்டி
காலடியைப்பார்த்துமல்லோ கடுகியேதேடிவாரான்
அக்கானகந்தனிலே ஆராய்ந்துதேடினன்
அண்ணாவேயெனவீமா அருச்சுனாவென்றழைத்தான்

கூவியழைத்தானே கோடை நகுலனுமே
அழைத்ததால் கேட்டதங்கு அருச்சுனற்றும் வீமனுக்கும்
வெற்றிமதயானை வீமனுமே யதுசொல்வான்
ஆணுலழகுமன்னன் அருச்சுனனுமே யதுசொல்வான்
தம்பிநகுலா நீ தாமமுடியானே
அண்ணனையும் என்னையும் அரவம் விழுங்கினது
மலைப்பாம்புக்கிரையானோம் மன்னவனே தம்பியரே
கிட்டி நீவாராதே எட்டிநில்லுமென்பிறப்பே
சேர நீவாராதே தூரநில்லுமென்பிறப்பே
அண்ணருக்குச்சொல்லும் அரவம் விழுங்கினதாய்
அஸ்தினாபுரத்துக்கு அண்ணனைக்கூட்டிப்போய்
திரியோதனனுடனே செய்திகள் சொன்னாலே
அருச்சுனனை வீமனை அரவமுழுங்கிற்றென்றால்
மெத்தமகிழ்ந்திடுவான் விஷநாகங்கொண்டவனும்
தருமாபுரமுள்ளதெல்லாம் தருமனையனுமென்பான்
எப்போதும் போல நீங்க ளிராச்சியத்தையாண்டிடுங்கள்
நாங்கள்-இனிபிழைப்போமென்று எண்ணாதே தம்பியரே
போங்காணும் நகுலா நீ புத்தியுள்ள கண்மணியே
இவ்வார்த்தைதான்கேட்டு யதுசொல்வான் நகுலனுமே
அண்ணரே நீர்களும் அரவத்தைக்கொல்லுகிறேன்
வெட்டியெறிகிறேன் வெளிப்படுங்கள் அண்ணர்களே
உங்களைவிட்டெனக்குப் போகவுளமவருமோ
விட்டுப்பிரியவே வேறுமனம் வருமோ
அண்ணருடவயிறதில் அனலைச்சொரிவேனோ
இருவரைப்போய்ச்சொன்னாலே சீயனைவிட்டிடுவார்
யாள நினைப்பாரோ மதுவேடுவனுவிதம
போகமனமவருமோ புண்ணியமானத்தனுக்கு
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
நீ-தலையிலெழுதினதைத் தள்ளிவைக்கப்போமோ
நீர்-வட்டிலெழுதினதை யெடுத்தெறியப்போமோ
வரும்வினைகள் வந்தாலே படியேதவேண்டாமோ
ஆயனெழுத்தவ்வளவு ஆசையால் மாண்டுவிட்டோம்

இனிநாம்பிழைப்போமோவென் றெண்ணாதே தம்பியரே
மற்று பிழைப்போமென்று மன்னவனே யெண்ணாதே
போடா நகுலா வென்று புகன்றானருச்சுனனும்
செப்புமொழிகேட்டு சீறாய்நகுலனுமே
இப்பாம்பைவெட்டி யெறிகிறேனிப்போது
பாம்புதனைக்கொல்வேனென்று பட்டாவுருவிநின்றான்
பார்க்குது அப்பாம்பு பாராமுடிமன்னவனை
கண்திறந்துபார்க்குது கடுமையப்பாம்பு
வாயைத்திறந்தவனை வாய்விழுங்கினது
பாம்பின்வயிற்றிலேதான் பரிநகுலன்போய்விழுந்தான்
அண்ணாவேயென்னையும் அரவம்விழுங்கிற்றென்றான்
எனையுங்கூட எடுத்துவிழுங்கிற்றென்றான்
உங்களுடனே ஒருவனுஞ்சேர்ந்தேனென்றான்
மூவருக்குமோரெழுத்தாய் முடிந்ததே யென்னசெய்வோம்
அண்ணனைத்தம்பியரே ஆரணங்கையைவிட்டோம்
என்றுபுலம்பியே இருக்கின்றவேளையிலே
வில்லவிபார்த்தவுடனே வீமனுமங்கேது சொல்வான்
அப்போதேசொன்னேனே தப்புவருமென்று சொல்லி
என்வார்த்தைகேளாமல் இங்கே வந்தீர் தம்பியரே
வந்துவிட்டதனாலே வல்வினையைக்கண்டோமே
என்றுமவர்கள்சொல்லி இருந்துவிசாரமிட்டார்
இப்படித்தனக்கவரிருக்கின்றவேளையிலே
அதேநகரமுற்றிசென்றபின்பு அழகான தர்மலிங்கம்
மெத்தவிசாரப்பட்டு வெதுவாய்மனங்கலங்கி
சகாதேவனைப்பார்த்து தருமருரைக்கலுற்றார்
வீமனுடனிப்பரிக்கப்போய் வெகுநேரமாச்சுதப்பா
அழைக்கப்போனவரையுமென்று அருச்சுனனைப்போகவிட்டேன்
அருச்சுனன்தேடிப்போய் அதேநாழிகைபோதாச்சு [ன்
போனதோரருச்சுனனும் பின்புவரக்காணேனே
நகுலனைப்போகவிட்டு ராஜாக்களைப்பாருமென்றேன்
காளைநகுலனுமே திரும்பவரக்காணேனே
செத்தாரோபிழைத்தாரோ செய்தி தெரியவில்லை

மாண்டாரோ மானரியென் மன்னவனேயென்னசெய்வே
ஆரோடேசண்டை அமரதுசெய்கிருரோ [ன்
எவரோடேசண்டை ஏடாகூடங்களுண்டோ
அவர்களைப்பார்த்து நீ யழைத்தோடிவாராயோ
ஓடியழைத்து நீ ஒருநொடியில்வாராயோ
கண்டுஅழைத்து நீ கூடுகெனவேவாராயோ
அண்ணருரைகேட்டு அழைத்துமேவாராயோ
அப்போசகாதேவன் ஆணழகன்தானெழுந்து
சல்லடங்களிட்டுமெல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைதொங்கவிட்டு
ஆயுதந்தானெடுத்து அடைவாய்நடக்கலுற்ருன்
காலடியைத்தேடியேதான் கடுகநடுக்கலுற்ருன்
காடுஞ்செடியுங் கனத்தமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையு மதிகவனந்தான்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தான்தாண்டி
தேடியேவாரானே திசைதோறுங்கானகத்தில்
எங்கெங்குந்தேடினுனே இனியவிடமாராய்ந்து
கண்ணாலேகண்டதில்லை காளைகளானவரை
பாராவிடங்களில்லை பாரமுடிராஜர்களை
தேடியேவந்துமவன் திகைத்தாற்போல்நின்றுவிட்டான்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வந்தருளும்
அண்ணுமதவீமா அருச்சுனரேசீர்நகுலா
என்று-கூவியழைத்தானே கொற்றமன்னவீரியனும்
கூவியழைத்தகுரல் கேட்டதுமூவருக்கும்
ஏன்காண்சகாதேவா எங்குவந்தீர்தம்பியரே
அரவம்விழுங்கினது ஆணழகாமூவரையும்
தூரநில்லுந்தம்பியரே சேரநீவாருதே
எட்டநில்லுந்தம்பியரே கிட்டநீவாருதே
அரவம்விழுங்கினதாய் அண்ணருக்குச்சேதிசொல்லும்
நீ-அழுதுபுலம்பாதே அண்ணரைக்கூட்டிப்போய்
அஸ்தினபுரிக்கு அடவுடனேபோய்ச்சேரும்

வீமனருச்சுனனை மிக்கநகுலனையும்
அண்ணமார்மூவரையும் அரவம்விழுங்கினதாய்
திரிபோதிரனுடனே செய்திநீசொன்னாலே
சந்தோஷமாவானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்திடுவான் விஷநாகக்கொடியவனும்
தருமாபுரத்தையல்லோசர்ப்பக்கொடியேன்கொடுப்பான்
சேனை தருவானே சிறந்ததுரைத்தனமும்
பூமிதருவானே பொல்லாச்சுயோதனனும்
அண்ணனும் நீருமே அவ்வாசையாண்டிருங்கள்
போங்காணுந்தம்பியரே புகழ்பெரியராஜாவே
என்றுமவருரைத்து இருக்கின்றவேளையிலே
இவ்வார்த்தைதான்கேட்டு இளையசகாதேவன்
அண்ணருரைகேட்டு ஆணழகனேதுசொல்வான்
மன்னனுரைகேட்டு மறுவார்த்தையேதுசொல்வான்
போயுரையுமென்றுசொல்லி புண்ணியரேசொன்னீர்கள்
புகழ்வேந்தாண்ணருக்குப் போய்நானுரைத்தாக்கால்
சொன்னேனேயாமாகிற் சொர்க்கபதிசேர்ந்திடுவார்
இவ்வார்த்தைதான்கேட்டு இன்னமிருப்பாரோ
மூவரைப்பறிகொடுத்து முடிசூட்டியாளுவரோ
அவமேசெத்துமடிந்திடுவார் சிவலோகஞ்சேர்ந்திடுவார்
பாணம்மடிந்திடுவார் வைகுந்தஞ்சேர்ந்திடுவார்
சென்றுயான்சொன்னாலே சீவன்விடுவாரே
துடித்தபுழுப்போலே துள்ளிவிழுவாரே
அடித்தமயில்போலே அலறிவிழுவாரே
சாகத்துணிவாரே தர்மலிங்கஅண்ணனும்
போகத்துணிவாரே பொறுமையுள்ளதர்மலிங்கம்
எப்படிக்குப்போயுரைப்பேன என்னுடைய அண்ணர்களே
என்றுசகாதேவன் ஏங்கிப்புலம்பலுற்றான்
அடியற்றமரம்போலே அலறிப்புரண்டழுவான்
மலைபோலப்பருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலையேபருவதமே செத்துமடிந்தீரோ
உங்களைப்பறிகொடுத்து ஒருத்தனாய்ப்போவேனோ

அண்ணர்களேயென்றுசொல்லி அலறிப்புலம்பினன்
அழுதகுரல்கேட்டு அம்மூவரேதுசொல்வார்
தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறீரோ
ஏட்டிலெழுதினதை எடுதெறியப்போறீரோ
ஈசனெழுதியதில் எள்ளளவுங்குறையாது
சொல்லாதேதம்பி நீ சுருக்காயெழுந்திரென்றார்
பேசாதேதம்பி நீ போய்பிழையும்வையகத்தில்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான்சகாதேவன்
உங்களைப்-பார்த்துநடக்கவேதான் பாவிமனம்வருமோ
கண்டுநடக்கவேதான் காலேமனம்வருமோ
பொறுத்துநடக்கவேதான் போகமனம்வருமோ
இப்பாம்பைக்கொன்றிடுவேன் இயலானராஜர்களே
பாம்புதனைக்கொல்லுகிறேன் பாருமென்றுவாளெடுத்தா
என்றுவுருவினன் இளையசகாதேவன் [ன்
கத்திவுருவையிலே கண்டது அப்பாம்பு
கண்டதுமலைப்பாம்பு கணிதநூற்கோமானை
வாயைத்திறநதது வாரிவிழுங்கினது
எடுத்துவிழுங்கினது இளையசகாதேவனையும்
அப்போசகாதேவன் ஆணலழகுமன்னன்
என்னையும்விழுங்கினது என்னுடையஅண்ணாவே
உங்களுடனொரு ஒருவனும்வந்துவிட்டேன்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகரேதுசொல்வார்
என்வார்த்தைதள்ளி இருந்தியேதம்பியரே
நால்வருக்கும் ஒழுத்து நான்முகனெழுதிவைத்தான்
அண்ணர்தர்மராஜாவை அல்லவருங்கைவிட்டோம்
ஆட்டிடைகோபனதைனய அரிவையரைக்கைவிட்டோம்
என்றுபுலம்பியேதா னிருந்தார்கள் நால்வருமே
அநேகநெடுநேர மானபிறகாக
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
அன்னமேசொர்ணமே அமிர்தப்பசுங்கிளியே
தேனேமடமயிலே தித்திக்குந்தெள்ளமுதே
கன்னல்மொழியாளே கற்கண்டேசர்க்கரையே

சாந்துகமுழ்த்தியரே சந்தனப்பூமேனியரே
கோரவைக்கழுத்தியரே குங்குமப்பூமேனியரே
குங்குமப்பொட்டுத்தொரு கொப்பேரிடையாளே
நெருப்பிற்பிறந்தபெண்ணே நீலவண்ணன் தங்கையரே
கைமோசம்வந்ததுவே கண்மணிகளைக்காணேன்
போகவழியறியேன் புதுமைகளொன்றறியேன்
செத்தார்பிழைத்தாரோ சேதியொன்றும்நானறியேன்
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைநானறியேன்
கடுகியெழுந்திருங்காண் கானகத்தில்தேடுவோம்
என்றுபுலம்பி எழுந்தாரிருவருமாய்
காலடியைப்பார்த்துமே கடுகியேவாரார்கள்
தேடியேவாரார்கள் சிரானகானகத்தில்
அப்போமதவீமா அழகாமருச்சுனரே
தாமமுடி நகுலா தம்பிசகாதேவனெனக்
கூவிப்புலம்புகையில் குரல்கேட்டுதம்பியர்க்கு
அண்ணன்குரல்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
என்காணும்அண்ணாவே இடையநில்லுமென்பிறப்பே
சோரநீவாராதே தூரநில்லுமென்பிறப்பே
அருகேநீவாராதே அண்ணாவேதூரநில்லும்
பாம்புவிழுங்கினது பாரவனந்தனிலே
இங்கேயலைப்பாம்பு எடுத்துவிழுங்கினது
நால்வருக்குபோமெழுத்து நான்முகனெழுதிவைத்தான்
உன்-அங்கஞ்சலியாதீர் அழுதுபுலம்பாதீர்
இனிபிழைக்கப்போமென றெண்ணாதே அண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானதர்மலிங்கம்
துள்ளிப்புலம்புகுறர் சொன்னதெரியாமல்
வெற்றிமதயானை வீமாமதகரியே
எழுபிராயத்தில் இடும்பனைக்கொன்றாயே
பத்துப்பிராயத்திற் பகாசுரனைக்கொன்றாயே
அரக்குமாமாளிகையி லெவரையும் நீயெடுத்தாய்
ஐவரையு நீயெடுத்தாய் அந்தபலனடங்கி
பாம்புக்கிரையாக இருந்தீரோபார்வேந்தா

எழுபதுலக்ஷயானை இழுக்கவொண்ணுக்கெதையெடுத்
அமரதுசெய்கின்ற ஆண்மையுள்ளவீமா நீ [அ
மலைப்பாம்பைக்கொல்லுதற்கு மறந்தாயோவீமா நீ
சந்தனமிருபுயத்தை சாற்றுயோபூமியிலே
குங்குமமிருபுயத்தை கொள்ளையென்றுசாற்றுயோ
கல்லானதூணை கரையான் அரிக்குமோதான்
இரும்பானதூணும் இத்துவிழுமோதான்
நீமடியுங்காரியத்தை நிண்ணயத்தையானறியேன்
ஆச்சாபருவதமே அழிவில்லையென்றிருந்தேன்
ஆச்சாபருவதமும் அழியும்நாளாச்சுதோ
கற்பகத்தூணுக்குக் கலக்கமில்லையென்றிருந்தேன்
கற்பகத்தூணுங் கரையுநாளாச்சுதோ
என்னையலையவிட்டு இப்பாம்புக்கிரையானுய்
நூலார்கடுந்திரளார் நூறுபேர்மன்னர்களை
கொல்லுவேனென்றுசொன்ன கொடியசபதமெல்லாம்
மறந்தாயோதம்பி நீ மலைப்பாம்புக்கிரையாக
என்னைமறந்து நீ பிறந்துவிடஞாயமுண்டோ
என்றுபுலம்புகிறுர் இயலானதருமருமே
மாரடித்துதோளடித்து மண்மேல்விழுந்தலறி
களைத்துவிழுந்தாரே கட்டழகர்மூர்ச்சையானுர்
அப்போதுரோபதையும் ஆரணங்குஏதுசெய்தாள்
பச்சைத்தழையொடித்துபைங்கிளியாள் துரௌபதையுங்
காட்டுத்தழையொடித்து கடுகெனவேவீசலுற்றுள்
வீசினுள் தருமருக்கு விடாய்கள்மிகத்தெளிய
வீசக்களைதெளிந்து வேந்தர்புலம்புகிறுர்
அப்பாடா அப்பாடா ஆணழகாதம்பியரே
காளையருச்சுனு கடுங்காளைசேவகனே
எடுக்காதவில்வளைத்து இளங்கொடியைமாலையிட்டாய்
நீராபார்த்துமீனெய்தாய் நிற்றிலங்குபூமுடியாய்
அழகில்மிகுந்தவரே அருச்சுனுதம்பியரே
நீமடியுங்காரியமும் நிண்ணயமும்நானறியேன்
இடதுபுயமான இயலான அருச்சுனரே

என்னைமறந்தீரோ இப்பாம்புக்கிரையாக
உங்களைமடியவிட்டு ஒருநாழிகையிருப்பேனோ
கூடமடிந்திடுவேனை பெற்றவரேஉங்களுடன்
நானுமடிந்திடுவேன் ராஜர்களேஉங்களுடன்
அங்கமுருகுதையோ ஆவிதணலாகுதையோ
நெஞ்சகந்தனிலேயே நெருப்பாயெரியுதிப்போ
ஈரலுக்குள்ளே இருந்துதணல்பத்துதடா
குடலினுள்ளேயல்லோ குடவிளக்காயெரியுதடா
மனதுதரிக்கவில்லை வயிற்றெரிச்சல்தீரவில்லை
உங்களைப்பரிகொடுத்து உலகத்திலிருப்பேனோ
நானுமடிந்திடுவேன் ராஜர்களேஉங்களுடன்
உங்களைப்பொசித்தபாம்பு எங்களைப்பொசியாதோ
உன்னைப்பொசித்தபாம்பு என்னைப்பொசியாதோ
என்றுமனந்தளர்ந்து எழுந்தாரேதருமலிங்கம்
மலைப்பாம்புதன்னருகே வந்துதலைகொடுத்தார்
இரங்கினார்தருமலிங்கம் என்னையும்விழுங்குமென்றார்
தாராளமூக்குமலைப்பாம்பு தள்ளிவிடுகுது
எதிரேவந்தாலும் இடைந்துவிடுகுது
பக்கத்திலவந்தாலும் பார்த்துமேபோய்விடுது
தக்கபுகழுடைய தருமராவருரைப்பார்
சமர்த்தான மலைப்பாம்பே தம்பியரைவிழுங்கிவிட்டாய்
என்னைவிழுங்குமென்று எதிரேநான்வந்தாலும்
என்னபாவஞ்செய்தேனோ என்னைவிலக்கிவிட்டாய்
எதாலும்பாவிநான் இருந்தாலுமாகாது
ஐயோவெனத்தருமர் அழுதுபுலம்புகிறார்
ஐயோமுறையோவென்று கூவிப்புலம்புகிறார்
தோபாவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
ஆண்டவரேஐயாவே அழகுள்ளதருமரே நீர்
மாயவரைத்திரும்பிப்போ மனதில்நினையுமென்றாள்
எம்பெருமாள்வந்தாலே எல்லாந்தெரியுமென்றாள்
அப்போதுதருமருக்கு அந்தநினைவுவந்து
அவ்வார்த்தைதானகேட்டு அழகானதருமலிங்கம்

மாயனைத்தானினைந்து வருந்திப்புலம்புகிறார்
மாயன்பெருமாளே வந்தருளவேண்டுமையா
ஆலிலைமேற்பள்ளிகொண்ட ஆதிமூலம்வாருமையா
பாற்கடலிற் பள்ளிகொண்ட பாளத்தார் எம்பெருமாள்
மச்சவடிவுகொண்ட மாயவரே நின்சரணம்
கூர்மவடிவுகொண்ட கோபாலா நின்சரணம்
கல்லான அகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தீர்
எல்லையளந்தீரே எதிரில்லையென்றீரே
மூலமென்றகுஞ்சரத்தை முகில்வண்ணா காத்தீரே
இராமராய் நீபிறந்து இராவணனைச்சங்கரித்தீர்
இலங்கையழித்தீரே இராட்சதரைவென்றீரே
அரக்குமாமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பலவாசலிலே ஐவரையுங்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறிவார்
தஞ்சமென்றபஞ்சவரைத் தற்காக்கதெய்வமல்லோ
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோனோமையா
கையில்செபமாலை கணக்குலைந்துபோனோமையா
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோனோமையா
இத்தனைநாள்காத்தீரே இன்றல்லோமாண்டுவிட்டோம்
ஏழையழுதகண்ணீர் கூரியவாள்தப்பாது
நானழுதகண்ணீரும் ரம்பங்கொண்டறுக்காதா
வாரீரோகிருஷ்ணா என் மனத்துயரந்தீராயோ
என்று-அபயம் அபயமென்று அழுதுபுலம்புகிறார்
தோராவடிவழகி துரோபதையாளேது சொல்வாள்
அண்ணாமணிவண்ணா அடியேனுக்குதவிசெய்வாய்
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன் பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்தேன் தலைவிரிக்கநாளாச்சே
ஐவரிட்டமங்கிலியம் அழிவில்லையென்றிருந்தேன்
மங்கிலியந்தானிருந்து மண்ணில்விழநாளாச்சே
ஆரைக்கழுத்தி யரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குரைக்கழுத்தியானேனே

செல்வங்குலைந்துதான் சீருமழிந்தேனே
ஐவருங்கைவிட்டாரே அலைந்துவிடநாளாச்சே
மக்கிலியப்பிட்டைநீ தாராயோமன்னவரே
எனதுகுறையைத்தீராயோ இங்கேநீவாராயோ
அப்பக்குரலிட்டுமங்கே அழுதாள்துரோபதையும்
மார்கொண்டகண்ணீரை வழித்தெறிந்தாள்மண்மேலே
அப்போதுமாயவரும் ஆதிமூலர்தானறிந்தார்
அழுதகுரல்கேட்டு ஆயன்பெருமாளும்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
பெட்டியிலேபூஷணம் பெருமைகுலையுதே
தோளிற்செபமாலை தோடவிழ்ந்துபோகுதே
கையிற்செபமாலை கணக்குலைந்துபோகுதே
வருந்திப்புலம்புகிற மனத்துயரந்தீர்க்கவென்று
அழுதுபுலம்புகிற அதத்துயரந்தீர்க்கவென்று
ஏழைகள்தன்துயரம் தீர்க்கவென்றுஎம்பெருமாள்
வாரார்பெருமாளும் வட்டமாக்கருடனேறி
துவாரகாபுரியைவிட்டு சுவாமிவாவாராரே
காடுஞ்செடியுங் கரியமலைதான்தாண்டி
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
செங்குவிருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
பாதிரிமுல்லை பருத்தவனந்தானதாண்டி
இல்லெனறகாடுஞ் செடிபுலவனந்தான்தாண்டி
மூங்கில்படர்ந்திருக்கும் முல்லைவனந்தான்தாண்டி
சூரியனைத்தன்வனத்தைச் சுருக்காகத்தான்தாண்டி
இராமபரிஷிவனத்தில் இராமருபவந்துவிட்டார்
மாயன்வருகிறதை வழியிலேதான்பார்த்து
தருமரும்துரோபதையும் தாமெதிரேஓடிவந்தார்
தருமருந்துரோபதையுஞ் சரணமிட்டார்மாயவரை
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
அறுகால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
சிங்காதனம்போட்டு ஸ்ரீராமர்தானிருக்க

ஆசனம்போட்டார்கள் அரிராமர்தானிருக்க
இட்டசிங்காதனத்தில் எம்பெருமாள் வீற்றிருந்தார்
மாயன்பெருமாளும் வாய்த்திறந்தேதுசொல்வார்
அடியனுத்தமாயவரும் ஆதிமூலமேதுசொல்வார்
அழுதகுரலேது அழைக்கவந்தகாரணமேன்
வேண்டியழைத்த விபரமென்னசொல்லுமென்றார்
வருந்தியென்னையழைத்த வகையதனைச்சொல்லுமென்றார்
வீமரருச்சுனர்கள் வேந்தர்களெங்கேயென்றார்
தம்பிமார்நால்வர்களுந் தார்வேந்தேயெங்கேயென்றார்
அழுதுபுலம்புவதேன் ஆரணங்குதுரோபதையும்
எதுக்கழுதிர்களெனக்கரியச்சொல்லுமென்றார்
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
தம்பிமார்நால்வரையும் சர்ப்ப விழுங்கிற்றென்றார்
என்னையழைத்தவகை யெனக்கரியக்கூறுமென்றார்
தாராமூக்கன்மலைப்பாம்பு தானும்விழுங்கிற்றென்றார்
தம்பியரைப்பறிகொடுத்து தரிப்பேனோபூமியிலே
மலையைப்பறிகொடுத்து மண்மேலிருப்பேனோ
அங்கம்பொறுக்குமோ அரிராமாயென்னசெய்வேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
ஆகையினாலேதான் ஆண்டவரேயுமையழைத்தேன்
என்றுரைக்கத்தான்கேட்டு எம்பெருமாளேதுசொல்வார்
எழுத்துவிதிதன்னை எவரால்விலக்கவசம்
தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறாரோ
எட்டிலெழுதினதை எடுத்தெறியப்போறாரோ
அன்றெழுதுங்கீர்த்தால்லோ அழித்தெழுதப்போறாரோ
இட்டபடியொழிய எள்ளளவுங்குறையாது
வரும்வினைவந்தாலே மடியேந்தவேண்டாமோ
ஆராலேயாகுமிது ஆயுசுக்குக்கதருண்டோ
எவராலேயாகுமிது இவர்களைத்தானெழுப்ப
என்னாலேயேதாகும் இயலானதர்மலிங்கம்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வார்தர்மலிங்கம்

என்னாலேயாகாதென் றேனோகழித்துவிட்டீர்
உபமாலேயாகாத தொன்றுண்டோவையகத்தில்
எல்லாமுமதுசெயல் என்றிருந்தேன்மாயவரே
தம்பியார்தான்பிழைக்கச் சாமிநீகண்பாரும்
உடப்பிறப்புத்தான்பிழைக்க உத்தமரேகண்பாரும்
என்பிறப்புத்தான்பிழைக்க எம்பெருமாள்காத்தருளும்
கண்பாரிவ்வேளையெனைக் கண்ணனையுந்தெண்டனிட்டார்
புண்ணியமாய்ப்போகுமென பெருமாளைத்தெண்டனிட்
அப்போதுரோபதைதாளாரணங்கதுசெய்தாள் [டார்
மூத்தாணியேத்திநின்றாள் முருகுழலாள் துரோபதையும்
மங்கிலியபிட்சையல்லோ மாயாவெனக்கருளும்
வாடாதமங்கிலியம வலவாவெனக்கருளும
என்றுமவள் சொல்லி இளங்கொடியாளதுரோபதையும்
மாயனுடபாதத்தை வணங்கித்தொழுதுநின்றாள்
இவ்வார்த்தைதானகேட்டு எம்பெருமாள்மனமிரங்கி
அக்குப்பெருங்கிருஷ்ணன் ஆயரிருகையிலே
மின்னலொளிபோலே சுவாமிவடிவுகொண்டார்
மங்கைபாப்படுகன்செவியில் மாயவருமபோய்நுழைந்தார்
அருச்சுனனவில்நாணிதனை அழுத்தாமேமாயவரும்
வில்நாணிதானறவே விலநிமிர்ந்துவாய்கிழிந்து
நகுலன்சகாதேவன நலவிஜயன்வீமனுமே
ராமரிஷியுடனே நன்றாய்வெளிப்பட்டார்கள்
ஐவருமாகவெதா னப்பாம்பில்வெளியானார்
மாயனபெருமானை வந்துநமஸ்கரித்தார்
தக்கப்புகழுடைய தருமருக்குத்தெண்டனிட்டார்
தக்கப்புகழுடைய தருமரவாபார்த்து
வாழ்த்திமனமகிழ்ந்து மன்னன்தர்மராயருமே
மனதுகுளிர்ந்தாரே மகாராஜாதர்மலிங்கம்
துரோபதையுநாயகியுஞ் சிந்தைமிககுளிர்ந்தாள்
மலர்ந்தசெந்தாமரைப்போல மனதுமிகக்குளிர்ந்தார்
அலர்ந்தசெந்தாமரைப்போல அகமுமிகக்குளிர்ந்தார்
ராமரிஷியார்க்கு நற்காட்சிதந்தாராம்

மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
இந்தவனததாண்டி இனியவனம்போங்களென்றார்
அபபோதுதர்மலிங்கம் ஆயரைப்பார்த்துரைப்பார்
இந்தாஷியாரு மிக்குவந்தகன்மமென்ன
வந்தகன்மமத்தனேயும் வாய்திறந்துசொல்லுமென்றார்
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
இந்தாஷிகாரியத்தை இயமபுவேன் நீர்கேளும்
மாயாண்டிதன்னடியார் வந்தால்வணங்குவர்காண்
எந்தனடியாரகள்வந்தால் இகழ்ச்சிகள்பண்ணுறது
ஏடாகூடங்கள்பண்ணி எட்டியடிக்கிறதும்
இப்படியாகவே யிருந்தார்வெகுகாலம்
அப்போதுநானொருநா ளங்கேவடிவெடுத்தேன்
தாகவடிவெடுத்து உப்புகொட்டிபிச்சையென்றேன்
அரிகரிராமாவென்று ஐயாவேபிட்சையென்றேன்
அப்போதுராமாஷி அவசரமாயோடிவந்து
எனனையடிததாரே இயலானராமரிஷி
அடிபட்டுக்கொண்டதொரு ஆக்ருஷயானதினல்
நானபட்ட அடியாலே இட்டேன்பெருஞ்சாபம்
அப்போதுராயரிஷி ஆயரேயென்றழுது
வல்லானராமரிஷி வாய்திறநதுயேதுசொல்வான்
என்சாபமெப்போது தொலையுமையாசுவாமியென்றான்
ஐவர்பஞ்சபாண்டவர்க ளாரணியம்வந்தாக்கால்
நாலுபேரையெடுதது நனருய்விழுங்கிடுவாய்
அப்போதுவுன்சாபம அடவுடனே தீர்த்திடுவேன்
எனறுயவாக்குரைத்து என்பதிக்குப்போய்நடந்தேன்
அபபோதிட்டசாபமது இப்போதொலைந்ததுகாண்
நீங்களிந்தவனத்தைவிட்டு இனியவனம்போங்களென்
அப்போது மாயபெருமாள் அரிராமர்தானெழுநதார் [று
ராமரிஷிஐவர்களும தங்கைதுரோபதையும்
எம்பெருமாள்மாயவற்கு எல்லோருந்தெண்டனிட்டார்
பஞ்சவாகளைவருக்கும பாஞ்சாலிதுரோபதைக்கும்
மாயன்பெருமாளும் மனங்குளிரவாழ்த்தியபின்



சயிந்தவன் துரோபதையை எடுத்துத் தேர்மீது சென்றுபோகுதல்.



சயிந்தவனை பாண்டவர் அவமானஞ்செய்தது.

எந்தவனங்களிலே இடராவந்தாலும்
இடராவந்தாலே எனனை நினையுங்கள்
என்றுமவருரைத்து எம்பெருமாள்போகலுற்றார்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையு மதிகவனந்தான்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெங்களாப்பூத்தவனம்
'கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
வனமாய்வனந்தாண்டி வந்துவிட்டார்மாயவரும்
துளபமணிமார்பன் துவாரகைபோய்ச்சேர்ந்தார்
சிங்காதனத்தின்மேல் ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்
மாயவனார்போனபின்பு மகாராஜர்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவரும ஆரணங்குதுரோபதையும் [ம்
மணவாபஞ்சபாண்டவரும மயிலனையாள்துரோபதையு
அந்தவனத்தி லனேகநாள்சென்றபின்பு
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
மூன்றும்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு

இரண்டாவது, சூரியவனம் முற்றிற்று.

---

## ௩-வது, முருக்கமகாரிஷிவனம்.

அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோகலுற்றார்
குடைதலையேலே குடிவாழ்க்கைகானகத்தே
கோலிவைத்தசிமாடு குடைதலைமேலேவைத்தார்
மணிவைத்தசிமாடு வனமேகுடித்தனமாய்
முருக்கமகாரிஷிவனத்தில் மூடுகிவந்தார்பஞ்சவர்கள்
அநதவனத்திலேதான் அல்லோருமவந்தார்கள்
ஓடுக்குப்பர்ணசாலை உண்டுபண்ணூர்பஞ்சவர்கள்
மூனறடுக்குப்பர்ணசாலை முடிமன்னருண்டுபண்ணூர்
ஆறடுக்குப்பர்ணசாலை ஆணழகருண்டுபண்ணூர்

ஏழடுக்குப்பர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணூர்
பர்ணசாலைமேலேயல்லோ பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
தென்னமுடிவேந்தன துரியோதனனே துசொல்வான்
சபைகள் நிறைந்திருக்குஞ் சர்ப்பக்கொடியோனும்
ஆர்காணும்ராசர்களே அழகானமன்னர்களே
முத்துக்கிரீடம் முடிசூடியமன்னர்களே
வச்சிரககிரீடந் தரித்ததொருமன்னர்களே
மாணிக்கக்கிரீடந் தரித்ததொருமந்திரிகளே
அத்தண்டபேரையுமே அனைவரையுந்தான்பார்த்து
மாநாகங்கொண்டதொரு மகாராஜனே துரைப்பான்
ஐவர்வனம்போய் அநேகமெடுநாளாச்சே
மூன்றும்வருஷமது மொழியலாமஞ்சவாக்கு
(அவர்) எந்தவனத்திலே இருக்கிறாரென்றறியேன்
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைதெரியவில்லை
ஆரடாதுவரே அங்கிருக்கும்மல்லர்களே
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருமே
வீரப்புலிபோலே வேந்தர்களைவருமே
எந்தவனத்தி லிருக்கிறாரென்றறிந்து
ஐவரும்மைப்பாராதே அறிந்தேதேடிவாருமென்றான்
காவலர்களும்மையவர் காணும்தேவருமென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்திருந்தார் தூதுவர்கள்
ஒற்றுளொருவனவனேடிஞன்காணகத்தே
காடுஞ்செடியுங் கரியமலைதாண்டி தாண்டி
ஆறுஞ்சுனையுமல்லோ அதிகவனந்தான் தாண்டி
வேங்கையடர்ந்தவனம வெண்களாப்பூத்தவனம
கோங்குபெருத்தவனம கொன்றைகளாப்பூத்தவனம்
வனமாய்வனந்தாண்டி வாரார்கள் தூதுவர்கள்
சூரியனவனத்தே சுருக்காய்நடந்துவாரார்
ராமரிஷிவனத்தே நடந்தார் நலமாக
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னர்போய் நுழைந்தார்

அந்தவனத்திலே ஐவரையுங்கண்டார்கள்
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டார்கள்
அவருமறியாமல் ஆணழகர் திரும்பிவந்தார்
காடுஞ்செடியுங் கிரியமலைதாண்டிவந்தார்
அஸ்தினாபுரம்நாடி ஆணழகர் திரும்பிவந்தார்
தென்னமுடியேந்தன் றிரியோதிரன்முன்னேவந்தார்
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றார்
தென்னமுடியேந்தன் றிரியோதிரனேதுசொல்வான்
போனீரேதூதவரேபுதுமையென்னசொல்லுமென்றான்
காளிபெரண்டவன் கடிகியேயேதுசொல்வான [ன
மூருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னரைக்கண்டுவந்தே
பர்ணசாலையேலேயல்லோ பஞ்சவரைக்கண்டோமையா
அவ்வார்த்தைகேட்டானே அரவக்கொடிவேந்தன்
சிந்தைகலங்கியே திடுக்கிட்டுமெய்மறந்து
மனமுநடுநடுங்கிட்டு வாய்திறந்தேதுசொல்வான்
இப்பெரியசபைதனிலே யிருக்கின்றராஜர்களே
அம்பலத்திலேகூடியிருக்கும் அரசர்முடிமன்னர்களே
இத்தண்ட ராஜர்களே இப்பாலானமந்த்ரிகளே
கத்திகட்டுந்துரைகளே கனத்தமுடிமன்னர்களே
ஆண்மையுள்ள துரைகளே அல்லவருங்கேட்டிருங்கள்
என்வார்த்தைதள்ளாமல் ராஜர்களேகேட்டிருங்கள்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பைங்கிளியாள் துரோபதைமே
தோருவடிவழகி துரோபதைமேலெந்தனுக்கு [ல்
ஆசையல்லோதான்காண் ஆரணங்குதுரோபதைமேல்
நினைக்கநினைக்கவேதான் நெஞ்சமுருகிடுது
ஆசையவள்மேலே ஆதரவுபாய்மேலே
சிந்தையவள்மேலே சிவன்பதைக்குதுகாண்
கன்னியர்மேலாசையல்லோகாமவிடாய்கொள்ளுதுகாண்
மயிலிணைமேலாசையல்லோ மறக்கவில்லையெந்தனுக்கு
அவளாசையினாலே பவனிவரவழைத்தேன்
வணங்குவாளென்றுசொல்லி வார்த்தைபலபேசினேனே
இணங்குவாளென்று எத்தனையோசொன்னேன்காண்

வணங்காமற்போனளே மாதுகருங்குழலாள்
இணங்காமற்போனளே ஏலாபசுங்கிளியாள், வந்திருந்
து அம்பலத்தில்வார்த்தைகள்பேசினேனங்கண், வாருமி
ருமென்றேன் மடிமேலேயேறுமென்றேன், மார்போடே
மார்பணைத்து மருவிமுத்தந்தாருமென்றேன், தோளோ
டேதோளணைத்து சேர்ந்துமுத்தந்தாருமென்றேன்
வாரும் நீதுரோபதையே வலதுதுடையேறுமென்றேன்
அவள்மெத்தப்பேச்சுகளும் அகந்தைகளும்பண்ணின
ளே, அகந்தைகள்பண்ணுகிறுள் ஆகடியஞ்சொல்லுகி
ருள், ஆகையால்துரோபதையை அடித்துநானேட்டிவி
ட்டேன், ஆரணங்கைகூடுகைக்கு ஆசைமெத்தத்தோ
ணுகுது, மயிலணையைக்கூடுகைக்கு மனதுமெத்தத்தோ
ணுகுது, அவள்மீதிலாசைகொண் டல்லவர்க்குஞ்சொல்
லுகிறேன், துரோபதையைக்கொண்டுவர துரைகளுண்
டோசொல்லுமென்றுன், பாஞ்சாலன்பெண்ணை பாவை
துரோபதையை, சிறைபிடித்துக்கொண்டுவர துரைகளு
ண்டோசொல்லுமென்றுன், கொண்டுவருவோர்க்கு கோ
டிதனந்தருவேன், அழைத்துவருவோர்க்கு ஆனைசேனை
நான்தருவேன், சீமையும்பூமியும் துரைத்தனங்கள் நான
கொடுப்பேன், ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவந்
தால், துரோபதையைக்கொண்டுவந்து தாங்குமஞ்சமே
த்திவைத்தால், பாவையரைக்கொண்டுவந்து படுக்கைம
ஞ்சமேத்திவைத்தால், என்னுடைய நாடுகளும் எழில்க
ருணன் ஆதீனம், சீமைகளும்பூமிகளும்செல்வமும்நான்
தருவேன், வல்லாண்மைக்காரருண்டோ மகத்தெழுந்
திருங்கள், வேறேதுரைகளுண்டோ புண்ணியசேனைக
ளே, பிடியுங்கள்தாம்பூலம் பெரியராஜர்களே
என்றுசொல்லத்தான்கேட்டு இப்பலராஜாக்கள்
அவ்வேளுருபபேசாய லஞ்சப்பட்டிருந்தார்
சிந்துதேசாதிபதி தீரன்மகனசயிந்தவனும
சொல்லுவான்வாய்திறந்து துறைகளறிந்திருக்க
மைத்துனரே நீகேளும் மகாராசபூபதியே

தோருவடிவழகி துரோபதைநாயகியை
பத்துநாட்டுக்குள்ளாகப் பைங்கிளியைக்கொண்டுவாரேன்
எட்டுநாட்குள்ளாக இளங்கொடியைக்கொண்டுவாரேன்
ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவாரேன்
பஞ்சவரறியாமல் மயிலனையைக்கொண்டுவாரேன்
கா பூலந்தான்பிடித்தான் தாயமுழியானும்
அத்தமொழிதனைகேட்டு அரவக்கொடியோனும்
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே வேந்தன்திரியோதனனும்
உள்ளங்குளிர்ந்துசிலிர்த்து உடம்பெங்கும்பூரித்து
அள்ளியேதாம்பூலம் ஆணழகர்கைகொடுத்தார்
போட்டிருந்த ஆபரணம்பெட்டெனவேதான்கொடுத்தா
ன், இட்டிருந்தபூஷணங்கள் இஷ்டமுடன்தான்கொடு
த்தான், பொன்னிழைத்தபட்டாடை போர்த்தானேமே
லாக, போய்வாருமென்றுசொல்லி புகழ்வேந்தன்தானு
ரைத்தான், வெகுமானம்பெற்றுமல்லோ விடைபெற்று
மன்னவனும், பயணம்பயணமெனப் பயணபேரியடியுமெ
ன்றான், ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பயணமென்
றான, ஆனையின்மேல்ஜண்டாவும் அழகுநிசானபிடியுமெ
ன்றார், ஆனையின்மேல்பேரிகையை அடியுமென்றாஓசை
யுடன், குதிரையின்மேல்டங்காவும் கொடிமுரசுசிலைகளு
ம, பாஞ்சசன்யமதேவதத்தம் பலவாத்தியமுழங்க
சச்சரிகைவீராணம் தாக்குமுரசறைய
அக்ரோணிசேனை அடங்கலும்பயணமென்றான்
அமரதரும்சமரதரும் அர்த்தரதத்தானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும காஸ்மீரககன்னடரும்
ஈழத்துவங்கணரும இளநாட்டுச்சோனகரும்
சட்டைகழட்டாத சகலவரானவரும்
போட்டசட்டைவாங்காத பொந்திலியரானவரும்
இட்டசட்டைவாங்காத எழிலானமன்னவரும்
குப்பாசம்வாங்காத குச்சிலியர்மன்னவரும்
ஆனையாசுரிமை அளவற்றவன்னியரும

வெள்ளித்தடிக்காரர் வேணலட்சங்கோடியுண்டு
மகுடமுடிதரித்த மன்னவர்களானவரும்
பட்டணத்தராஜர்களும் பார்மருடவர்த்தனரும்
அத்தனைபெயருடனே ஆணழகன்பயணமானான்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளப்பூச்சல்லடமாம்
சல்லடங்களதான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டித் தாமரைப்பூச்சுங்குவிட்டு
பட்டுதட்டிகட்டியல்லோ பாங்கெடுத்துதான்சொருகி
முத்தினுருமாலை முகத்தழகாய்கட்டினானே
இட்டானதிருநாமம் எரிகின்றசூரியனைபோல்
பொன்னிழைத்ததுப்பட்டாவை போர்த்தானேமேலாக
அம்புவில்லுங்கைபிடித்து ஆணழகனவெளியானான்
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேரைச்சுற்றிதெண்டனிட்டு சிவ்வென்றுஏறினான்
ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடையை
பக்கத்தில்வெண்சாமரை பட்டுக்குடைகவிய
இருபக்கம்வெண்சாமரை ரத்னக்குடைகவிய
முத்துக்குடைகவிய முடிமன்னர்தான்சூழ
மேளதாளமுழங்க வேந்தர்களும்பயணமிட்டார்
வாரான்சயிந்தவனும் பச்சுரதங்குலுங்க
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
ஆயிரந்தெருத்தாண்டி அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
பட்டணந்தெருதாண்டி பார்மன்னன்வாரானே
செந்துளெழும்புகுது தெருவெல்லாங்கப்புகுது
கருந்துளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
வாராணசயிந்தவனும் மசுரதங்குலுங்க
அப்போசயிந்தவனும் ஆலோசனைகள்பண்ணி
துரோபதையைக்கொண்டுவரத் துரிதமுடன்போறானே

போறவிடந்தனிலே புதுமைகள் நாமறியோம்
வழியிற்சகுனங்கள் மனதில்குறிப்போமென்று
தருமதேவதையே நீ சாட்சிசொல்லவேண்டுமென்றார்
அப்போசகுனங்கள் ஆகாது மன்னனுக்கு
பொல்லாச்சகுனங்கள் பொருந்தாதுமன்னனுக்கு
வலசாரிடமாச்சு வலியனுமவலமாச்சு
காடை வலமாச்சு கள்ளரெதிர்ப்பட்டார்கள்
சாரைகுறுக்காச்சு சயிந்தவன்மேற்பல்லி சொல்லும்
குத்திப்பிடியுமென்று கோட்டானும்ஒலமிடுமே
வெட்டுவெட்டுமென்றுசொல்லி வேடரெதிரானார்கள்
ஓரியலறிடவே ஓர்பார்ப்பானெதிரானான்
பச்சைமரத்திலே பதுங்கிருந்துபல்லியது
பட்டமரமேறி பலபலென்றுசொல்லிடுமாம்
வெட்டிசொல்லாந்தையது திட்டெனவேமரணமென்று
நெருப்பெடுத்தோர்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்
இந்தச்சகுனமெல்லாம் இராசனுங்கண்டானே
நினையாததுயரமெல்லாம் நினைத்துமனமுருகி
என்னதுமெண்ணி இருந்துவிசாரமிட்டான்
இச்சகுனந்தன்னாலே இறந்துவிடப்போறேமோ
பொய்த்தபயணமினி வழிதிரும்பப்போறேமே
திரும்பினோமானால் சிரிப்பார்கள்ராஜாக்கள்
எண்ணாததியார்கள் எளிதஞ்செய்வார்கள்
வந்துதிரும்பிவிட்டால் மதியான்திரியோதிரனும்
அன்றெழுதுங்கத்தன் அழித்தெழுதப்போறானே
ஏமனெழுத்தல்லோ எள்ளளவுங்குறையாது
வருவினைகள்வந்தாலே மடியேந்தவேண்டாமோ
உள்ளபடிக்கு ஒருநாளுங்குறையாது
என்றுமனதிலெண்ணி இராஜனும்போய்நடந்தான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்

புலிகள்கரடிகளும் பெருத்தவனந்தான் தாண்டி
சூரியவனத்தில் சேர்ந்தானே சயிந்தவனும்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்று நாள்
காலையில்பயணமாகி கடுகவழிநடந்தான்
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்சேனையெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
அந்தவனந்தனிலே அத்தண்டஜனம்நிறுத்தி
உத்தண்டமன்னவனு ஒருததனுந்தேரேறி
மூருக்கமகாரிஷிவனத்தில் மூடுகிநடந்தானே
சயித்தவனும்பர்ணக சாலைதேடிவாரானே
தூரந்தம்நிறுத்தி துரோபதையாள்முன்னேவந்தான்
பர்ணகசாலையிலே பத்தினியாள்வீற்றிருந்தாள்
ஒருத்தியுமாகவேதா னுத்தமியாள்வீற்றிருந்தாள்
பாவிசயித்தவனும் பர்ணசாலைமுன்னேவந்தான்
அப்போதுபாஞ்சாலி ஆரணங்குதுரோபதையும்
கண்டால்சயிந்தவனைக் கட்டழகிதுரோபதையும்
அண்ணனைக்கண்டு அலறியேஓடிவந்தாள்
தமயனைக்கண்டாளே தானெழுந்துசரணமிட்டாள்
வட்டமணைபோட்டு மணித்தடுக்குந்தான்போட்டான்
இருமிருமென்றுசொல்லியிளங்கொடியாள்வருந்திடவே
அப்போசயிந்தவனும் ஆணழகன்தானெழுந்து
வட்டமணைமேலே வந்திருந்தான்சயிந்தவனும்
தோருவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
இந்தவனத்திலே ஏதுக்காய்வந்தீர்கள்
வனசாரிவந்திரோ மகாதவசாய்வந்திரோ
அண்ணாவேநீவந்த அதிசயத்தைச்சொல்லுமென்றாள்
மாலைமுடியானும் வாய்திறந்தேதுசொல்வான்
ஐவரும்நீயுமாக ஆரணியம்வந்தீர்கள்
வனவாசம்வந்திரென மண்டலத்திற்பேராச்சு
பார்க்குப்படியாகப் பைங்கிளியேவந்தேனே
உங்களுடசினமையையும் உலகத்தைவிட்டுவிட்டு
வனவாசம்வந்ததொரு வகையென்னதங்கையரே

இங்கேபரதேசம் என்வந்தீர்தங்கையரே
ஒன்றுமொளியாமல் உரையுங்காண தங்கையரே
அப்போதுரோபதையா ளாரணங்குசான கேட்டு
தோருவடிவழகி துரோபதையாளே துசொல்வாள்
அண்ணே நாங்கள்வந்த அதிசயத்தை நீர்கேளும்
பரதேசம்வந்தோமெங்கள் பரிதாபங்கேளுமென்றார்
துருபதபுத்திரையல்லோ தாரணியையாண்டிருந்தோம்
ஐவரையுங்கொல்லவென்று அரசன்திரியோதிரனும்
பஞ்சவரைக்கொல்லவென்று பாவிதிரியோதிரனும்
விருந்தருந்துமென்றுசொல்லிவேந்தரைக்கொல்லவென
பேரன்குமாரனுக்குப் பூநூற்கலியாணமென்று
பூநூற்கலியாணம் பொருத்தத்தப்பிப்போகுதென்று
உடனேவரத்தருமருக்கு ஓலையெழுதிவிட்டான்
மெய்யாலும் ஓலையென்று வேந்தர்மனதிலெண்ணி
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அஸ்தினபுரம்நாடி
வரவழிதனிலே பஞ்சவரைக்கொல்லவென்று
வசநாபிதன்னைப்பதல் பண்ணவைக்குப்போடுமென்றான்
தப்பிப்பிழைத்தார்கள் சுவாமியுடபுண்ணியத்தால்
நடக்கும்வழிதனிலே நச்சுமுள்ளை நாட்டினான்
ஊசிஎழுகூடி ஒருகோடி நாட்டினான்
கூரப்புகர்திகளும குறுக்கேபுதைத்துவைத்தான்
கொடிமூன்றுசத்திகளுங் குறுக்கேபுதைத்துவைத்தான்
தண்ணீர்குடிக்குமே சவார்களென்றுசொல்லி
பாரவசிகளிலே பருவதம்போல்நாட்டிவைத்தான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
அதுக்குப்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
தப்பிப்பிழைத்தார்கள் சுவாமியுடபுண்ணியத்தால்
மாளிகைவாசலிலே வந்தபிறகாக
பொய்க்குழியைவெட்டியவலேபோதாணிதர்வைத்தான்
பொய்ச்சிங்காதனங்களிட்டுப் புகழ்வேந்தர்பஞ்சவரைக்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
அங்குப்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்

எண்ணெயிட்டுக்கொள்ளுமோன வண்ணமிட்டழைத்தானே
மல்லர்களைவிட்டு வதைத்தெறிந்துபோடுமென்றான்
அதுக்குப்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
தப்பிப்பிழைத்தார்கள் சாமியுட புண்ணியத்தால்
பவளத்திருக்குளத்திற் பாரவசிநாட்டினானே
நீரிற்கழுநாட்டி நீர்முடன்குளியுமென்றான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தாகள் சாமியுட புண்ணியத்தால்
உண்கிறசோற்றிலேதான் ஒருக்காலே நஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைகாரநஞ்சையிட்டான்
சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
ஆடாதசூதாடி அரவக்கொடிவேந்தன்
சிமைதுரைத்தனங்கள் தேசமுழுதும்பறித்தான்
நாடுபறித்தான் நகரெல்லாந்தான்பறித்தான்
ஆனைபரிபான்சேருப அணியமணிசிங்காதனமும் [ன்
அத்தனையுந்தான்கெலிக்க ஆஸ்தானந்தான்கெலித்தா
ஐவரையுந்தான்கெலித்தான் ஆஸ்தானந்தான்கெலித்தா
ன், ஐவரையுங்காவலாக அரையிலடைத்துவிட்டான்
பாரவிலங்குகொண்டு பருவிலங்குபூட்டினானே
ஏழுலட்சம்பெருவிலங்கு எடுத்துவந்துபூட்டினானே
காற்றுநுழையாத கல்லறைத்தான்கிடங்கில்
தள்ளியேகொண்டுவந்து தடிவீரர்காவல்வைத்தான்
சுத்திதவாங்கம் தூதுவலைக்காவல்வைத்தான்
அறையிலிருந்தவென்னை அம்பலத்தில்தள்ளிவைத்தான்
மூலையிலிருந்தவென்னை முற்றத்தில்தள்ளிவைத்தான்
ஒருவர்மயிர்பிடிக்க ஒன்பதுபேர் துகிலுரிய
இருவர்மயிர்பிடிக்க இருபதுபேர்பின்னிழுக்க
பாவிமயிர்பிடிக்கப் பத்துபேர் துகிலுரிய
அம்பலத்தே அவையார்சபைநடுவே
பேரம்பலத்தே பெரியோர்சபைநடுவே
அரசர்சபைதனிலே அலைபதுகிலுரிந்தான்
வாய்வரிசையில்லாமல் வம்பாட்டம்பண்ணினானே

வாடிபோடியென்றேசி வலதுஞ்சடைபோறுமென்றான்
துஷ்டத்தனங்கள்பண்ணும் துரியோதிரனபாவி
ஆகடியப்பேசினனே அம்பலவர்தன்சபையில்
பாரவனவாசம் பரதேசம் ஓட்டிவிட்டேன்
பனிரண்டுதன்வருஷம் பாரவனந்திரியுமென்றான்
மறைவாயொருவருஷம் வந்திருக்கவுஞ்சொன்னான்
பதின்மூன்றுஞ்சென்றபின்பு பட்டணந்தேவந்தாக்கால்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்றான்
வந்துவிட்டோமண்ணாவே வனமேகுடித்தனமாய்
கூடைதலையேலே குடிவாழ்க்கைகானகத்தில்
மன்னரிவைத்தசிமாடு வனமேகுடித்தனமாய்
வேடரைப்போலவேதான் வில்லியரைப்போலாக
கள்ளக்குறவரைப்போல் காட்டிலிருக்கிறோம்
எங்கள்குறைதீர எக்காலஞ்சென்றிடுமோ
நாங்கள்சுகமாக ராச்சியத்தை ஆள்வோமோ
பஞ்சவர்கள்சுகமாகப் பாருலகம் ஆள்வாரோ
நீர்-அறியாதுபோலாக அண்ணாவேகேட்கவந்தீர்
தெரியாதுபோலாக கேட்கவந்தீரண்ணாவே
ஒன்றுமறியீரோ உத்தமரே அண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு எதுசொல்வான்மன்னவனும்
பகுதிப்படையைங்கப் போயிருந்தேனைபைங்கிளியே
சேனைத்திரளுடனே சென்றிருந்தேன்வெகுதூரம்
போனபிறகாக புதுமைபிறந்ததுகாண்
காற்றுவிசேஷமாகக் கேட்டுவந்தேன்தங்கையரே
நான்-அறிந்தேனேயாமாகில் அவகேடுவாராது
அன்றிருந்தேனானாலே அம்பலமேற்றுவரோ
துகிலுரியப்பார்ப்பேனோ துரோபதைநாயகியே
எந்தன்பணம்பொறுத்து இருப்பேனோதங்கையரே
நான்-வந்தபிறகித்த வயணமறிந்தேன்காண்
மனதுதரியாமல் வந்தேனுனைக்காணச்
சிந்தைமனங்கலங்கித் தேடிவந்தேன்தங்கையரே
உன்வார்த்தைகேட்டபின்பு உள்ளமுருகுதம்மா

நீ-சொன்னபடியாலே யென் சிந்தைகலங்குதம்மா
நீ-பத்தினியாளென்றுசொல்லி சற்றுமறிவானோ
உத்தமியாளென்றுசொல்லி ஊசாரியறிவானோ
காமாட்சியென்கிறதை கழுசிறையனறிவானோ
ஏதுமறியாமல் இகழ்ச்சிகள்பண்ணிவிட்டான்
ஒன்றுமறியாமல் உபாசினங்கள்பண்ணினானே
அவன்-வாழ்வுங்குலைந்துவிடும் மகிழ்ச்சியடங்கிவிடும்
செலவமடங்கிவிடும் செருக்குங்குலைந்துவிடும்
பொறுத்திருலேயம்மா பொல்லாங்குவாரதில்லை
அவனுக்கேநாசகாலம் ஆகுதுபொருத்திரம்மா
அஞ்சாதேதங்கையரே ஆயாசங்கொள்ளாதே
நீ-ஆயாசப்படுவதல்லா மவனுக்கேகேடுவரும்
பொறுத்தவர்பூமியாள்வார் பொங்கினவர்காடாள்வார்
எதுக்குமஞ்சாதே என்பிறப்பேதங்கையரே
பாரப்புலிபோலே பஞ்சவர்களெங்கேயம்மா
வீரப்புலியதுபோல் வீரர்களெங்கேயம்மா
மைத்துனமாரைவர்களும் மகாராஜரெங்கேயம்மா
ஐவரையுங்காணவென்று ஆவலாய்வந்தேனம்மா
அவர்-போனவிடமறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
பார்க்கமனதாகிப் பைங்கிளியேவந்தேனம்மா
காணமனதாகிக் காணகதேவந்தேனம்மா
இன்னேரமாச்சுதே இராஜர்களைக்காணோமம்மா
தனியாகவுன்னைவிட்டு தருமரெங்கேபோனாரோ
ஒண்டியாய்வுன்னைவிட்டு உத்தமர்களெங்கேபோனார்
இன்றுநாணகாணுதற்கு இல்லாமற்போச்சுதம்மா
இன்னமொருவேளை இவர்களை நான்காணுகிறேன்
அவ-ராணாய்ப்பிறந்தவர்களலைந்தாலுங்குற்றமில்லை
(நீ) பெண்ணாய்ப்பிறந்தவள்தான் பின்தொடரநீதியுண் [டோ
ஐவருடனே நீ அலைந்துதிரிவானேன்
அழுதுதிரிவானேன அல்லற்படுவானேன்
என்-மாளிகைவாசலுக்கு வாரீரோதங்கையரே

பாரவணந்திரிந்து பஞ்சவர்கள்வாரமட்டும்
எந்தனதுமாளிகைக்கு வாரீரோதங்கையரே
அரமனைக்குந்கலை நானழைந்துபோகவந்தேன்
வெதும்பிவிடாய்த்து நீ வெயிலில்திரிவானேன்
வாரீரோதங்கையரே மாளிகைக்குகொண்டுபோறேன்
என்று-வருந்தியழைந்தானே மாபாவிசயிந்தவனும்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குமேதுசொல்வாள்
ஐவரையும்விட்டுவிட்டு வருவேனோஅண்ணாவே
விட்டுப்பிரியவேதான் வேநதேமனம்வருமோ
அண்ணாவே நீர்கேளும் ஆனாலொருவார்த்தை
நான்-வரவேணுமென்று மனதுமுமக்கிருந்தால
வனம்போனபஞ்சவர்கள் வருகிறபோதாச்சு
ஐவர்வரும்வேளை ஆச்சுது அண்ணாவே
ஐவரைகேட்டுநீ அழைத்துப்போமண்ணாவென்றாள்
பஞ்சவரைக்கேளுமண்ணா பாரவனந்துலைத்துவாரேன்
ஐவர்வரும்வேளை ஆச்சுது அண்ணாவென்றாள்
இவ்வார்த்தைதானகேட்டு இடும்பன்சயிந்தவனும்
என்னதுமெண்ணியல்லோ இருந்துவிசாரமிட்டான்
ஐவர்வந்தாலமோசமல்லோ ஆகாதுகாரியங்கள்
என்றுசயிந்தவனும் எண்ணினான் தன்மனதில
காவலர்கள்வந்தாலே காரியங்களாகாது
கையிலிருந்தமொரு கத்தியைத்தாழவைத்தான்
கடுகவெழுந்தானே கட்டழகன்சயிநதவனும்
ஐவர்வந்தால்சேதிசொல்லு மஸ்திணபுரமபோறேன்
இட்டுன்னைபோகவென்றே இன்னேரம்காத்திருந்தேன்
ஐவரையுங்காணேயப்பா ஆரணங்குதுரோபதையே
இன்னமொருவேளைவந்து இட்டுக்கொண்டுபோறேனம
மா, ஐவருக்குச்சொலலி அழைத்துக்கொண்டுபோறேன
ம்மா, போகவிடைதாரும் போய்வாரேன்தங்கையரே
என்றுமவன்கேட்க ஏதுசொல்வாள்துரோபதையும்
அப்படியேபோய்வாரும்அண்ணாவேயென்றுசொன்னாள்
விடைபெற்றுசயிந்தவனும் வேந்தனெழுந்திருந்து

பர்ணசாலைவிட்டிறங்கிப் பார்வேந்தன்போகலுற்றான்
கடுகநடந்தானே கட்டழகன்சயிந்தவனும்
அழகுரதமேறி அக்கானகந்தாண்டி
அவன் மச்சுரதமேறி வாரானே மன்னவனும்
போரான்சயிந்தவனும் பொன்னின்ரதமேறி
அனேகதூரம்போனபின்பு ஆரணங்குதுரோபதையாள்
கத்திதலைக்கண்டாளே கட்டழகிபாஞ்சாலி
வைத்துமறந்தானே மன்னவனும் ஆயுதத்தை
இங்கேவைத்துதானமறந்தானென்றுமவளெழுந்து
கத்திதனையெடுத்துக் கடுகிநடந்தாளே
அண்ணாசயிந்தவனே அனேகதூரம்போகாதே
நில்லுங்காணண்ணாவே நெடுந்தூரம்போகாதே
என்று-கூடநடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
அப்போசயிந்தவனும் அழும்பு நினைவுகொண்டு
கேளாதுபோலே நடந்தான் கெடுநினைவாய்
அறியாதுபோலே நடந்தானே ஆணழகன்
கூடநடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
சேரநடந்தாளே தேன்மொழியாள் துரோபதையும் [ள்
அண்ணாவே அண்ணாவென்று அக்காலமேகூச்சலிட்டா
அழும்பன்சயிந்தவனுக் கப்போதான்கேட்டதுபோல்
திரும்பியவன்பார்த்து தேரைநிறுத்தினானே
அவள்-நெடுந்தூரம்வந்தபின்பு நிறுத்தினான் தன்ரதந்
தை, அப்போ துரோபதையும் அருங்கிளியாளேதுசொ
ல்வாள், அண்ணாவேமன்னவனும் அனேகதூரம்வந்து
விட்டாய், ஆயுதத்தை நீமறந்து அனேகதூரம்வந்தீரோ
இந்தாருமென்றாளே ஏலங்கருங்குழலாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
எட்டியேதாருமென்றான் இருந்தபடிசயிந்தவனும்
அப்போதுரோபதையாள் ஆரணங்குஏதுசெய்தாள்
ஒருபடியேறியல்லோ உத்தமியாளிந்தாவென்றாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
எட்டவில்லைகத்தியென்றான் இன்னங்கொடுப்பதற்கு

மற்றுமொருபடியே மயிலனையாளேறினளே
அப்போதுங்கட்ட வில்லையென்றனனே ஆணழகன்
மூன்றாம்படியேறி மொய்குழலாள் நின்றுகொண்டு
ஆயுதங்களிந்தாவென்றாள் ஆரணங்குதுரோபதையும்
சயிந்தவனும்தான்பார்த்து சந்தோஷமாகியல்லோ
நாம்-வந்தகாரியங்கள் வசப்பட்டதென்றுசொல்லி
மெத்தமனமகிழ்ந்து மெல்லியரைக்கொண்டுபோக
அவளேறிப்போனதேயல்லோ ஏறவிட்டான்தன்ரதந் [தை
காற்றாய்ப்பறந்ததுகாண் கட்டழகன்தன்ரதமும்
போகுதேயந்தரமாய்ப் பொல்லாதகானகத்தில்
தோராவழிவழியே துரோபதையுமேதுசொல்வாள்
அண்ணாசயிந்தவனே அழிநினைவுதேடிவிட்டாய்
ஐவர்களுந்தானறிந்தால் அனத்தம்வருமுனதனுக்கு
பஞ்சவர்களறிந்தாலே பழுதல்லோஉன்குடிக்கு
திருத்துப்பாதகத்தையென்றாள் நிறுத்தானேபாதகனும்
அப்போதுதுரோபதைதான் ஆரணங்குமனங்கலங்கி
சிந்தைகலங்கியவள் ஒடுக்கிட்டுமெய்மறந்து
மாதுமனஞ்சலித்து மயிலனையாளேதுசெய்தாள்
அப்போதுரோபதையாள் அபயக்குறலிடுவாள்
ஐவர்பஞ்சபாண்டவரே அபயமபயமென்றாள்
ஆகாயவாணியம்மா அல்லவரும்பார்த்திருங்கள்
ஐயன்பிடாரியரே அந்ததேவதையே
அந்ததேவதைகளே சந்திரசூரியரே
காளிகளேகூளிகளே கானகத்துப்பட்சிகளே
இந்தவனத்திலிருக்குமிருகங்களே
பாருங்கள்பாருங்கள் பாவியவன்செய்கிறதை
எல்லோரும்பாருங்கள் இவனுடையதுற்குணத்தை
என்னைச்சிறைபிடிக்க இழுத்துக்கொண்டுபோறானே
பஞ்சவர்க்குந்தானுரையும் பார்த்திருந்தபட்சிகளே
ஐவருக்குத்தானுரையும் ஆகாயவாணியம்மா
நாய்க்குக்கிடைக்குமோ நல்லமுழுத்தேங்காயும்
செரிப்பேனோஉந்தனுக்கு சேறுபந்துநான்தருவேன்

உனக்-காவனென்றுபாராதே அடிப்பேன்முறத்தாலே
என்றேதுரோபதையு மிளங்கொடியாளேதுசெய்தாள்
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகிருள்
மாயவரேசுவாமியென்று யாதுபுலம்புகிருள்
அப்போதுபஞ்சவர்கள் அரன்பூசைதானமுடித்து
அரிபூசைசிவபூசை எல்லாமவர்முடித்து
நடந்தார்கள்பஞ்சவர்கள் ஞாயிருதித்தாப்போல்
வாரார்கள்பஞ்சவர்கள் வடக்கெழுந்தசூரியன்போல
பர்னசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
அங்கேதான் துரோபதையை ஆரணங்கைக்காணுமல
காணுமலபஞ்சவர்கள் கலங்கிஞரமநேரம்
தக்கப்புகழ்பெரிய தருமாவரே சொல்வார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
வீமாமதகரியே வில்லிவந்தவென்பிறப்பே
நெருப்பிற்பிறந்தவளை நீலவர்னன் தங்கையரை
அக்கினியில்வந்துதித்த அபிஷேகபத்தினியை
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பைங்கிளியைக்காணேனே
அழகில்மிகுந்தபெண்ணை ஆரணங்கைக்காணேனே
ஆரெடுத்துப்போஞரோ அறியேனேதம்பியரே
எவரெடுத்துப்போஞரோ ஏதுமறியேனே
பார்த்துவாதம்பியென்றார் பாரமதகரியை
என்றதுகேட்டு எழுந்தார்கள்தம்பியர்கள்
தட்டிவரிந்துகட்டித் தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஆயுதங்கள்தானெடுத்து அடவுடனேபோய்நடந்தார்
தெற்குத்திசையிலே தேர்விஜயன்தேடிவாரான்
வடக்குத்திசைநோக்கி வாருன்சகாதேவன்
மேற்குத்திசையிலேதான் நகுலனுந்தேடிவாருன்
கிழக்குத்திசைநோக்கி வீமனுந்தேடிவாருன்
அந்தவனங்களிலே ஆருப்நதுவாரபோது
தேரடியைக்கண்டுமல்லோ திரும்பினன்வீமனவன்
காற்றுவேகமாகவேதான் கடுகிவந்தான்வீமனவன்
எட்டிப்போய்தான்பிடித்தான் இயலானரதத்தையவன்

வீமனைக்கண்டாளே மெல்லிநல்லாள் துரோபதையும் [ள்
அழுதகண்ணைத்தான் துடைத்தாள் ஆயாசமுந்தீர்ந்தா
கைகொடுத்தான் துரோபதைக்கு கடுகஇறக்கிவிட்டான்
கண்டுஇடிவிழுந்தான் காளைசயிந்தவனும்
பார்த்துஇடிவிழுந்தான் பாவிசயிந்தவனும்
சிந்தைகலங்கியவன் திடுக்கிட்டுமெய்மறந்து
மூர்ச்சையாய்விழுந்தானே முடிமன்னன்சயிந்தவனும்
ஒருகையால்ரதந்தூக்கி உதிரடித்தான்மண்மேலே
அவனுடையதேர்சட்டமும அழகுகுதிரைகளும
சட்டஞ்சட்டமாகவேதான் தவுடுபொடியாச்சுதங்கே
தேருமுறிந்ததுகாண் சோப்பித்தான்மண்மேலே
வெற்றிமதயானை வீமனவனே துசொல்வான
ஏதடிபெண்ணே நீ யிளங்கொடியே துரோபதையே
ஏதுவயனமென்ன வகையாகச்சொல்லுமென்றான்
அப்போ துரோபதையா ளாரணங்குதான்பார்த்து
அந்தப்பயநடையவள் அருங்கிளியாளே துசொல்வாள்
வந்தானே சயிந்தவனும் வாருமிருமென றுசொன்னேன்
நயவஞ்சகமாகவந்துமொரு வயணங்கள்கேட்கையிலே
சொன்னேன்வயணமெல்லாம் சூதாகததான்கேட்டு
அவ்வார்த்தைதானகேட்டு ஆயுதந்தைகீழேவைத்தான்
மறந்துவிட்டாளென்று மன்னவனே நானெண்ணி
ஆயுதத்தைதானெடுத்து அண்ணனென்றோடிவநதேன்
எட்டிக்கொடுமென்றான் ஏறினேனதேர்மேலே
ஏறினப்பாதே ஏகிறவிட்டானதன்ரதந்தை
இவ்வளவுசேதியென்று இளங்கொடியாள் துரோபதையு
அவ்வார்த்தைதானகேட்டு ஆங்காரவீமனவன்      [ம்
வெற்றிமதயானை வீமனவனே துசெய்தான்
காட்டுக்கொடிபிடுங்கி கடுகியேஓடிவந்தான்
மூர்ச்சைதெளிந்தானே முடிமன்னன்சயிநதவனும்
காட்டுக்கொடியாலே கட்டினான்சயிநதவனை
அப்போமதவீமன் ஆங்காரங்கொண்டவனும்
தனகாலில்கட்டிக்கொண்டு தானடந்தான்வீமனுமே

பர்னசாலைதன்னருகே பாவிதனைக்கொண்டுவந்தான்
தருமருக்குமுன்னாலே தள்ளிக்கொண்டுவந்தானே
கண்டாரேதாமராயர் காளைசயிந்தவனை
வாருங்காண்மைத்துனரே வந்தீரெனைத்தேடி
தேடியேவந்ததென்ன சொனகானகத்தில்
வந்தவயணமெல்லாம்வாய்திறந்துசொல்லுமென்றான்
தர்மரவர்கேட்கையிலே தானேதன்வாய்திறந்து
மாபாவிசயிந்தவனும் வார்த்தைகளேதுசொல்வான்
உங்களைப்-பார்க்கப்பிரியமுடன் வந்தேனேபஞ்சவரே
காணமனதாகி வந்தேனே காவலரே
வந்தயிடந்தனிலே உந்தனை நான்காணவில்லை
தங்கையரைக்கண்டேனே தங்கள்வயணமெல்லாம் [ண்
விபரமாய்ச்சொல்லுமென மெல்லியரைத்தான்கேட்டே
அப்போ துரோபதையாள் ஆரணங்குமேதுசொல்வாள்
வனவாசம்வந்ததொரு ஆரணங்குமேதுசொல்வாள்
திரியோதிரனுரைத்த சேதிகளைத்தானுரைத்தாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அறவேமனஞ்சலித்தேன்
இருமிருமென்றுசொல்லி ஏகவழிநடந்தேன்
வசிருயுதத்தை வைத்துமறந்துவிட்டேன்
கையிலெடுத்துக்கொண்டு கடுகவந்தாள்தங்கையரும்
எட்டிக்கொடுமென்றேன் இயலானதங்கையரும்
அவ்வளவில்வீமனவந்து அடித்தானேகதையாலே
இடுப்பிலேகயிறுகட்டி இழுத்துவந்தான்தங்கள்முன்னே
இவ்வார்த்தைசொல்லி இளைத்தாற்போலேயழுதான்
சாபாம்புமன்னவரும் தருமராதுகேட்டு
மெத்தமனமுருகி வேந்தரயரேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
கனிகள்பறித்துக்கொண்டு கடுகியேவாருமென்றார்
அந்தச்சொல்தான்கேட்டு அனைவோருங்கோபமுற்றார்
நகுலசகாதேவ ராசாக்கள்கோபமுற்று
கண்கள்சிவந்துமவர் காந்தாளக்கோபமுற்று
நெற்றிவிழிசிவக்க நீலவிழிபொறிபறக்க

உச்சிமயிர் துடிக்க உத்தமர்களே துசொல்வார்
அண்ணாவே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
துரோபதையைக்கொண்டுபோக வந்தவொருதோசியற்கு
பாவையரைக்கொண்டுபோக வந்தவொருபாதகற்கு
போஜனமும் போடுவரோ புகழ்பெரிய அண்ணாவே
ஆக்கினைகள்பண்ணி அனுப்புவோமிவனையென்றார்
பொல்லாதபாதகனை போகவிடலாகாது
என்றுமவர்கள்சொல்லி எல்லோருமோர்முகமாய்
ஆனந்தமார்பரெல்லாம் அண்ணருடனகோபமிட்டார்
தக்கபுகழ்பெரிய தருமராவரேதுசொல்வார்
கோபித்தகோபமெல்லாங் குளிர்ந்தமழையாச்சு
வெளுத்ததைப்பாலெனபார் வெள்ளத்தைதண்ணீரென்
பார், கபடறியார்சூதறியார் கள்ளமொன்றுந்தாமறியார்
பொய்சொல்லார்தருமாவர் புண்ணியனுரேதுசொல்வார்
கோபித்துக்கொண்டாலாகாது மற்றவரே
ஆங்காரகெர்வமது ஆருக்குமாகாது
ஆணவமுண்டானால் அழிந்துவிடுங்காலமப்பா
பொருத்தவர்பூமியாள்வார் பொங்கினவர்காடுறைவார்
மனக்குறைவையாதே வந்தவர்க்குப்பசியாற்றும்
கனிகளபறித்துமே கடிகியேவாருமெனறார்
எனக்கெதிர்பேசவேண்டாம் எழுந்துநடவுமென்றார்
அவ்வார்த்தைதனைகேட்டு அண்ணரடிவணங்கி
அஞ்சிப்பயந்தெழுந்தார் அழகானதம்பியர்கள்
காட்டிற்பயந்தோடிக் கனிகளபறித்துவந்து
கொண்டுவந்துவைத்தார்கள் கெப்பெனவே அண்ணரண்டை, வாங்கியேதருமாவர் மைத்துனபொசியுமென்றார்
மனதிற்பயமுடனே வாங்கிப்பொசித்தானும்
கனிகள்பொசித்துமவன் கைபூசிக்கொண்டானும்
போய்வாரேனென்னப் பொட்டெனச்சரணமிட்டான்
தக்கப்புகழ்பெரிய தருமராவரேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமனேத்தானமைந்து
மைத்துனர்தன்னுடனே மன்னர்களே நீங்களும்போய்

வழிகூட்ட னுப்பிவைத்து வாருங்கள் தம்பியென்றார்
அப்படியே நல்லதென்று அழகான தம்பியர்கள்
வெற்றிமதயானை வீமனவன் தானெழுந்து
அண்ணருறைப்படிக்கு அழைத்துவந்தான் சயிந்தவனை
சென்றாரிருவருமாய்ச் சிலதூரமானபின்பு
போர்வீமனே துசெய்தான் போரவழிதனிலே
ஐந்துகுடுமிவைத்து அப்பாலே தலைசிறைத்தான்
மீசைசிறைத்தானே மின்போடி பண்ணினனே
தாடிசிறைத்தானே தலைபோடி பண்ணினனே
தலைபோடி பண்ணினனே தாமமுடியானுக்கு
கரும்புள்ளி செப்புள்ளி கலந்தழகாய்ப்பொட்டுமிட்டான்
செம்புள்ளிகரும்புள்ளிசேர்ந்தழகாய்ப்பொட்டுமிட்டான்
இப்படியாகவே இவரிருக்கும்வேளையிலே
தக்கபுகழ்பெரிய தருமரவர்பார்த்து
அர்ச்சுனதம்பியரே அண்ணனைக்காணோமே
மைத்துனரைக்கூட்டிப்போய்வழிவிட்டுவாருமென்றேன்
போய்நெடும்போதாச்சு புகழ்வீரன் வீமனைத்தான்
வீமனைத்தேடி நீ விரைவில்வந்துசேருமென்றார்
சடுங்காளை வீமனைத்தான் கண்டழைத்துவாருமென்றார்
அப்படியே நல்லதென்று அருச்சுனனுந்தானெழுந்தான்
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு
வில்லெடுத்துக்கைபிடித்து விஜயனும்போய்நடந்தான்
அண்ணரைத்தேடிவந்தான் அர்ச்சுனராஜதுரை
வீமனைப்பார்த்தாரே விஜயனருச்சுனரும்
கண்டானே சயிந்தவனைக் காளைமனமகிழ்ந்து
பார்த்தானே சயிந்தவனைப் பலகாலும்பூரித்து
வீமனைத்தான்பார்த்து விஜயனுமேதுசொல்வான்
என்னமரியாதை செய்தீரென்னண்ணாவே
மட்டையடிமொட்டையிட்டால் வாகனங்கள்வேண்டா
மோ, இருமிருமண்ணாவென்று ஏகிநடந்தானே
கானகத்தில் நுழைந்து கழுதையொன்று தான்பிடித்து
மலைக்கழுதைகொண்டுவந்து மன்னவனையேற்றினனே

இப்படியாகவேதா னிவரிருக்கும்வேளையிலே
தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
நகுலனைத்தானழைத்து ராஜாக்களைத்தேடுமென்றார்
கானகத்திற்போனவர்கள் கடுகவந்துசேரவில்லை
கண்டழைத்துவாருமையா காளையிருவர்களை
நாமமுடியான் நகுலனது கேட்டு
அருணருந்துமென்னையா அழைத்தோடிவாரேனென்று
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்கவிட்டு
ஆயுதங்கைபிடித்து அடவிதனிற்போய்புகுந்து
பார்த்தன்னரைத்தேடிப் பரிநகுலனோடிவந்தான்
கானகமெல்லாந்தேடிக் கண்டானே அண்ணர்களை
கண்டான்சயிந்தனுட கண்காட்சியானதெல்லாம
பார்த்தான்சயிந்தவனை பாவிக்குஎற்றுமென்று
சந்தோஷப்பட்டானே சயிந்தவனைக்கண்டவுடன்
வீமாமதகரியே வில்லேந்துமண்ணர்களே
மூவிரண்டுகுடுமிவிட்டு மொட்டையடித்தீரோ
என்னுபகாரம் ஏதுசெய்வேன்மைத்துனற்கு
சாணிப்பிடித்துவந்து சரியானவுண்டைபண்ணி
தலைமேலேயுண்டைவைத்து தனிவிளக்குஏற்றிவைத்தா
ன, இப்படியாகவேயிவரிருக்கும்வேளையிலே
அநேகநெடும்பொழுது ஆனபிறகாக
தருமாவெழுந்து தம்பியைத்தானழைத்து
மூவர்களும்போனாரே முடிமன்னராஜாக்கள்
இன்னமவர்க்காணோமே என்னமோ நானறியேன்
தேடியழைத்துநீ சீக்கிரத்தில்வாருமென்றார்
நாமமுடியானுட சகாதேவன் தான்கேட்டு
அப்படியேதான்போ யழைத்துவாரேனென்று
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு
அம்புவில்லுநாணெடுத்து ஆணழகனபோகலுற்றான்
அப்போதுத்ரௌபதையும் ஆரணங்குதானெழுந்து
தர்மருக்கெதிரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
நானுங்கூடப்போய்வாரேன் ராஜர்களைத்தேடவென்றாள்

தர்யாதுகேட்டு தளராமலேதுசொல்வார்
அப்படியேபோய்வாரும் ஆயணங்குதுரோபதையே
சீக்கிரத்தில்வாருமென்று செலவுதநதார்தருமலிங்கம்
கூடத்தொடர்ந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
இருவருமாகவல்லோ யிசைந்துவழிநடந்து [ன்
அண்ணர்களைத்தேடியல்லோ ஆணழகன்வந்துவிட்டா
கானகத்தினுள் நுழைந்து கண்டானே அண்ணர்களை
மைத்துனரைக்கண்டு வரிசையெல்லாந்தான்பார்த்து
உள்ளங்குளிர்ந்துசிலிர்த் துடம்பெல்லாம்பூரித்து
சந்தோஷப்பட்டு சர்வாங்கப்பூரித்து
மரியாதைநானென்ன மைத்துனற்குச்செய்வேன்காண்
கழுதையின்மேலிருந்தவனைக் கீழிறக்கிவிட்டான்
முன்னும்பின்னாக முகந்தெரியஏற்றினன்
எருக்கமாலைகொண்டுவந்து இவன்கழுத்திலேபோட்டா
ன், இந்தவரிசையெல்லாம் விந்தைகளைகாட்சியென
மன்னர்கள்தன்னருகே வந்துநின்றுள்பாஞ்சாலி
அண்ணரைக்கண்டாளே ஆனந்தமானாளே
தமயனைக்கண்டாளே சந்தோஷமானாளே
தாமமுடிவீரரே நீர் தலைபோடிபண்ணீரே
வாள்விஜயஅர்ச்சுனரே வாகனங்கள்தந்தீரோ
காளைநகுலரே நீர் கரும்புள்ளிபோட்டீரே
மூன்னுற்சகாதேவா மூன்பின்னுய்வைத்தீரே
எருக் மாலைகொண்டுவந்து இவர்கழுத்திற்போட்டீரே
என்னமரியாதை அண்ணருக்குநானசெய்வேன்
பாஞ்சாலனைபெற்ற பைங்கிளியுமேதுசொல்வாள
வானத்தருந்ததியாள் மாசுபடாப்பத்தினியாள்
ஐவருக்குத்தேவியாகி அழியாதபத்தினியாய்
கற்புடையபத்தினியாய்க் காபபதுமெய்யானால்
இக்-கழுதையைத்தொட்டவர்கள் கடுகநடவாமல்
ஏறினசயிந்தவனை இறங்கவேவொட்டாமல்
அரவக்கொடியோன்பார்க்க ஆபலைப்போமளவும்
ஏறினகழுதை யிறங்காமலிருக்கவென்று

கட்டவிழ்க்கவந்ததொரு காவலர்களெல்லோரும்
ஓட்டிக்கொண்டுபோகவென்றுஉத்தமியுஞ்சாபமிட்டாள்
எனையங்கிதைத்தார்தொட்டால் வனக்கழுதைவிட்டிறங்க
காட்டுக்கழுதையிது கடுகெனவேதானிறங்க
மற்றவர்கள்தொட்டாலே வலித்துக்கொண்டோடவென்
இப்படிக்குச்சொலவியல்லோ யிட்டாள்பெருஞ்சாபம்[று
சாபங்கொடுத்தாளே தருமர்பெருந்தேவியவள்
இப்படியாய்ச்சொல்லி இருந்தாளே துரோபதையும்
அடித்துத்துரத்தினார் அங்கேசயிந்தவனை
அரியனுக்குஞ்சொல்லுமென்று துரத்தினார்சயிந்தவனை
வருகுதே அக்கழுதை வனமாய்வனந்தாண்டி
தான்விட்டுவந்ததொரு தன்னுடையசேனையண்டை
வந்துகலந்தானே வனக்கழுதைதன்னுடனே
கண்டாரேசேனைகள் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தாரேசயிந்தவனைப்பார்வைரெண்டுங்கொள்ளாமல்
இதுவென்ன அதிசயங்க ளெவர்செய்தகோலமென்று
கட்டையவிழ்க்கவென்று காவலர்களோடிவந்து
தொட்டவிழ்க்கவேதான் ஓட்டிக்கொண்டுபோனார்கள்
ஓட்டிக்கொண்டசேனையுடன் உத்தமனும்போய்நடந்தா
அக்குரோணிசேனையுடன் ஆனைமுகன்போகலுற்றான் [ன்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி பதிகவனந்தான்தாண்டி
அவ்விருபுரத்தே அடுத்ததுஅக்கழுதை
கடையுங்கடைத்தெருவிற் கழுதைவருகையிலே
கழுதையைத்தொட்டவர்கள் கடுகியேகூடவாரார்
பட்டணத்திலெல்லவரும் பரிவாகப்பார்த்தார்கள்
என்ன அதிசயங்க ளெனப்பார்களெல்லவரும்
மாடத்தில்மண்டபத்தில் வந்தேறிப்பார்ப்பார்கள்
கோபுரத்திலேறி நின்று குலுங்கநகைப்போரும்
சொல்லிச்சிரிப்போரும சீச்சீச்சீயென்போரும் •
இவனுக்குஇக்கழுதை ஏதென்றுசொல்வோரும்
சாயத்துரோகியிவன சதிசெய்தானென்போரும்

இப்படியாக இவர்களுஞ்சொல்லையிலே
மற்றுமொருவன்வந்து வாய்திறந்தங்கேதுசொல்வான்
துரியனுடசொற்கேட்டு துரோபதையைக்கொண்டுவரப்
போனானேகானகத்திற் போர்மன்னராஜரண்டை
ஐவரில்லாவேளையிலே ஆனைக்கைக்கொண்டுசென்றான்
அப்போதுரோபதையும் அபயமபயமென்றாள்
அபயக்குரல்கேட்டு ஐவர்களுமோடிவந்தார்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்து
மயிலனையைக்கொண்டுபோக வந்தவொருபாவிதன்னை
விடலாகாதென்றுசொல்லி வீமன்மனதிலெண்ணி
அடையாளப்பண்ணி யனுப்பினான்,திரியனண்டை
என்றுமவர்கள்சொல்லி யிருக்கினறவேளையிலே
அந்தத்தெருத்தாண்டி அப்பாலேபோனானே
மாடத்தெருத்தாண்டி மன்னவர்வீதிவிட்டு
திரியோதிரனிருக்கும் சிம்மாசனத்தருகே
வந்ததுஅக்கழுதை மகாராஜன்முன்னாலே
அம்பலத்தார்கண்டார்கள் ஆச்சரியப்பட்டார்கள்
திரியோதிரன்கண்டு சிந்தைமனங்கலங்கி
உள்ளங்கலங்கியல்லோ ஓடிவந்தான்சயிந்தனண்டை
இரங்கென்றுகைகொடுத்தானிழுத்துக்கொண்டோடுது
ஐயோதெய்வமேயிந்த அனியாயம்நானறியேன்
என்னையிழுத்துக்கொண்டு ஓடுதுஇக்கழுதை
கூவியலறுகிறான் கொப்பெனவேதிரியோதிரன்
அபயமிட்டுச்சுற்றுகிறா னம்பலத்தார்தங்கள்முன்னே
அங்கேயிருந்தவர்கள் அனைவோருந்தான்பார்த்து
கலுக்கென்றுதான்சிரித்தார் கட்டழகரெல்லோரும்
சிரித்ததைத்தான்பார்த்து திரியனுடதம்பியர்கள்
சிரிக்கவுடலெடுத்தோம் சீயென்னப்பேரெடுத்தோம்
என்றுமவர்கள்சொல்லி யிவனருகிலேயோடிவந்து
தம்பிமாரெல்லோரும் தமயனுக்குக்கைகொடுத்தார்
அத்தனைபேர்களையும் அக்கழுதைவலித்தோடும்
அப்போதுஎல்லோரும் அலறுகிறார்கூச்சலிட்டு

ஐயையோ தெய்வமென்று அல்லவரும் புலம்புகையில்
அங்கிருந்த ராஜாக்களானதொரு மந்திரிகள்
பார்த்துமவர் நடுங்கிப் பதுங்குவார் துரைகளெல்லாம்
இப்படியாகவே இவர்கள்படும்பாடுதனை
தூயகுலத்துதித்த துரோணரவர் ஓடிவந்து
காசிவளநாடாளுங் கர்ணனைக்கண்காட்டி
சர்ப்பக்கொடியோனுடனே தம்பிமாரானவரும்
சாயாப்புமேனி சயிந்தவரானவரும்
மற்றுஞ்சிலமன்னவரும் மகுடமுடிராஜர்களும்
இன்னஞ்சிலசேனைகளும் எல்லோருமொன்றாக
காட்டுக்கழுதையுடன் கலந்துமவரேகிறார்
நாய்-கண்டுகம்பாவிருக்கக் காரியங்களல்லவென்றார்
பார்த்திருப்போமென்றால் பரிதாபந்தோனுதையா
இதுக்கொருயோசனைகள் இயம்புங்காண்மன்னவரே
அப்போதுகர்ணனுமே ஆணழகர் ஏதுசொல்வார்
துரோபதையைச்சொன்னதொரு தோஷமிதுகாணும்
பத்தினியைப்பேசினதோர் பாவமிதுகாணும்
என்றுசொல்லிக்கர்ணனுமே இவர்களருகில்வந்து
அப்போதுகர்ணனுமே அனைவரையுந்தான்பார்த்து
குலுங்கநகைத்துக் கொப்பெனவேயோடிவந்து
பாராளந்தபாவன் திருப்பாதமதைமனதிலெண்ணி
பெருமாள் துணையென்று பிடித்தானே தன்கையால்
கடுகயிறுந்தானே கர்ணமகாராஜன்
கழுதையைத்தட்டி கடுகயிறங்குமென்றான்
அந்தண்டபோர்களுமே அல்லவருங்கையைவிட்டார்
அப்போசயிந்தவனும் அங்கேயிறங்கிவிட்டான்
துரியோதிரன்முதலாய்ச் சேனையெல்லாம்வந்தார்கள்
அவரவர்களாசனத்தி லனைவோரும்வீற்றிருந்தார்
அப்பலவாசலிலே அழைத்துவந்தார்சயிந்தவனை
தென்னமுடிவேந்தன் துரியோதிரராஜன்
மைத்துனரைத்தான்பார்த்து மகாராசனேதுசொல்வான்
கோதைதுரோபதையைக் கொண்டுவரப்போனீரே

மட்டையடிமொட்டையிட்டு வாகனத்தின்மேலேற்றி
அனுப்பினாரார்களே ஆணழகா செல்லுமென்றான்
அவன்-பேசப்பலனழிந்துபின்வேந்தனே அதுசொல்வான்
போனதும் வந்ததுவும் புதுமைநடந்ததுவும்
அங்கேநடந்ததொரு ஆச்சரியங்களுரைத்தான்
தேசத்தையாளும் திரியோதிரன்பார்த்து
அவ்வார்த்தைதான்கேட்டு அறவேமனஞ்சலித்தான்
வரிசிந்துராஜனுமே மைத்துனற்கேதுசொல்வான்
வெற்றிமதயானை வீமனைக்கொல்லவென்று
பரமரைநோக்கியே பாரத்தபசுபண்ணி
வீமனைக்கொல்லவென்று வேணவரம்பெற்றுவாரேன்
என்றுநடந்தானே இயலானசயிந்தவனும்
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமங்கே அதிகவனந்தான்தாண்டி
மகாமுனிகள்தபசுபண்ணும் மாயமலைமேலே
தானுந்தபசுபண்ணான் தாமமுடியானும்
ஆதிசிவனையல்லோ அடிபணிந்துதானினைந்து
அருந்தபசுபண்ணினானே அங்கேசயிந்தவனும
அப்போபரமசிவன் அவனுக்கெதிர்வந்து
என்னவரம்வேணும எந்தனைகேளுமென்றார்
அப்போசயிந்தவனும் அனேகவரங்கேட்டானே
கேட்டவரங்களெல்லாம் கிருபையாந்தான்கொடுத்தார்
ஆதிசிவன்கையாலே அதிகவரம்பேறுபெற்றான்
வீமனைக்கொல்லவென்று வேணவரங்கள்பெற்றான்
கெதைகொன்றைமாலையுங் கேட்டுமிகப்பேறுபெற்றான்
வரங்களதுபேறுபெற்று வாறானேசயிந்தவனும்
அஸ்தினாபுரத்தே ஆணழகனபோகவென்று
மகாதபசுபண்ணனதொரு மாமலையைவிட்டிறங்கி
நடந்தானேசயிந்தவனும் நாலுதிக்குந்தானதிர
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைகளுமே அதிகவனந்தானதாண்டி

வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
மூங்கிலடர்ந்தவனம முல்லைமல்லிபூத்தவனம்
எங்கும்புலிக்காடி இருக்கும்வனந்தாண்டி
மலைப்பாம்புகுடியிருக்கும் மல்லர்வனந்தாண்டி
இருளர்குடியிருக்கும இருண்டவனந்தாண்டி
கள்ளர்குடியிருக்கும் கனத்தவனந்தாண்டி
இருண்டவனந்தாண்டி யிளந்தோப்புந்தான்தாண்டி
வனமாம்வனந்தாண்டி வந்துவிட்டானத்திபுரம்
அத்திபுரத்தே ஆணழகன்போய்ச்சேர்ந்தான்
தென்னமுடிவேந்தன் திரியோதிரனிருக்கும்
சபையிற்சிம்மாசனத்திற் சயிந்தவனுமவந்தானே
மாதாக்கொண்டவனும் மைத்துனனைத்தான்பார்த்து
அரவக்கொடியோனும் அத்தானைத்தான்பார்த்து
கடுகவேவந்தானிரங்கிக் கைகொடுத்துகான்தழுவி
ஆடமல்லர்களே அருகிருக்குஞ்சேவகரே
சயிந்தவனுர்வீற்றிருக்கத் தங்காசனம்போடுமென
ஏவலபணிசெய்கிறவர் எல்லவருந்தான்கேட்டு
சொல்லப்பெற்றோமெனறுமவர் சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுமவர் கும்பிட்டெழுந்திருந்து
சேவகரெடுத்துவந்தார் சிம்மாதனமுமிட்டார்
அப்போதிரியோதிரன் அத்தானைத்தான்பார்த்து
வந்துநெடுநேரம் நின்றீரேமைத்துனரே
இட்டசிம்மாதனத்தில் ஏறியவன்வீற்றிரென்றான்
அப்போசயித்தவனும் ஆணலழகுமன்னன்
இட்டதொருசிம்மாதனம் ஏறியவன்வீற்றிருந்தான்
அப்போதிரியோதிரன் ஆணழகனேதுசொல்வான்
கானகங்கள்போனீரோ கர்த்தாவைக்காணவென்று
கர்த்தாவைக்கண்டீரோ கனத்தவரம்பெற்றீரோ
ஐவரையுங்கொல்லுதற்கு ஆனவரம்பெற்றீரோ
பஞ்சவரைக்கொலலுதற்குப் பலத்தவரம்பெற்றீரோ
எந்தன்மனங்குளிர எனக்கரியச்சொல்லுமென்றான்

அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
போனதுவும்வநததுவு புனிதரைக்கண்டதுவும
ஐவரையுங்கொல்லவந்து ஆனவரம்பெற்றதுவும்
நாலிரண்டுவார்த்தைகளாய் நடத்தினான்சயிந்தவனும்
கேட்டுமனமகிழ்ந்தான் கீர்த்திபெற்றோமென்றுசொல்லி
வெற்றிபெற்றோமென்று வேந்தன்மகிழ்ந்திருந்தான்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
மூன்றாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

மூன்றாவது, மூருக்கமகாரிஷிவனம் முற்றிற்று.

---

## ச-வது, காளமகாரிஷிவனம்.

---

நான்காம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
மூருக்கமகாரிஷிவனந்தனை மூடிமன்னர்தான்தாண்டி
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகாணகத்தில
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலே
மன்னிவைத்தசீமாடு வனவாசம்குடித்தனமாம்
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அப்பாலேபோகலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தார்பஞ்சவர்கள் [ள்
அவ்வனத்திற்போய்ச்சேர்ந்தார் ஐவர்பஞ்சபாண்டவர்க
பச்சைத்தழையொடித்து பாணசாலையுண்டுபண்ணார்
ஓரடிக்குப்பர்ணசாலை உண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடிக்குப்பர்ணசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஐந்தடிக்குப்பர்ணசாலை ஆணழகருண்டுபண்ணார்
பர்ணசாலைமேலேயல்லோ பஞ்சவர்குடித்தனமாம்
மாதுதுரோபதையும மன்னர்பஞ்சபாண்டவரும
காயுங்கனியுந்தின்று காலங்கழிக்கிறார்கள்
அவ்வனத்திற்பஞ்சவர்கள் அவரிருக்கும்வேளையிலே



தளமகாரிஷியினால் அனுப்பின வேதாளம் ஐவரைத்தேடிவர
ஐவர் இரந்திருத்தலால் வேதாளம் ரிஷியைக்கொன்றது.

மாநாகங்கொண்டதொரு மகாராஜனேது செய்வான்
அரவக்கொடியோனும் அங்கவனேது சொலவான்
சடைகள் நிறைந்திருக்கச்சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனாரே
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ வார்த்தைதெரியவில்லை
எந்தவனத்தி லிருக்கிறாரென்றறியேன்
காளியோண்டா நீ கடுகவேதானேகி
ஐவரையும் நீதேடி அவரிருக்குந்தாவரிந்து
தேடியே நீபார்த்துத் திரும்பிவந்துசேருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அங்கிருந்த தூதுவர்கள்
சொல்லப்பெற்றோமென்று சுருக்காயெழுந்தார்கள்
கூறப்பெற்றோமென்று கும்பிட்டவரெழுந்து
அஸ்தினபுரந்தாண்டி ஆரணியந்தேடிவந்தார்
காடுமலைகளிலுங் கடுகவேதேடிவாரார்
இடகாரன்வனந்தனிலே தேடினார்பஞ்சவரை
அங்கிலுங்காணாமல் அப்பாலேதேடிவாரார்
சாமரிஷிவனத்தில் நலமாகத்தேடிவாரார்
அங்கிலுந்தேடினார்கள் ஐவரையுங்காணாமல்
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னாதேடிவாரார்
அங்கெங்குங்காணவில்லை ஐவர்பஞ்சபாண்டவரை
காளமகாரிஷிவனத்தே கடிகியேவந்தார்கள்
காளமகாரிஷிவனத்திற் காவலர்கள்பஞ்சவரை
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்கிறாரென்றறிந்து ஏகிவழிநடந்தார்
காடுஞ்செடிதாண்டி கடிகியேவாரார்கள்
ஆறுஞ்சுனைதாண்டி அவசரமாயோடிவந்தார்
மகாராஜன்வீற்றிருக்கும் மண்டபத்தருகில்வந்தார்
திரியோதினனிருக்கும் சிம்மாதனமுன்னேவந்து
அரசனெதிரில்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டுதிரியோதிரன் கட்டழகனேது சொலவான்
பார்த்துதிரியோதிரன் பார்மன்னனேது சொல்வான்

போனீரேது துவரேபுதுமையென்னசொல்லுமென்றான்
ஐவரைத்தேடியே ஆரணியம்போனோமே
காளமகாரிஷிவனத்திற் கண்டோமேபஞ்சவரை
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டோமே
என்றுசொல்லத்தான்கேட்டு எரிநாகங்கொண்டவனும்
கண்கள்சிவந்தானே காந்தாளப்பட்டவனும்
மாமாவைத்தானழைத்து யாநாகனேதுசொல்வான்
இன்னமும்பஞ்சவர்க ளிருக்கிறார்கானகத்தில்
மாளாமற்பஞ்சவர்கள் வனமேதிரிகிறார்கள்
தப்பிப்பிழைத்தாலே தாரணியையாள்வாரே
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுஆள்வாரே
எந்தவிதமானாலும இறக்கவகைபார்க்கவேணும்
ஐவரையுங்கொல்லுதற்குஆலோசனைசொல்லுமென்றான்
மாமாவேயெந்தனுக்கு வார்த்தையுரையுமென்றான்
என்றதுதான்கேட்டு எதுசொல்வான்மருமகனுக்கு
சாமத்துரோகியவன் சகுனியெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லி குடிக்குச்சகுனியல்லோ
துரியனைத்தான்கெடுக்கச் சொல்லுகிறான்யோசனைகள்
அப்பாமருமகனே ஐவரையுங்கொல்லவென்றால்
நொடிக்குட்காளமகாரிஷியை நோக்கிதவம்பண்ணினாலே
அருந்தபசுபண்ணினாலே அந்தமுனிவந்திடுவார்
ஐவரைக்கொல்லவென்று அவரைமனுக்கேட்டால்
நல்லதென்றுசொன்னாலே நாடெல்லாமுன்னுதப்பா
தபசிற்பெரியவர்காண் சாமிக்கொப்பானவர்காண்
வரத்திற்பெரியவர்காண் மகாதேவர்க்கொப்பாவார்
அவராலேயாகுமப்பா ஐவரையுங்கொல்லுதற்கு
உன்னாலேயானமட்டும உத்தமனேபாருமென்றான்
என்றுசொல்லத்தான்கேட்டு எழுந்தான்திரியோதிரன்
உக்கிரமுடனெழுந்து ஒருவனுமாய்ப்போறானே
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமல்லோ அரியவனந்தானதாண்டி
ஆரணியந்தன்னிலே அரவக்கொடியோனும்

வந்துமிருந்துமவன் மகாதபசுபண்ணுகிறான்
காளமகாமுனியைக் கருதிமனதிலெண்ணி
அருந்தபசுபண்ணினனே அரவக்கொடியோனும்
வேணதபசுபண்ணினன் வேந்தரைக்கொல்லவென்று
பாவிதபசுபண்ணினன் பஞ்சவரைக்கொல்லவென்று
இப்படியாய்த்தவமிருந்தான் கரிநாகங்கொண்டவனும்
அப்போமகாமுனியும் அறிந்தார்தவநிலையை
சடையுஞ்சடைமுடியும் தம்பிரான்போலாக
இவருடையசடையழகும் ஈஸ்பரரைப்போலாகக்
காலில்பெருவடியும் கையிற்கமண்டலமும்
திரியோதிரனருகே சேரவருகையிலே
கண்டுதிரியோதிரனும் கடுகவெழுந்திருந்து
பார்த்துதிரியோதிரனும் பற்றற்றோர்கெதிரில்வந்து
முத்துமுடிவேந்தன் முனிக்கெதிரிலோடிவந்து
சுத்திவலம்வந்து தொழுதிறங்கித்தெண்டனிட்டான்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகன்கோமானும்
வாய்மூடிநின்றானே மன்னவதிரியோதிரனும்
காளமகாமுனியும் கண்டுமனங்குளிர்ந்தார்
சிந்தைமனங்குளிர்ந்து தேகங்கள்பூரித்து
சந்தோஷமானாரே சாமிபெரியவரும்
மெத்தமகிழ்ந்தவரும் வேந்தனைப்பார்த்துரைப்பார்
ஆர்காணும்ராஜாவே அரசர்பெருங்கோமானே
எதுக்காய்வந்தாய்நீ இங்குதவம்பண்ணுகிறாய்
என்னநினைத்தாய்நீ வந்தகருமமென்றார்
மனதிலேநினைத்ததெல்லாம் மன்னவனேசொல்லுமென்றா
ர், வேண்டும்வரங்கொடுப்பேன்வேந்தனேசொல்லுமென
றார், அப்போதிரியோதிரன் ஆணழகன்தான்பார்த்து
சர்ப்பக்கொடியோனும் சந்தோஷமானானே
அரவக்கொடியோனும் அங்கேமனமகிழ்ந்து
ஆண்டவரே நீர்கேளும் அடியேனோர்விண்ணப்பம்

என்சாமிகேளுமையா எந்தனுடவிண்ணப்பம்
அஸ்தினுபுரயாண்ட அரவக்கொடிவேந்தன்
திக்கரசையாண்டகொரு கிரியோதிரனெனபார்
எந்தன்மனக்கவறையால் வந்தேனுமைக்காண
கண்டேன்களிகூர்ந்தேன் கவலையைச்சொலலுகிறேன்
பண்டுப்பகையாளி பாதிநாள்தாயாதி
எண்ணுமபகை யாளி இருக்கிறார்சத்ராதி
எந்தன்பகையாளர் இயலானபஞ்சவர்கள்
பாண்டுமகாராஜன் பெற்றெடுத்தபஞ்சவர்கள்
இப்போதுதங்களவனத் திருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரையுங்கொலல அதிகமனதெந்தனுக்கு
ஐவரையுங்கொன்றாலே ஆளுவேன்ராச்சியத்தை
அவர்களைக்கொல்லுதற்கு அடியேனலாகாது
உம்மாலேயாகுமென்று உபமைநினைத்தழைத்தேன்
ஆகையாலெந்தனுக்கு அதிகவரந்தாருமென்றான்
பஞ்சவரைக்கொல்லுதற்கு பலத்தவரந்தாருமையா
அநேகநாளுமை க்கோரி அரியதவம்பண்ணிநின்றேன்
நீ-வந்தபொழுதெந்தன் மனங்குளிர்ந்தேனுடவரே
இந்தவரமெனக்கு யீந்திடுவீர்கர்த்தாவே
சொல்லவரமெனக்குக் கொடுத்தருளவேணுமையா
என்று-பாதம்பணிந்தானே பாமபுக்கொடியோனும்
அந்தமகாமுனியும அவர்மனதுதான்குளிர்ந்து
காளமகாமுனியுங் கடிகிமனமகிழ்ந்து
சந்தோஷப்பட்டாரே சரீரங்கள்பூரித்தார்
மெத்தமகிழ்ந்தாரே வேந்தரந்தயாமுனியும்
மனதுக்கிசைந்தபடி மன்னவனேசெய்கிறேனன
சித்தத்துக்கேற்றபடி செய்வேன்நீ அஞ்சாதே
ஐவரையும்கொன்று நான் அதம்பண்ணிப்போடுகிறேன
பஞ்சவரைக்கொன்று பாருலகையாளவைப்பேன்
ஐயர்தனக்காக ஆதிசிவன்வந்தாலும்
பஞ்சவரைக்காக்கப் பாரளந்தார்வந்தாலும்
நான்முகப்படைத்த நற்பிரமன்வந்தாலும்

வெற்றிமயிலேறும் வேலவர்தான்வந்தாலும்
தேவர்க்கதிபதியாம் தேவேந்திரனவந்தாலும்
இவர்களைக்காப்போமென்று எமனவன்வந்தாலும்
எந்தவிதத்தாலும் இறக்கவகைபண்ணுகிறேன்
என்றுவரங்கொடுத்தார் எரிநாகங்கொண்டவர்க்கு
அப்போதிரியோதிரன் ஆனந்தமானானே
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே விஷநாகங்கொண்டவனும்
மனங்களிப்பூரித்து மாநாகன்போய்நடந்தான்
காளமகாமுனியுங் கடிகிவனத்தில்வந்தார்

காளமகாரிஷி ஐவரைக்கொல்ல நினைத்தது.

---

அப்போதுமாமுனியும் ஆலோசனைகள்பண்ணி
வேதாளந்தான்பிறக்க வேள்விதனைவளர்க்க
அக்கினிக்குண்டம்வெட்டி அனலைவளர்த்தினானே
பாதாளக்குழியைவெட்டி பாவனைமூட்டினானே
மந்திரத்தாலேயல்லோ வாவென்றார்வேதாளத்தை
ஆயன்பெருமாளும் அவ்வயணந்தானறிந்தார்
ஏழுலகமாளுகின்ற எம்பெருமாளென்னசொல்வார்
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
பங்கு பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலேயும் இறக்கவகைபண்ணுகிறான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சதராதி
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்வரலாச்சே
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
தோளிற்பூமாலை தொண்டழிந்துபோகுதே
கையிற்செபமாலை கலங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராஜாக்கள்மாளுகிறார்
நம்பினபேர்களைத்தான் நாமல்லோகாக்கவேணும்
கைமோசம்வந்ததென்று கரியமால்தானினைந்து

எம்பெருமாள் பஞ்சவரைக் காப்பதற்கு

எமபுரம்போனது.

அப்போதுஎம்பெருமா ளாயரெழுந்திருந்து
வட்டமாங்கருடனேறி வருகிறார்மாயவனார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
சில்லென்றுபூத்ததொரு செடியும்வனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
இளமானைப்போலே யிசைந்துவருங்காவேரி
வடமலைரங்கர் வனங்களெல்லாந்தான்தாண்டி
எமபுரந்தேடியே எம்பெருமாளோடிவந்தார்
எமனுக்கெதிராக எம்பெருமாள்வந்துநின்றார்
எமதர்மராஜனவன் எம்பெருமாளைக்கண்டு
கரியமாலைப்பார்த்து கடுகவெழுந்திருந்து
மாயன்பெருமாளை வந்துநமஸ்கரித்தான்
எமபடாளோடி யெடுத்துவந்தார்சிம்மாதனம
இட்டதோராசனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
அப்போதுஎம்பெருமாள் அரிராமர்தானெழுந்து
சிம்மாதனமேறி ஸ்ரீராமர்வீற்றிருநதார்
வேர்க்கவிருவிருக்க வேந்தராவீற்றிருந்தார்
அப்போதுஎமனவன் ஆயரைப்பார்த்துரைப்பான்
எங்குவந்தீர்மாயவரே எனக்கறியச்சொல்லுமென்றான்
ஏதுவகையாக எம்பெருமாளிங்குவந்தீர்
வந்தகருமத்தை வாய்திறந்துசொல்லுமென்றான்
மாயன்பெருமாளும வார்த்தைகளேதுசொலவார்
உனனுடையமைந்தனல்லோ உருமையுள்ளதருமருமே
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அநீதமாய்மாளுகிறார்
இறந்துவிடநாளாச்சு இயலானபஞ்சவர்கள்
மாண்டுவிடநாளாச்சு மகாராஜமன்னவர்கள்

செத்துவிடானாச்சு சிரானபஞ்சவர்கள்
பாவிகெடுத்ததேனே படுபாவிதிரியோதிரன்
நொடிக்குள்காளமாமுனியை நோக்கித்தபசுபண்ண
அந்தமகாமுனியும வந்துஎதிரில்நின்ருர்
கண்டுதிரியோதிரன் கடுகசரணம்பண்ணி
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகன்நின்ருனே
அப்போதுமாமுனியும் அறவேமனமகிழ்ந்து
காளமகாமுனியுங் கண்டுமனமகிழ்ந்து
என்னவரம்வேண்டும் எந்தனுக்கேளுமென்ருன்
அப்போதிரியோதிரன் ஆணழகனேதுசொல்வான்
ஐவரையுங்கொல்லுதற்கு ஆனவரம்வேணுமென்ருன்
பஞ்சவரைக்கொல்லுதற்குப்பலத்தவரம்வேணுமென்ரு
ன், உம்முடையகையாலேஉத்தமரைகொல்லுமென்ருன்
அந்தமுனிகேட்டு அப்படியேநல்லதென்று
வாக்குவரங்கொடுத்து வந்தானேயந்தமுனி
ஆழக்குழிபறித்து அகினியைமூட்டிவைத்தான்
வேதாளமுண்டுபண்ண மிககவனல்மூட்டிவைத்தான்
அக்கினிக்குழியிலே ஆங்காரவேதாளம
பிறக்கும்படியாகப் பெருத்தவேள்விபண்ணுகிருன்
அதுபிறந்ததாமானல் ஐவர்பிழைபார்கள்
தோளிற்பூமாலை தொண்டழிந்துபோகுதே
கையிற்சப்பாலே கணங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம உருக்குலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராஜாக்கள்மாளுகிருர்
ஆகையாலும்மை அழைக்கவேவந்தேன்காண்
வேதாளம்பிறந்தாலே வேந்தரைக்கொன்றுவிடும்
மாண்டுமடிவார்கள் மகாராஜர்பஞ்சவர்கள்
செத்துமடிவாரே சிரானபஞ்சவர்கள்
என்றுரைத்தார்மாயன் ஏமனுடனுக
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயருக்கேதுரைப்பான
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவர்காலயஉள்ளமட்டும்
உம்மையேநம்பியல்லே. உயிர்கொண்டுலாவுகிருர்

காக்கக்கட னுமக்குக் கரியமாலென்றுசொன்னார்
அப்போதுமாயவனா அறவேமனமகிழ்ந்து
மாயவனார்தான்கேட்டு மனதுபெரிதுதந்து
கூடவருவீரோ கொப்பெனவேபோவென்றார்
ஆயருரைகேட்டு அப்படியேவாரேனென்றார்

எம்பெருமாளும் எமதர்மராஜனும்
பஞ்சவரைக்காக்க வருதல்.

---

மாயவரும்எமனுமே வருகிறார்வனந்தனிலே
எமபுரத்தைவிட்டுமல்லோ இருவருமாய்வாரார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதானதாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தானதாண்டி
இருண்டவனநதாண்டி இருவருமாய்வாரார்கள்
காளமகாமுனிவருட காவகத்திலவநதார்கள்
எமன்கிடாமேலே எம்பெருமாள்கருடன்மேலே
அந்தவனத்திலே வந்தாரிருவர்களும்
வந்துஇறங்கினார் மகாமுனிவர்தனவனத்தில்

எம்பெருமாள் தடாகம் உண்டுபண்ணல்.

---

ஆயர்பெருமாளும் அங்கெனவேயேதுசெய்தார்
அந்தரப்பொய்கையொன்று ஆயருமவுண்டுபண்ணார்
மாயமாயப்பொய்கையொன்று மாயவருமுண்டுபண்ணார்
அகலபநிகளமாய் ஆறுயோசனைகாதம
பத்துயோசனைதூரம பாரளநதாருண்டுபண்ணார்
தாமரைபம்பொய்கைதனை சாமியவருண்டுபண்ணார்
அலர்தாமரைப்பொய்கை அங்கெனவேயுண்டுபண்ணார்
அல்லியுடன்தாமரையும ஆம்பலுமுண்டாச்சு
அழகானபொய்கையிலே அதிசயமென்னவென்றால்
அல்லியுங்கொட்டியுமே அதிலநெருங்கவுண்டாச்சு
அநதபததாமரை அக்குளததிலுண்டாச்சு
நாணலுங்கோரையுமே நடுவேயதிலுண்டாச்சு

அக்குளத்துக்கரையிலே அழகானபூமரங்கள்
மல்லிகைமுல்லையுமே மாதளையுமுண்டாச்சு
நல்லதொருபூவலரும் புற்றும்மையுண்டாச்சு
கொன்றைதருக்கத்தி கோங்குமுல்லையுண்டாச்சு
ஆற்றலரிமந்தாரை அழகானசண்பகங்கள்
ஆலஞ்செடிமுளைத்து அரசுமேயுண்டாச்சு
வேப்புமரமங்கே வேணதுமுண்டாச்சு
பாளைமணம்வீசும் பன்னீருபூக்கும்
வண்ணவண்ணப்பூமரங்கள் மாவிருட்சமுண்டாச்சு
கமுகுகுலைசரியும் கஸ்தூரிமணம்வீசும்
வேரிற்பலாப்பழங்கள் வெடித்துவிழுந்திருக்கும்
மாம்பழமெங்கெங்கும் வணத்திற்பழுத்திருக்கும்
பார்த்தவிடங்களெல்லாம் பழங்கள்பரிமளிக்கும்
கண்டவிடங்களெல்லாம் கனிகள்மணம்வீசும்
இப்படியாயுண்டுபண்ணார் எம்பெருமாள்மாயவரும்
காலாகாலங்களிலே கட்டினகுளம்போலே
ஆயன்பெருமா னதிசயமாயுண்டுபண்ணார்

எமனும் பெருமாளும் வேறுவடிவு கொண்டது.

---

எமதர்மராஜாவ ரென்னவடிவெடுத்தார்
எமபுரத்ததானாநிற எமன்குயிலானார்
எம்பெருமாள்மாயவனா ரென்னவடிவானார்
புள்ளிமான்குட்டியைப்போல்பொன்மான்வடிவெடுத்தார்
அந்தநல்லபொன்மானி னதிசயத்தைச்சொல்லுகிறேன்
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்ந்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியிலேவிட்டாற்போல்
மேகத்திலேயெழும்பும் மின்னலதுபோலே
தூரத்திலேயெழும்பும சோதியதுபோலே
எட்டுநாள்சென்றகுட்டி யேந்துங்குழந்தையைப்போல்
மான்குட்டிபோலாக மாயவனார்வடிவெடுத்தார்
பஞ்சவர்கள் தானிருக்கும் பானசாலைதேடிவாறார்

மூன்றடுக்குப்பர்னசாலை மூன்றிலேயோடிவந்து
ஏழடுக்குப்பர்னசாலை எதிராகவந்துநின்றாள்
நடந்துவிளையாடி ராஜாத்திமுன்னேவந்து
துள்ளிக்குதித்துதங்கே துரோபதையாள்முன்றிலே

தருமரைத் துரோபதை மான்பிடித்துத்
தரச்சொன்னது.

---

கண்டாளேபாஞ்சாலி கானகத்துமானதனை
மானழகைப்பார்த்தாளே மயிலனையாள் துரோபதையும்
கண்டுமனமகிழ்ந்தாள் கட்டழகிதுரோபதையும்
பார்த்துமனங்குளிர்ந்தாள் பஞ்சவர்கள்தேவியவள்
மான்பிடிக்கவேணுமென்று மனதில்நினைந்தோமே
ஆர்பிடித்துத்தருவார்க ளழகானயிம்மானை
தருமரைக்கேட்போமென்று தானெழுந்தோடிவந்தாள்
தருமரருகேவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டாள்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டாள்
வணங்கிநமஸ்கரித்தாள் மாது துரோபதையும்
தக்கபுகழ்பெரிய தருமரவரேது சொல்வார்
வணங்குமுடியாளே மங்கைதுரோபதையே
எதுக்குப்பெண்ணே நீ என்னைவந்துதெண்டனிட்டாய்
பின்னையுந்தெண்டனிட்டாய் பிள்ளைகளைப்பெற்றிடுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
தெண்டனிட்டகாரியத்தை தெரியவுரையுமென்றார்
வந்துபணிந்ததொரு காரணத்தைச்சொல்லுமென்றார்
என்றுமவர்கேட்க ஏதுசொல்வாள் துரோபதையும்
ஏதோவொருமான்வந்தெதிரிலேநிற்கிறதே
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்த்ததுபோல்
மேகத்துமின்னலைப்போல் தேகமதுதோணுகுது
தூரத்துச்சோதியைப்போல் தோணுதுயெந்தனுக்கு
உச்சிதமாகவே உருகுதுயெந்தனுக்கு
அதிசயமாய்த்தோணுகுது அந்தயானெந்தனுக்கு

மானொன்றுவேணுமையா வனத்தில்விளையாட
விளையாடவெந்தனக்கு வேணும்பிடித்துத்தாரும்
மான்பிடித்துத்தருவீரென்று மன்னவரேதெண்டனிட்டே
எந்தவிதந்தானும் எனக்காகப்பிடியுமென்றாள்        [ன்
பிடியும்பிடியுமென்று பின்னொருக்கால்தெண்டனிட்டாள்
மான்பிடித்துத்தாருமென மற்றொருகால்தெண்டனிட்டா
அப்போதாதருமலிங்கர் ஆணழகர்தானகேட்டு        [ள்
தக்கப்புகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
ஆர்வளர்த்தமானோயிது அறியேனிளமயிலே
எவர்வளர்த்தமானோயிது யேதுமறியேனே
இந்தவனத்தி லிருக்கும்பெரியவர்கள்
தவத்திற்பெரியவர்கள சன்னியாசியானவர்கள்
யோகத்திற்றானிருக்கும் யோக்கியமுள்ளவர்கள்
ஆர்வளர்த்தமானோயிது அறியேனே ஆரணங்கே
எவர்வளர்த்தமானோயிது எதுமறியேனே
மனிதவனாந்தரத்தினால் வந்தது நம்மருகே
அல்லாதேயாமானால் அருகில்வந்துநிற்காது
வளர்த்தமானாயினால் வந்துவிளையாடுகுது
மானைப்பிடித்தாலே வெகுமோசம்வந்துவிடும்
இம்மானைப்பிடித்தாலே இடுக்கம்வந்துநேர்ந்துவிடும்
பெண்புத்திகேட்டுமோசம் போனவர்கள்மெத்தவுண்டு
பெண்ணாலேகெட்டவர்கள் பூமியிலேமெத்தவுண்டு
ஆணாலேகெட்டவர்கள் ஆருமில்லைவையகத்தில
ஸ்ரீராமர்பட்டதொரு சேதிபோலாகுமிது
அரிராமர்பட்டதொரு அலைச்சல்போலாகுமிது
ஆசையாற்பெண்மயிலே அம்மானைப்பிடியென்றாய்
அதுகேட்டு அம்மாதையாள் ஆரணங்கேதுசொல்வாள்
அரிராமர்பட்டதொரு அலைச்சல்தனையுமிப்போ
அதைக்கதையெனக்கு ஆண்டவரேசொல்லுமென்றாள்
மாயவனார்பட்டதொரு வாலாற்றைச்சொல்லுமென்றாள்
எம்பெருமாள்பட்டதொரு இடுக்கங்கள்சொல்லுமையா

## தருமர் துரோபதைக்கு மான்பிடிக்கலாகாதென்று ஸ்ரீராமர் கதையைச் சொன்னது.

---

அப்போது தருமலிங்கம் ஆனமழகரேதுசொல்வார்
ஆனாற்கேள்பெண்ணே அவர்கதையைச்சொல்லுகிறேன்
ராமருலக்ஷ்மணரும் நற்சீதைதன்னுடனே
கைகேசிசொற்படிக்கு கானகத்தேபோயிருந்தார்
தென்னிலங்கைராவணனும் சீதையழகுகண்டான்
சூர்ப்பநகைசொல்லாலே துள்ளிப்பதைபதைத்து
இலங்கையைவிட்டுமவன் ஏகிநடந்தானே
சீதையைச்சிறையெடுக்கதென்னிலங்கைவிட்டுவந்தான்
கண்டானேமூவர்களைக் கானகத்திற்ராவணனும்
ஜானகியைக்கொண்டுபோகச் சமையமில்லையென்றவனும்
உற்றுநினைத்தானே ஒருகோடிபுத்திகளை
இருந்துநினைத்தானேயெண்ணமுற்றசிந்தையிலே
ஆலோசனைபுரிந்து அந்தப்படுபாவி
மாரீசனையழைத்து மானாகச்செய்துவிட்டு
போய்நில்லுஞ்சீதையிடம் பொன்மானேயென்றுரைக்க
பொன்மானதுகேட்டுப் போகமாட்டேனென்றுசொல்லி
மாட்டேனென்றுசொன்னசொல்லை மகாபாவிதான்கேட்டு
அவ்வளவிலம்மானை அடித்தான்பிரம்பாலே
அடிபட்டுஓடுகுது அந்தவனந்தனிலே
மாளவனுப்பிவைத்தான் மாரீசப்பொன்மானை
சீதையிருக்குமிடந் தேடியேஓடிவந்து
மயிலனையாள்முன்னேவந்து மானும்விளையாடும்
கண்டாளேசீதையரும் கானகத்துமானதுவை
ஸ்ரீராமர்முன்னேவந்து தேவியருமேதுசொல்வாள்
மானழகைக்கண்டேனதைத் தானபிடித்துவாருமென்று
மானபிடித்துதாருமென மலரடியைத்தெண்டனிட [ள்
ஸ்ரீராமர்தான்கேட்டுச் சிந்தைமனங்கலங்கி
மான்வந்தமாயமெல்லாம் மாயவனார்தாமறிந்து

மானல்லபெண்ணேயிது மாயமானென்றுசொன்னார்
அல்லவென்றார்கேளாமல் அனேகந்துயராழுற்றாள்
துயராழுற்றாளென்றுசொல்லி சுவாமியனதிலெண்ணி
ராமரும்லெட்சுமணரை நலமாகத்தானழைத்து
மான்பிடித்துநான்வருவேன் வாரமட்டுந்தம்பியரே
சீதையருகாகத் திரமாயிருப்பாயென
இளையபெருமாளும் இவ்வார்த்தைதானகேட்டு
அப்படியேகாத்திடுவேன் அண்ணாவேபோமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமர்போகலுற்றார்
அம்புவில்லுங்கைபிடித்து அவ்வனத்தினூடாக
மானைத்துரத்தியே மாயவனார்போனபின்பு
தென்னிலங்கைராவணனும் உன்னுடன்வேகமதாய்
பத்துத்தலையையொளித்து பத்திரண்டுகையைமறைத்து
நல்லவொளிமறைத்து ராவணன்பேர்மறைத்து
சங்கமனைப்போலே சண்டாளன்வாறானே
பண்டாரம்போலேயல்லோ படுபாவிவாறானே
வனமாய்வனந்தாண்டி வந்தானேபானசாலை
இவரிருந்தசாலை யிவனறிந்தானப்போது
பாவிநினைந்தானே மகாபாவிசண்டாளன்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
மான்பிடிக்கப்போனதொரு மாயவனுமேதுசெய்தார்
அந்தமான்தன்னைக்கையிலே அகப்படாத்தன்மையினால்
கையினால்வில்லைத்துக் கணைகளைத்தான்தொடுத்தார்
அம்புகணைத்தொடுத்து அம்மானையெய்தாரே
ராட்சதமான்விழுந்து லட்சுமணாவெனவலற
அந்தமொழிகேட்டு அழகானசீதையரும்
மாணக்கையிலுங்களண்ணன் மடிந்தாரெனவுரைத்தாள்
இளையபெருமாளும எழுந்துநடந்தாரே
ராமரைத்தேடியே லட்சுமணர்போனபின்பு
தென்னிலங்கைராவணனும் சீதையருகில்வந்து [ள்
பிச்சையென்றுகேட்கையிலே அச்சமில்லாதள்ளிவந்தா
கூசாமல்ராவணனுங் கொண்டுசென்றான்தென்னிலங்கை

சீதைசிறைபோனபின்பு திருமாலவர்பார்த்து
நல்லமிதென்றுசொல்லியல்லோ நடந்தாரிருவருமாய்
சவரியைக்கண்டல்லோ சந்தோஷம்படைந்தார்
அனுமானைக்கண்டுமே அவர்களுறவாகி
அனுமாருறவாலே அங்குதனுசுக்ரீபனும்
செத்தஉறவானார் வேந்தரிருவருமே
வாலியைக்கொன்றபின்பு வானரவீரருக்குள்
சுக்ரீபனுக்குப்பட்டஞ் சூட்டிக்கடல்தனில்
வாராவதிகட்டியல்லோ வந்தார்கள்தென்னிலங்கை
ராவணன்கும்பகர்னன் ராட்சதயிந்த்ரசித்தன்
மூலபலச்சேனை முடிந்ததுராமர்கையால்
சேனைகளைக்கொன்றலவோ சீதைசிறைமீட்டி
புட்பரதமேறி புண்ணியர்கள்வந்தாரே
அயோத்தியாபுரிதனில் அரிராமாவந்துவிட்டார்
சீதாசமேதராக சிம்மாதனமேறி
தம்பிமார்மூவர்களுந் தானுங்கொலுவிருந்தார்
நீதிதவறுமல் நெறிப்படிபேஆண்டிருந்தார்
ஐம்பத்தாறுதேசமதை ஆண்டாரேஒருகுடைக்கீழ்
அந்தக்கதையாகும் ஆரணங்கேநீகேளும்
சீதையம்மான்பட்டதொரு சேதியிதுவாகும்
மானைப்பிடிக்கவே மாட்டேனெனவுரைத்தார்

மானைப்பிடித்துத் தாவில்லையென்று துரோபதை
யம்மன் பிணங்கினது.

---

தக்கபுகழுடைய தருமரிவையுரைக்க
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடை துரோபதையும்
ஏதேதுசொன்னாளும் இரங்காயனதுடையாள்
வருப்விதியறியாளே மாதுகருங்குழலும்
எந்தவிதத்தாலும் இந்தமானைவேணுமென்றாள்
மானெனக்குவேணுமென்று மாதுபிணங்கிநின்றாள்
அறவேமனஞ்சலித்து அங்கேதுயரமிட்டாள்

தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
சாயாபபுலனைரவர் தானுமங்கேயேதுரைப்பார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
வீமாமதகரியே விசைவேந்தேயிப்போது
மான்குட்டியொன்றுமென்று மாதுபிரசவிக்கினதால்
குட்டிமானைப்பிடித்துக் கொண்டுவாவேவாருமையா
காட்டிலேமானைப்பிடித்துக் கடுக்கவேவாருமையா
ஓடிப்பிடித்துநீ ஒருநொடியில்வாருமென்றார்

வீமன் மான்பிடிக்கப்போகிறது.

---

அண்ணருரைகேட்டு ஆங்காரவீமனவன்
இதுபோதுமென்றுசொல்லி எழுந்தானேவீமனவன்
இல்லடந்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஆயுதங்கைப்பிடித்து ஆணழகனபோகலுற்றான்
மானைத்தொடர்ந்தானே மதவீமராஜாவும
துள்ளிப்பாய்ந்துபாய்ந்துச் சுருக்காய்வருவாராம்
வீமனைக்கண்டிலையோ மெள்ள நடப்பாராம்
அப்போமதவீமன் ஆங்காரங்கொண்டவனும்
மானைப்பிடிக்க மாயவனுபின்தொடர்ந்தான்
எட்டிப்பிடிக்க எதிரில்வருவானும்
பதுங்கிவருவானும் பாரமதவீமன்
ஐம்பதிங்காதவழி அனேகதூரந்தானடந்தார்
கண்ணுக்குந்தெரியாமல் கடுகவேயேகிவிட்டார்
தேடித்திரிந்தானே சீரானகானகத்தில்
எண்ணுதுமெண்ணுகிறான் இயலானவீமனுமே
அண்ணன்தருமருக்கும் ஆரணங்குதுரோபதைக்கும
என்னவென்றுசொல்வேனிந்தவிதிவசத்தை
எத்தனைதூரம்வந்தேனே இம்மானைக்காணேனே
போனவிடமறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்

மாயமானபோனதொரு வகையொன்றும் நானறியேன்
என்று மனங்கலங்கி வெலை னுகிறாலபோடிபிநதை
தின்றுவிசாரமிட்டு நெடுமூச்செறிந்தானே
விடுவிச்சேரமங்கே வெயிலானவேளையிலே
நல்லவுருமமாது நாவுவறளுகுது
தண்ணீருந்தாகவிடாய் தனிமையாய்க்கொள்ளுகுது
நாவுவறடுகுது நல்லஜலங்காணாமல்
குடலைப்பிறட்டுகுது குடிக்கஜலங்கிட்டாமல்
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிநடந்தானே

எம்பெருமான் வீமராஜனை விஷத்தண்ணீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

---

இதுதான்சமயமென எண்ணித்திருமாலும்
மாறுயிருந்தவரும் மயிலாய்வடிவெடுத்தார்
மயிலாய்வடிவெடுத்து மரத்திலையேறினரே
எமன்குயிலாகி யிருந்தானேமாயரண்டை
எமனகுயிலானார் எம்பெருமாள்மயிலானார்
மயிலுங்குயிலுமே வனந்தனிலேகூவுகையில்
அந்தககுரலகேட்டான் அழகானவீமனுமே
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தயிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
எனறுமவனசொல்லி ஏகிநடந்தானே
தேடியேவந்தானே சீதானபொய்கையண்டை
தாமரைப்பொய்கை தடாகத்தைக்கண்டானே
தாகவிடாய்தீர்நது தமயரண்டைபோவோமென்று
தண்ணீர்தடாகத்திலே இறங்கினன்தாள்வேந்தன
அந்தரமாய்மாயவருப அங்கொருவரேதுசொல்வார்
ஆடாதம்பியரே அள்ளிஜலமுண்கிறவன்
தண்ணீர்குடியாதே தாகவிடாய்தீராதே
இந்தக்குளமெனதுடா இந்தநதியெனதுடா
இந்தககுளத்திலே இறங்கிஜலமுண்ணாதே

இவ்வார்த்தைதான்கேட்டு இவலானவீமனவன்
வெற்றிமதயானை வீமனவனே துசொல்வான்
அந்தரமாய்ப்பேசுறது ஆரென்றுந்தெரியவில்லை
அந்தரதேவதையோ ஆகாசதுர்க்கைகளோ
மந்திரதேவதையோ வந்தெனனைக்கேட்கிறது
பேயோ பிசாசுகளோ பிணந்தின்னும்பூச்சிகளோ
ஆரென்றுநானறியேனே அறியவுரையுங்கள்
வெற்றிமதயானை வீமனுங்கேட்கலுமே
அந்தச்சமயத்தில் ஆயாவரே துசொல்வார்
ஆரானாலுந்தனுக்கேன் அப்புறத்தேபோவென்றார்
அப்போதுவீமனவன் அவ்வார்த்தைக்கேதுசொல்வான்
தாகவிடாய்கொண்டு தண்ணீர்குடிக்கவந்தால்
தண்ணீர்குடியாதே யென்றுமேசாற்றுவரோ
தடாகமிருக்கையிலே தண்ணீர்களைதீராமல்
குடியாமற்போவேனோ கொற்றவரேசொல்லுமென
தண்ணீர்குடிக்கவென்றால தாரணியிற்பயிர்களுக்குள்
வாடாதபயிருமெது வருத்தமானபாரமெது
அதிசயமான வார்த்தை அறிநதாலுரையுமென்றார்
அப்போதுவீமனவன் அவ்வயணமறியாமல்
தெரியாமல்வீமனவன தீர்த்தம்புசித்துவிட்டான்
தாகக்களையாலே தண்ணீர்குடித்துவிட்டான்
காலையந்தவீமனுக்கு கண்ணைச்செருகுதே
தலையைச்சுழற்றுதே தாமமுடியானுக்கு
உடம்புபறக்குதே உத்தண்டவீமனுக்கு
மரத்தடியிற்பள்ளிகொண்டான் மாலைமுடியானும்
மறந்துபடுத்தானே மதகரிவீமனவன்
தன்னைமறநதுமல்லவோ தாவேந்தன்பள்ளிகொண்டான்
மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
காலனையேசரித்து கடுகவுயிர்வாங்குமென்றார்
எமனைத்தானழைத்து யிவனுயிரைவாங்குமென்றார்
அப்போதுவெமனவன் அவசரமாயோடிவந்து
சூலத்தால்குத்தியே பாசத்தால்கட்டினனே

சூலத்தால்குத்தியே துடிக் வுயிர்வாங்கினனே
பாசத்தால்கட்டியே பதைக்கவுயிர் வாங்கினனே
குளத்தங்கரையோரம குளிர்ந்த நிழல்தனிலே
பொய்கைக்கரையோரம் போர்வீமன்மாண்டுவிட்டான்
மாண்டுபடுத்தானே மகவீமன்குள க்கரையில
செத்துமடிந்தானே சேனைவீமனுமே
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மான்பிடிக்கப்போனதொரு வீமனைக்காணேமென்று

தருமராஜர் புலம்புகிறது.

---

தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
சாயாம்புமன்னர் தருமரவரேதுசொல்வார்
மான்பிடிக்கப்போனதொரு மன்னவனைக்காணேனே
என்னேரமாச்சுதே இன்னம்வரக்காணேனே
மானைப்பிடிக்கையிலே வளர்ந்தவர்கள் கண்டாரோ,
ஆர்கண்டெடுத்தாரோ ஆமமது செய்தாரோ
எவர்கொன்றுபோட்டாரோ ஏதுமறியேனே
மண்ணாக்கிக்கல்லாக்கி மரமாக்கிவிட்டாரோ
கல்லாக்கிமுள்ளாக்கிக் கானகத்திற்போட்டாரோ
செத்துமடிந்தானோ சிவன்பாதம்சேர்ந்தானோ .
மாண்டுமடிந்தானோ வைகுந்தம்சேர்ந்தானோ
காணவும்போவேனோ கட்டழகனதம்பியரை
பார்க்கவும்போவேனோ பாரமதகரியை
காணாமல்தம்பியரைக் கலங்குதேதேகமெல்லாம்
பாராமலதம்பியரைப் பார்க்குதேயென்மனது
காளையருச்சுனரே கடுகியேபோய்வாரும
பார்த்துவா அருச்சுனரே பாரமதவீமனை நீ
தேடியழைத்து நீ சீக்கிரத்தில்வாருமென்றார்
காளையந்தவீமனை நீ கண்டழைத்துவாருமென்றார்
என்றுமவர்சொல்லி யிருந்தார்வேறுவிதமாய்

## அருச்சுனமகாராஜன் தருமர்சொல்லைக்கேட்டு வீமனைத் தேடிப்போனது.

---

ஆறடிகுமன்னன் அருச்சுனராஜதுரை
தருமரைக்கேட்டுத் தம்பிமூத்ததுராவிஜயன்
ஜல்லடைக்கவிடமேல்லோ தட்டவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாபமைப்பூசுங்குளிட்டு
குந்தியிடுங்கால்களுக்குக் குரிஞ்சிபபூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் தாந்திப்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
பில்லைமுகப்பிருவேடிந்தலொட்டியாணம்
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசகுந்துவிட்டு
பாங்குசொருகினனே பார்த்தனிடப்புறத்தே
கத்திசொருகினனே காளைவலப்புறத்தே
சிங்காணிவில்லெடுத்து சிறுநாணிதானைபூட்டி
அண்ணனுடைபாதம் அடிவணங்கித்தெண்டனிட்டு
போகவிடைதாருமென்றான் போர்விஜயனகோமானும்
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
காளையருச்சுனரேகட்டழகாநீகேளும்
வனத்தினிற்புகுந்த மன்னவனை நீதேடி
கண்டழைத்துவிட்டு நீ ஓடிவாருமென்றார்
போய்வாருமென்று அச்சமில்லி பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தபோ விஜயபெருமானும்
வாராரே அருச்சுனனும் வனமாய்வனந்தாண்டி
கானகத்திலுட்புகுந்து மன்னவனைத்தேடுகிறான்
எங்கெங்குந்தேடினான் இனியவிடமாராய்ந்தான்
அந்தவனந்தனிலே அண்ணனைக்காணமல்
மற்றுமொருவனத்தில் மன்னவனைத்தேடிவாரான்
இன்னமொருவனத்தில் இளவிஜயன்தேடுகிறான்

அண்ணனைத்தேடியே அனேகதூரம்வாரானே
காட்டிலேதேடியல்லோ கடுகியேவாரானே
ஆறெழுதுமன்னன் அருச்சுனராஜனுக்கு
தண்ணீர்க்கவனங்கள் தாகவிடாய்கொள்ளுது
நாவுவரட்டுது நல்விஜயன் அர்ச்சுனற்கு
மெத்தக்களைத்தானே வேர்வைகள்சிந்திடவே
அப்போதருச்சுனனும் ஆனைமுகனேதுசொல்வான்
இந்தவனந்தனிலே எங்குமஜலங்கிட்டவில்லை
தண்ணீர்களையாலே தாகவிடாயானதினால்
தண்ணீர்தண்ணீரென்று தவித்துப்புலம்புகிறான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

மாயவனார் அருச்சுனராஜனை விஷநீர்க்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

---

எம்பெருமாள்மாயவரூப ஏனுசெய்தாரந்நேரம்
மயிலுங்குயிலுமாக வனத்திலேகூவுகிறார்
அர்ச்சுனன்காதிற்கேட்க அவ்வனத்திற்கூவுகிறார்
அந்தக்குரலோசை அருச்சுனருந்தானகேட்டு
கூவுங்குரல்கேட்டான் கோபாலமைத்துனனும்
அவ்வோசைதான்கேட்டு அர்ச்சுனனுமேதுசொல்வான்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தயிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுமவன்சொல்லி ஏகிநடக்கலுற்றான்
அந்தயிடப்போகவென்று ஆராய்ந்துதேடிவந்தான
குயிலிருக்குமிடந்தனிலே கொற்றவனும்வந்தானே
மயிலிருக்குமிடந்தனிலே மன்னவனும்வந்துநின்று
உற்றுற்றுப்பார்த்தானே ஒளிபறந்தகண்ணாலே
பார்த்தயிடங்களெல்லாம் பச்சென்றுதானிருக்கும்
கண்டயிடங்களெல்லாம் கமகமென்றுபூமணக்கும்
தாமரைப்பொய்கையுஞ் சாலையுஞ்சோலைகளும்
ஆலவிருக்ஷத்தின்கீழ் அண்ணாபள்ளிகொண்டதுவும

வெற்றியதயானை வீமனைக்கண்டானே
கண்டுமனமகிழ்ந்தான் காளையருச்சுனனும்
பார்த்துமனமகிழ்ந்தான் பார்த்திபனருச்சுனனும்
உற்றுற்றுப்பார்த்தானே உள்ளங்குளிர்ந்தானே
நின்றானைநாழி நினைத்தானேகோடிபுத்தி
அண்ணார்தருமருமே அங்கேமனஞ்சலித்து
வீமனைக்காணாதே மெத்தமனஞ்சலித்து
தம்பியைக்காணாமல் தவித்துப்புலப்புகையில்
அங்கேதருமரவர் ஆயாசப்பட்டிருக்க
இங்கேமதவீமன் இப்படித்தூங்குறானே
மானும்பிடியாமல் மரத்தடியில்தூங்குறானே
தண்ணீர்குடித்துமல்லோ தாகமுந்தீர்ந்தபின்பு [ன
அண்ணாரைதானெழுப்பி அழைத்துநாம்போவோமெ
தாமரைப்பொய்கையிலே யிறங்கினான்தார்வேந்தன்
அப்போதுமாயவரும் அர்ச்சுனனைத்தான்பார்த்து
ஆயர்பெருமாளும அந்தரத்திலேதுசெய்கார்
ஆடாயென்குளத்தில் அள்ளிஜலமுண்கிறவன்
எவனடாஎன்குளத்தில் எடுத்துஜலமுண்கிறவன்
இந்தக்குளமென்னுதடா இந்தநதியென்னுதடா
சாலையுஞ்சோலையுந் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்காதேயென்குளத்தில்
அள்ளிஜலமுண்ண அதிசயஞ்சொல்லுமென்றார்
தாகந்தணியவென்றால் சந்தேகஞ்சொல்லுமென்றார்
அப்போதருச்சுனனும் அவ்வார்த்தைக்கேதுரைப்பான்
என்னவதிசயமோ எந்தனுக்குச்சொல்லுமென்றான்
எம்பெருமான்மாயவரும் எதுசொல்வாரர்ச்சுனற்கு
வையகத்திற்பாரமெது வையகத்திற்பாரமெது
இவ்வார்த்தைசொன்னா லிறங்கிஜலமுண்ணுமென்றார்
ஆணைமுழுமன்னவன் அர்ச்சுனராஜதுரை
அவ்வார்த்தைதான்கேட் டருச்சுனனுமேதுசொல்வான்
ஆர்காணும்பேசுறது அந்தரத்திலேயிருந்து
எவர்காணும்பேசுறது எங்கையோதெரியவில்லை

வேண்டி விடாய்த்துநான் வேர்வைமிகவொழுக
தண்ணீர்விடாயாகத் தாகத்துக்குண்ணவந்தால்
வேண்டாமெனமறித்துத் திண்டாதெனவுரைத்தீர்
எதிரிட்டுவந்தாலே இருதுண்டமாய்ப்போட்டிடுவேன்
கண்டித்துப்போட்டிடுவேன் கண்ணிலதெரியடா நீ
எதிரிலே நிற்கவேணும் என் சண்டைபார்க்கவேணும்
சரியாக நின்றலவோ சண்டைபண்ணிப்பார்க்கவேணும்
என்றதுபேசியே இரங்கிஜலங்குடித்தான்
தாகவிடாய்தீரத் தண்ணீர்குடித்தானே
தண்ணீர்குடித்தவுடன் தலைமை சுழற்றுகுது
அப்போதுமயக்கமல்லோ அதிகமயக்கமாகும்
கஞ்சாமயக்கம் கனமயக்கமாகுது
அபினிமயக்கமல்லோ அவனைச்சுழற்றுகுது
தள்ளாடிவாருனே தாமுடியானும்
ஆறெழுகுமரனன் அச்சுனனானவன்
எண்ணுதியென்னுகிருன் இந்திரன்குமாரனுமே
நினையாதுநினைக்கிருன் நீவைர்வன்மைக்துணரும்
ஆரோதெரியாது அந்தரத்திற்பேசினர்கள்
எவரோதெரியாது எந்தனுடன்சொன்னரே
தண்ணீர்குடியாதேயென்று சமர்த்துகள்பேசினரே
தீர்த்தங்குடியாதென்று வார்த்தைபலசொன்னரே
அவ்வார்த்தைகளினை எள்ளிப்போதீர்த்தமுண்டேன்[ன்
சொன்னசொல்தனைமறுத்துத்தருக்காக தீர்த்தமுண்டே
உண்டபோழுதே உடம்பைபிரட்டுகைதயோ
தலையைச்சுழற்றுகைதயோ தருமருக்காருரைப்பார்
அண்ணற்தூர்தம்பியர்க்கும் ஆரனங்குதுரோபதைக்கும்
இந்தவிசேஷமதை எவர்கள்போய்ச்சொல்வார்கள்
செத்தவிசேஷமல்லோ சேதிபோய்ச்சொல்வாரார்
மாண்டவிசேஷமது மறுவார்த்தைசொல்வாரார்
என்றுமவன்சொல்லி ஏகிவழிநடந்தான்
தள்ளாடித்தத்தளித்துத் தானேநடந்துவந்து
அண்ணாருகாக அருச்சுனன்வந்துநின்றான்

வீமாருகாக விஜயனும்வந்துநின்றான்
கண்ணுறங்கப்போலவே கடுகிவந்துபடுத்தானே
வைபெருமாளையவரும் இதுதான்சமயமென்று
காலனையெச்சரித்தார் கயிறுமாட்டிடவே
அர்ச்சுனன்தன்னுயிரை அதிவிரைவாய்வாங்குமென்றார்
அப்போதியமனவர் அதிவேகமாகவந்து
சூலங்கொண்டிருத்தியே பாசங்கொண்டுகட்டினானே
பாதககையிர்மாய்ந்தான் பார்த்திபனர்ச்சுனனே
இப்படியாக இவன்மாண்டிருக்கையிலே
தக்கபுகழுடைய தருமருடசேதிசொல்வோம்

பின்னர்த்தேடப்போன அர்ச்சுனனும் வீமனும் இன்னம்
வந்து சேரவில்லையென்று தருமர்புலம்புகிறது.

---

அர்ச்சுனன்போனபின்பு அழகானதருமரவர்
மனதுகலங்கியே மன்னவருமேதுசொல்வார்
பாலகர்த்தேடப்போனவர்கள் கடுகவந்துசேரவில்லை
என்னமோசமோதெ யின்னமவரக்காணேன்
நாமதழகா தருவாதிவாருமென்றார்
தக்கபுகழுடைய தருமரழைக்கவேதான்
நாமமுடையான் நகுலனுமோடிவந்து
அண்ணரெதிரேவந்து அடிவணங்கித்தெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கட்டழகனேதுசொல்வான்
என்னையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றான்
அழைத்தகாரியத்தை நீ மன்னவசொல்லுமென்றான்
அவ்வார்த்தைதனைக்கேட்டு அழகர்தருமலிங்கம்
கண்ணீர்ததும்பிடவே கட்டழகரேதுசொல்வார்
வீமனைத்தேடியே விசயனும்போனானே
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணேன்
தேடியேபோனதொரு தேர்விஜயனைக்காணேன்
போனவிடமறியேன போய்ப்பதுங்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன

ஆரோடேசண்டை அமராதுசெய்கிறரோ
எவரோடேசண்டை எதிர்த்துப்போர்செய்கிறரோ
மாலைவளர்த்தவர்கள் வந்துவலைசெய்தாரோ
கண்டுவதைத்தாரோ கண்டதுண்டமாக்கிஞரோ
செத்ததுவும்பிழைத்ததுவும் சேதிதெரியவில்லை
மாண்டதுவும் பிழைத்ததுவும் வார்த்தைதெரியவில்லை
சந்தனமிருபுயந்தை சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுயந்தை குலையவெட்டிப்போட்டாரோ
மலையேபருவதமே வாழ்மலையேதஞ்சாமே
காணவும்போரேனே கட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போரேனே பாவியென்கண்ணாலே
இன்னமொருவேளை யினிகாணப்போரேனோ
இருவரையுந்தேடியே இட்டுவருவாயோ
போரீரோதம்பியரே புத்தியுள்ளகண்மணியே
அண்ணாருரைகேட்டு ஆணழகனேது சொல்வான்
அஞ்சிப்புலம்பாதே ஆயாசமாகாதே
ஆரோடேசண்டை அமராதுசெய்தாரோ
எவரோடேசண்டை எதிர்த்துப்போராடினாலும்
சண்டையதுகெலித்துச சடுதியிற்கொண்டுவாரேன்
அமராதுதான்கெலித்து அவர்களைக்கொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இப்போதேயாராய்ந்து
ஓடியழைத்து ஒருநொடியில் வாரேனென்றான
தேடியழைத்து சீக்கிரத்தில்வாரேனென்றான

நகுலன் தருமராஜாசொற்படிக்கு வீமனையும்

அருச்சுனனையும் தேடிப்போனது.

---

கடுகவெழுந்தானே கட்டழகன்சீர்நகுலன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூசசல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமெலலோ தட்டிவரிந்துகட்டி

தட்டிவரிந்துகட்டித் தாமரைப்பூச்சுங்குவிட்டு
பாக்கெடுத்துச்சொருகினனே மன்னனிடப்புறத்தே
கத்திசொருகினனே காளைவலப்புறத்தே
ஆயுதங்கைதானெடுத்து அண்ணருக்குத்தெண்டனிட்டு
போகவிடைதாருமெனப் போர்மன்னனைத்தொழுதான்
தக்கபுகழுடைய தருமர்மனமகிழ்ந்து
வாழ்த்திவிடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
நாமமுடையானே நகுலாவென்கண்மணியே
போனவரைத்தேடி பொறுமையுடன் நீபார்த்து
சென்றவரைத்தேடி சீக்கிரமாயாராய்ந்து
காளையிருவரையுங் கண்டழைத்துவாருமென்றார்
வீமனருச்சுனனை விரைவிலழைத்துவாரும்
போய்வாருமென்றவனைப் பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தானே வேந்தன்நகுலனுமே
வாரானேசிநகுலன் வடக்கெழுந்தசூரியன்போல்
ஆயுதத்தைக்கைப்பிடித்து அண்ணர்களைத்தேடிவாரான்
தேடியவனோடானே சீரானகானகத்தில
ஆரணியமங்குந்தேடி அண்ணர்களைக்கூவினான்
அங்கேயுங்காணுமல் அப்பாலேபோகலுற்றான்
மற்றோர்வனந்தனிலே மன்னர்களைத்தேடினான்
அங்கேயுங்காணவில்லை அழகர்மன்னர்களை
நாமமுடையான் நகுலன்மனங்கலங்கி
சிந்தைமலங்கியவன் திடுக்கிட்டுமெய்மறந்து
அழுதுபுலம்பினனே அண்ணர்களைக்காணுமல்
அப்போநகுலனுக்கு அதிகதாகமுண்டாச்சு
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயாகுது
நாவுவறட்டுது நகுலமகாராஜனுக்கு
அண்ணரைத்தேடியே அனேகதூரம்வந்தானே
அண்ணரைக்காணுமே அதிகதாகமுண்டாச்சே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிமனந்தளர்ந்து
என்றுவிசாரமிட்டே இருக்கின்றவேளையிலே

எம்பெருமாள் நகுலராஜனை விஷநீர்குடிப்பித்துக் கொல்லுகிறது.

---

அப்போதுமாயவரும் அங்கெனவேயேதுசொல்வார்
நாமமுடியான் நகுலனைக்கொல்லவென்று
எம்பெருமாள்மாயவரும் எமனையுச்சரிததார்
எமனும்ராமனுடன் இருவருமொன்றாகி
மயிலுங்குயிலுமங்கே வனத்திலேகூவுதது
நாமமுடியான நகுலனவன்பார்தது
அந்தக்குரலகேட்டு ஆலோசனைபண்ணுகிறான்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுமனங்குளிர்ந்து ஏகிநடந்தானே
அண்ணரிருவர்களு மங்கேபடுத்திருந்தார்
கண்டுமகிழ்ந்தானே கட்டழகன்சீர் நகுலன்
ஆனந்தமானானே அண்ணர்களைக்கண்டவுடன்
நாமமுடியான் நகுலனுமேது சொல்வான்
அண்ணர்தருமராயர் ஆயாசப்பட்டிருக்க
ஆரணங்குதுரோபதையு மங்கேபுலம்பிநிற்க
என்னமனதுகொண்டு இங்கேபடுத்தார்கள்
தண்ணீர்குடித்துநம்ம தாகவிடாய்தீர்ந்தபின்பு
அண்ணர்களையெழுப்பி அழைத்துநாமபோவோமென்று
குளத்திலிறங்கினானே கொப்பெனவேநகுலனவன்
மாயன்பெருமாளும் மலராமர்தவன்பார்த்து
அந்தரமாய்நின்று ஆயாவரேதுசொல்வார்
ஆரடாதம்பியரே அள்ளிஜலமுண்கிறவன்
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணாதே
தண்ணீர்குடியாதே தாமரைப்பொய்கையிலே
குளத்தைவிட்டிப்புறம்வா கொற்றவாயென்றுசொன்னார்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான் நகுலனவன்

ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரோதெரியாது எங்கேயோபேசுகிறீர்
வார்த்தைகள்கேட்குது வானந்தெரியவில்லை
சொன்னசொல்கேட்குது சொரூபந்தெரியவில்லை
அந்தரதேவதையோ சந்திசூரியரோ
ஆகாய கன்னிகைகளோ ஞானபிடாரிகளோ
ஆரோதெரியவில்லை அருகில்வந்துபேசுமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்
எங்கள்குளத்திலே நீ இறங்கிஜலமுண்ணவென்றால்
வையகத்திலிசைபெறும் வருத்தமானபாரங்களும்
வாடாப்பயிரின் வர்ணமுரைத்தாயானால்
இறங்கிஜலமுண்ணலாம் இல்லையென்றாற்போய்நடவும்
சொன்னாலே நீர்குடியும் சொல்லாமற்போனாலே
தண்ணீர்குடியாதே காமமுடியானே
குளத்திலடிவையாதே கொற்றப்போர்மன்னவனே
என்றதோர்சொற்கேட்டு எதிர்சொல்வான்சீர்நகுலன்
நீ கேட்கும்வார்த்தைக்கு நான்கேட்குந்தன்மையென்ன
நீயல்லநீர்தான நின்றுதான்பேசாது
என்னெதிரில்வந்தாலே இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
என்றுசிலவார்த்தை நின்றுமவன்பேசினனே
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்
மறுவார்த்தைசொல்லாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போது நகுலனுமே ஆனந்தமாகவேதான்
குளத்திலிறங்கியே கொப்பெனவே நகுலனவன்
தாகந்தெளியவே தண்ணீருந்தான்பொசித்தான்
தாகந்தெளிந்தானே தருமர்தம்பியானவனும்
தண்ணீர்பொசித்தவுடன் தாறுமாறாய்விழுந்து
தலையைக்கழட்டியது தார்வேந்தராஜனுக்கு
உடப்புறங்கதே உக்கண்டவீரனுக்கு
என்னதுமென்னுமென்றான் இயலானநகுலனுமே
ஆரோதெரியாது அந்தரமாய்ச்சொன்னார்கள்
அவ்வார்த்தைகேளாமல் அள்ளியேதீர்த்தமுண்டேன்

சொன்னசொற்கேளாமல் சுருக்காகத்திர்க்கமுண்டேன்
கண்ணுக்கெரியவில்லை காரணமுந்தோணவில்லை
திலமுந்தெரியவில்லை நினைவைமறக்குதே
அறியாதேநான்போசித்தே னென்றல்லோ ஆனழகன்
அண்ணற்குத்தம்பிமற்கு மானைக்குதுரோபனைக்கும்
அந்தவனந்தேடி ஆர்தான்போய்ச்சொல்வார்கள்
இந்தவிசேஷமதை எவர்போயுரைப்பார்கள்
தருமரிதையறிந்தால் சற்றும்பொறுக்காரே
அண்ணவுந்தம்பியரும் அழுதுபுலம்புவார்கள்
இங்கேவுயிர்வாங்கி யிவர்களிருக்கையிலே
அங்கேநகுலனுமே அண்ணரண்டைகண்டானே
மாண்டானேசீர்நகுலன் வசநாபிநீரையுண்டு
செத்தான் நகுலனுமே சிரானகானகத்தில
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே

வீமனையும் அர்ச்சுனனையும் அழைக்கப்போன நகுலனை
யுங்காணேனென்று தருமர் புலம்புகிறது.

---

அப்போது மன்னவரும் ஆனழகனேதுசொல்வான்
சகாதேவனையழைத்து தருமரவரேதுசொல்வார்
அப்பா சகாதேவா அதிசயத்தை நீர்கேளும்
மானைபிடிக்கப்போனதொரு மதவீமராஜனையும்
வீமனைக்காணவென்று வில்விஜயராஜனும்
தேடியேபோனானே தேர்விஜயனர்ச்சுனனும்
நலவிஜயனைத்தேட நகுலனும்போய்நடந்தான்
மூவர்களும்போனாரே முடிவேந்தராஜாக்கள்
ஒருவரையுங்காணேனே உத்தரவுதானறிய
மான்பிடிக்கப்போனவர்கள் வந்தின்னஞ்சேரவில்லை
தேடியேபோனவர்கள் திரும்பிவந்துசேரவில்லை
தம்பிசகாதேவா நாமமுடியானே
தேடியேபோராரோ சேதிவந்துசொல்வாரோ
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை

மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தை நானறியேன்
மானைப்பிடிக்கையிலே மான்வளர்த்தார் கண்டாரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணுரோ
சத்தரிஷிகளோ சந்நியாசியானவரோ
சத்தரிஷிபர்கள் சபித்துமேபோட்டாரோ
கொன்றுபழிவாங்கிக் கொலைசெய்துபோட்டாரோ
காணவும்போரேனே கட்டழகர் தம்பியரை
பார்க்கவும்போரேனே பாவியென்கண்ணாலே
இன்னமொருதக்கால் இங்கேவந்துசேர்வாரோ
இளையசகாதேவா மீட்டுக்கொண்டுவாராயோ
காளைசகாதேவா கண்டழைத்துவாராயோ
பாரமுடிமன்னர்களைப் பார்த்துமே நீயழைத்து
வருவாயோ தம்பியரே வார்த்தைகள்சொல்லுமென்ருர்
அப்போசகாதேவன் அண்ணரைத்தெண்டனிட்டு
தாமரையடியான் சகாதேவனேதுசொல்வான்
அஞ்சாதிரண்ணாவே அழைத்தோடிவாரேன் நான்
காளையந்தமூவரையும் கண்டழைத்துவாரேனென்ருன்
பார்த்தழைத்துவாரேனென்ருன் பாரமுடிமன்னர்களை
என்றுஎழுந்தானே இளையசகாதேவன்

சகாதேவன் தருமர்சொல்லைக்கேட்டு தமையன்மார்
மூவரையுந் தேடிக்கொண்டுபோனது.

---

சல்லடங்களிட்டெல்லோ தட்டிவரிந்துகட்டி
கட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
நீண்டிநிற்குங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துக்கிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குக் குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
சந்திரகாந்திகட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசொருகியல்லோ கடுகவெழுந்தானே

அண்ணரைத்தெண்டனிட்டு ஆணழகனேதுசொல்வான்
போகவிடைதாருமென்றான் போர்விஜயன் றம்பியவன்
தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
அப்பா சகாதேவா அறிவுள்ளகண்மணியே
அண்ணன்மார்போனதொரு அடவிதனிற்சென்று
காளையநதமூவர்களைக் கண்டழைத்துநீர்வாரும்
அண்ணர்களை நீர்கண்டு அழைத்தோடிவாருமென்றார்
போய்வாருமென்றுசொல்லி பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தானே வேந்தன்சகாதேவன்
அண்ணரைத்தேடியே அதிவிரைவாய்ப்போய்நடந்தான்
தமையர்களைத்தேடியே தார்வேந்தன்போகலுற்றான்
எட்டிநடந்தானே எழிலானசூரியன்போல்
தேடிவருகிறானே சிரானகானகத்தில்
எங்கெங்குந்தேடியே இனியவிடமாராய்ந்து
கடுகவருகையிலே காதடைத்திடுது
நாவுவறண்டுது நல்லஜலங்கிட்டாமல்
மெத்தக்களையாச்சு வேந்தன்சகாதேவனுக்கு
அப்போசகாதேவன் ஆணழகனேதுசொல்வான்
அண்ணர்களைத்தேடி அநேகதூரம்வந்தோமே
தண்ணீர்களையாகித் தாகமெடுக்குதையோ
எங்கெங்கேபார்த்தாலும் இனியஜலங்கிட்டவில்லை
அண்ணரையுங்காணேமே ஆரணியந்தன்னிலேதான்
என்றுமவன்சொல்லி இருக்கின்றவேளையிலே

எம்பெருமாள் சகாதேவமகாராஜனை விஷத்தண்ணீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

---

அப்போதுஎம்பெருமாள் ஆயரவரேதுசெய்தார்
வந்தசகாதேவனையும் வல்லுயிரைவாங்கவென்று
எமனும்பெருமாளும் ஏறினார்மரமேலே
மயிலுங்குயிலுமே வனத்திலேகூவுகுது

இந்தக்குரல்கேட்டு இளையசகாதேவன்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுநடந்தானே இளையசகாதேவன்
தாமரைப்பொய்கைகளும தண்ணீர்தடாகமுடன்
பூவளமுஞ்சோலைகளும் புதுமைகளைத்தான்பார்த்து
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
நாம்செய்தபுண்ணியத்தால் நல்லஜலங்கிடைத்ததென்று
அங்கேநடந்து அவசரமாய்வாரப்போது
மன்னரநகுலவர்களும் மரத்தடியிற்படுத்திருந்தார்
அண்ணார்கள்மூவருமங்கேபடுத்திருந்தார்
அண்ணாதனைக்கண்டு அதிகமனமகிழ்ந்தான்
தமையர்தனைக்கண்டு சந்தோஷமானனே
அப்போதொருவார்த்தை ஆணழகனேதுசொல்வான்
அண்ணார்தருமரங்கே அழுதுபுலம்பியேதான்
தம்பியரைக்காணமல் தயங்கியவரிருக்க
ஆரணங்குதுரோபதையா ளங்கேபுலம்பிநிற்க
என்னநினைவுகொண்டு இங்கேபடுத்தார்கள்
பச்சையமரத்தின்கீழ் படுத்தவிதங்களென்ன
இந்தமரத்தடியில் இவர்படுத்தகாரியமேன்
குளிர்ந்தநிழலென்று கோமான்படுத்தாரோ
மலர்ந்தமரமென்று மன்னாபடுத்தாரோ
தாகத்துக்குண்டபின்பு தமயர்தனையெழுப்பி
அண்ணர்களையெழுப்பி அழைத்து நாம்போவோமென்று
தாமரைபொய்கையண்டை தார்வேந்தன்வந்துநின்று
அந்தக்குளத்திலே அள்ளிஜலமுண்ணப்போனான்
அந்தச்சமயத்திலே ஆயாவர்பார்த்து
அந்தரமாய்நின்றலவோ ஆயாவரேதுசொல்வார்
ஆடாதம்பிநீ அக்குளத்திலிறங்கினவன்
எவனடாதம்பிநீ எங்குளத்தில்வந்தவனும்
தண்ணீர்குடியாதே தாகவிடாய்தீராதே
இந்தநீரென்னுதடா இந்தக்குளமென்னுதடா

சாலையுஞ்சோலையுந் தாமரைப்பொய்கைகளும்
இத்தலையுமொரு துதடா இறங்கிஜலமுண்ணாதே
இறங்கினாலுந்தனுக்கு யிடரானதுண்டாமே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்சகாதேவன்
அந்தரத்தில் நின்றுகொண்டு ஆர்காணுபேசுறவன்
தூரத்திலிருந்துகொண்டு சொல்கிறவனார்காணும்
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ
ஆகாசதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
பேயோபிசாசுகளோ பிணந்தினு ராட்சசியோ
ஆரோதெரியாது அதட்டியேகேட்கிறவர்
எவரோதெரியாது எந்தனைக்கேட்கிறவர்
மற்றுமொருக்கால்தான் வாய்திறந்துபேசுங்கள்
இன்னமொருக்கால்தான் எதிரில்வந்துசொல்லுங்கள்
என்றசொற்கேட்டு எம்பெருமாளேதுசொல்வார்
தண்ணீர்குடிக்கவந்தால் தாரணியிலேபுதுமை சொல்லு
வாடாப்பயிருமேது வருத்தமானபாரமேது
அந்தவதிசயங்களறிந்ததாலுரையுமென்று
அறிந்துநீசொன்னாலே அள்ளியேதீர்த்தமுண்ணு
சொல்லுவாயாயானால் சுருக்காகத்தீர்த்தமுண்ணும்
இல்லாமற்போனாலே யிப்பாலேவந்துவிடும்
தாமமுடியான் சகாதேவராஜனவன்
என்றவுரைகேட்டு ஏதுசொலவான்சகாதேவன்
ஆரோதெரியாது அந்தரத்தில்மிரட்டுகிறீர்
எவரோதெரியாது எனைமிரட்டுகிறீர்
அருகாகவந்தாலே அடித்தெறிந்துபோட்டிடுவேன்
எதிரிலேவந்தாலே யிருதுண்டாய்போட்டிடுவேன்
சரியாயிருக்கவேணும் சண்டைபண்ணிபார்க்கவேணும்
மறைவாயிருந்துகொண்டு வாதாட நீதியுண்டோ
என்றுமவனுரைக்க எம்பெருமாள்தான்கேட்டு
ஒன்றுமேசொல்லாமல் உலகளந்தார்வீற்றிருந்தார்
மறுவார்த்தைபேசாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போசகாதேவன் ஆனந்தமாகவேதான்

குளத்திலிறங்கினனே கொப்பெனவேதீர்த்தமுண்டான்
அள்ளியேதீர்த்தமுண்டான் ஆவல்தெளிந்திடவே
தண்ணீர்குடித்தானே தாமமூடியானும்
அள்ளிஜலமுண்டபின்பு ஆனந்தபாப்பனுக்கு
தண்ணீர்குடித்தவுடன் தலையைச்சுழற்றுகுது
உடம்புபறக்குது உள்ளங்குலையுது
நாவுகுளறுகுது நாமமூடியானுக்கு
கண்ணைபறக்குது காவேந்தராஜனுக்கு
ஆரோதெரியாது அந்தரத்திற்சொன்னார்கள்
எவரோதெரியாது எந்தனுக்குச்சொன்னார்கள்
தண்ணீர்குடியாதேயென்று சத்தம்பிறந்ததங்கே
அவர்சொல்லைக்கேளாமல் அள்ளிநானதீர்த்தமுண்டே
ன், சொன்னசொற்கேளாமல் சுருக்காகதீர்த்தமுண்டே
ன், தெரியாமல்நீர்குடித்தேன் சிந்தைகலங்குது
அறியாமல்நீர்குடித்தேன் அங்கம்பிறட்டுகுது
என்றுநடந்தானே இளையசகாதேவன்
அண்ணமார்தன்னருகே ஆணழகன்வந்துநின்று
அப்போசகாதேவன் ஆலோசனைகள்பண்ணி
தம்பிகளைக்காணோமென்று தருமர்ங்கே வந்தாக்கால்
வசநாபிதண்ணீருண்டு மாண்டிருவார்தப்பாது
என்றுமனதிலெண்ணி யெழுந்திருணமாத்தடியில
அண்ணனுமேமரத்தடியில் அதிசயமானவார்த்தை
இந்தகுளத்திலே பெவாதாகமுண்டாலும்
வசநாபிதண்ணீர்து குடித்தாலமடிந்திடுவார்
அண்ணனேயிக்குளத்தி லள்ளிநீர்குடியாதே
நாங்களிதைக்குடித்து நாலுபேருமடிந்திடுவோம
செத்துமடிந்துவிட்டோம் சிவலோகஞ்சேர்ந்துவிட்டோ
ம், மாண்டுமடிந்துவிட்டோம் வைகுந்தஞ்சேர்நதுவிட்
டோம், என்றுமவன்சொல்லி எழுதினன்மண்ணியேலே
தலையைச்சுழற்றுகையில் தானும்படுத்துக்கொண்டான்
அந்தச்சமய மறிந்தாரேயெம்பெருமாள்
மாயனபெருமாளும் வார்த்தைகளேதுசொலவார்

காலனை யெச்சரித்து கடுகவுயிர் வாங்குமென்றார்
எமனை யெச்சரித்து இவனுயிரை வாங்குமென்றார்
எம்பெருமாள் சொற்கேட்டு எமனவனேடிவந்து
சூலத்தால்குத்தியே பாசத்தால்கட்டினனே
பாசத்தால்கட்டியே பதைக்கவுயிர்பிடித்தான்
சூலத்தால்குத்தியே துடிக்கவுயிர்பிடித்தான்
மாண்டுமடிந்தானே மன்னன்சகாதேவன்
செத்துமடிந்தானே சீரானகானகத்தில்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

ஆரணியத்தில் எம்பெருமாள் சூதினாலே வீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் இந்நான்கு பேரும் மடிந்தபின்பு காளமகாரிஷி யாகத்திலுண்டாகிய வேதாளம் ஐந்துபேரையுங் கொல்ல வருகிறது.

---

அந்தச்சமயத்தில் ஆங்காரமாகவேதான்
காளமகாரிஷியுங் கருத்தபசுபண்ணி
அக்கினிகுழியிலே ஆங்காரவேதாளம்
உண்டாகிவந்துதங்கே உலகந்திடுக்கிடவே
கறுத்தநிறமுடனே கைதனிலேவாளுடனே
பெருத்தமுகமுடனே பெருந்தொப்பைதன்னுடனே
செவந்தமயிரழகும் சீழ்வடிந்தவாயழகும்
கண்களைப்பார்த்தாலே கருங்குன்றுபோலிருக்கும்
கைகளோகாதவழி கால்கள்வெகுதூரம்
அகண்டபுஜங்களது ஐந்நூற்றுக்காதவழி
பல்லழகைப்பார்த்தாலே பனைமரம்போலிருக்கும்
மூக்கழகைப்பார்த்தாலே மூதலைகளைப்போலிருக்கும்
இப்படியாக இருக்குமந்தவேதாளம்
பொல்லாதவேதாளம் பிறந்ததுயக்கினியில்
காளமகாரிஷியருகே கடுகவந்துதெண்டனிட்டு
என்னையழைத்ததேது தானேதுகவையாக

ஆரைதான்கொல்கிறது அடுத்துப்போர்செய்கிறது
எவரைப்போய்கொல்கிறது எந்தனுக்குசொல்லுமையா
கைகள்பதைக்குது காளமகாமுனியே
வயிறுபசிக்கிறது மாமுனியேசொல்லுமையா
அப்போதுமாமுனியும் அதைசொல்லத்தான்கேட்டு
காளமகாமுனியும் எடுத்தெடுத்துரைப்பார்
அக்கினியில்வந்துதித்த ஆங்காரவேதாளமே
நான்சொல்லநீர்கேளும் ராஜாக்கள்ஐவருண்டு
இந்தவனத்திலே இருக்கிறார்பஞ்சவர்கள்
வீரப்புலிபோலே வேந்தர்களைவருண்டு
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருண்டு
ஐவரையுங்கொன்றுதின்று ஆறைந்நாழியில்வாருமென்று
ர், வேதாளந்தானதைக்கேட்டு வெகுவாய்மனங்குளிர்ந்து
அவ்வளவுபோதுமென்று ஆக்ரமித்துப்பற்கடித்து
ஆக்ரமித்துப்பற்கடித்து அதட்டிவருகுதங்கே
எங்கெங்கேயென்றுசொலவி எழும்பியேகொக்கரித்து
கொக்கரித்துவேதாளம் குமாளமாய்வருது
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துவருகையிலே
செந்தாமரைப்பொய்கையண்டை செத்திருக்கக்கண்டது
மாமரச்சோலையின்கீழ் மாண்டிருக்கக்கண்டது
இறந்தவரல்லாமலின்னமொருவரில்லை
செத்தவரல்லாமல் மற்றுமொருவரில்லை
எங்கேமடிந்தாரோ எவ்விடத்திற்செத்தாரோ
செத்தபிணத்திடத்திற் றேடிப்போவென்றாரே
மாண்டபிணந்தின்ன மாமுனிபோகச்சொன்னார்
எத்தனைநாளைக்குமுன்னே செத்தபிணமிதுவோ
செத்தபிணந்தனையோ நான் சென்றுபொசிக்கிறது
நாறுமபிணமெடுத்து நானேபொசிக்கிறது
மாண்டபிணந்தனையோ நான் வயிறாவுண்பேனோ
என்றுமேசொல்லி எழுந்ததுவேதாளம்
அங்கேதிரும்பி அகோரகோபத்துடனே
மகாவேகந்தன்னுடனே வருகுதுவேதாளம்

காளமகாரிஷியருகே கடுகவந்துவுக்கிரமுடன்
எடுத்துமகாமுனிவரை இரண்டாய்க்கிழித்து
வாரியெடுத்துமல்லோ வயிற்றைக்கிழித்து
நெஞ்சைப்பிளந்தது நெருப்புந்தனலெழும
மாமுனியைக்கொன்றபின்பு மனதுமிகக்குளிர்ந்து
சந்தோஷமாகியல்லோ வேதாளந்தானடக்க
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோச்சுது
மனதுமிகக்குளிர்ந்து மற்றோர்வனந்தனிலே
போனதுபிழைத்திருக்கும் பொல்லாதவேதாளம்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமராஜர் தம்பிமார் நாலுபேரையுங் காணோமென்று
துரோபதையுடன் சொல்லிப் புலம்புகிறது.

---

வேதாளம்போனபின்பு வேல்வேந்தர் தருமராயர்
சாயம்புன்னைவனூர் தருமரவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெண்ணே பைங்கிளியே துரோபதையே
நெருப்பிற்பிறந்தவளே நீலவர்ணன்தங்கையரே
அனலிற்பிறந்தவளே அபிஷேகபத்தினியே
ஐவரையும்மாலையிட்ட ஆதிபாஞ்சாலியே
தோராவடிவழகி துரோபதையே நீர்கேளும்
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணோம்
வீமனைத்தேடிப்போன விஜயன்வரக்காணோம்
இருவரையுந்தேடிப்போன நகுலன்வரக்காணோம்
மூவரையுந்தேடிப்போன சகாதேவனைக் காணோம்
நால்வரையுங்காணோமே நாயகமேயென்னசெய்வோம்
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ வார்த்தைதெரியவில்லை
ஆரோடேசண்டைகள் அமர்துசெய்கிறாரோ
எவரோடேசண்டைகள் எப்படிப்போர்செய்கிறாரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணாரோ
எந்தத்தபோதனர்கள் எவர்கள்கொன்றுபோட்டாரோ

தபசிற்பெரியவர்கள் சபித்தாரோ நானறியேன்
வாத்திற்பெரியவர்கள் வதைசெய்துபோட்டாரோ
போனவிடமறியேன் போய்செய்ததாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
தேடியேபோவோம்வா தேவியேயென்றழைத்தார்
ஆமணக்குத்துரோபதையா ளப்படியேநல்லதென்றாள்

*தருமரும் துரோபதையும் வீமன் அர்ச்சுனன்*
*நகுலன் சகாதேவன் இவர்கள் நாலுபே*
*ரையும் தேடிக்கொண்டுபோனது.*

---

துரோபதையுந் தருமரும் துள்ளியெழுந்திருந்து
தேடப்புறப்பட்டார்கள் சிரானகானகத்தில்
கூவிப்புலம்பியே கொப்பெனவேவாரார்கள்
அழுதுபுலம்பியே அந்தவனந்தேடிவாரார்
இருண்டவனங்களெல்லாம் எங்கெங்குந்தேடினரே
தம்பியரைக்காணுமல் தயங்கினர்தருமரங்கே
பாராமலதம்பியரைப் பதைத்துபுலம்பினர்கள்
தக்கபுகழுடைய தருமராங்கேதுசொல்வார்
கோமாவடிவழகி துரோபதையேபாஞ்சாலி
இந்தவனத்திலே யெங்கெங்குந்தேடினமே
காளையத்தநால்வரையும் காட்டிலேகாணவில்லை
இந்தவனந்தாண்டி இனியவனம்போவோமென்று
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோய்நடந்தார்
தேடியேவாரார்கள் சிரானவனந்தனிலே
தருமருக்குந்துரோபதைக்குந் தாகமெடுக்குது
நாவுவறட்டுகுது நாமமுடியார்க்கு
ஆமணங்குதுரோபதைக்கு அதிகதாகமுண்டாச்சு
தண்ணீர்கவனமூற தாகவிடாயாச்சுது
தக்கபுகழுடைய தருமாவரேதுசொல்வார்
என்னசெய்வோம்பெண்ணே நாமெங்கும்ஜலங்கிட்டாது
மன்னவரைக்காணேனே மாதரசேயென்னசெய்வேன்

தப்பி ளேக்காணுமே தாகவிடாய்கொள்கிறதே
என்னசெய்வேனென்றுசொல்லி இளைத்துப்புலம்புகையி
அந்தச்சமயத்திலே அரிராமரேதுசெய்தார் [ல்
மயிலுங்குயிலுமிங்கே மரத்தின்மேலேறியே
வனத்திற்குயிலு மயில்களுங்கூவுது
அந்தக்குரல்கேட்டார் ஆணழகர் தருமலிங்கம்
கூவுங்குரல்கேட்டுக் கொப்பெனவேஏது சொல்வார்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுநடந்தாரே இளந்தோப்புத்தன்னருகே
தாமரைப்பொய்கையண்டை தம்பிமார்தானிருந்தார்
பள்ளிகொண்டிருக்கிறதைப் பார்த்தாரே தர்மலிங்கம்
தக்கபுகழுடைய தருமாவரே துசொல்வார்
தோராவடிவழகி துரோபதையேகண்டாயோ
தம்பிமார்பள்ளிகொண்ட தயிரியத்தைப்பார்த்தாயோ
மானுமபிடியாமல் வந்துசேதிசொல்லாமல்
குளிர்ந்தநிழலருகே கூசாமற்பள்ளிகொண்டார்
தண்ணீர்குடித்துநாம் தாகவிடாய்தீர்ந்தபின்பு [ர்
தம்பிமாரைத்தானெழுப்பித் தையலரேபோவோமென்று
என்றுமவருரைத்து இளந்தோப்பிற் போய்ப்புகுந்து
தாமரைப்பொய்கையிலே இறங்கினர் தருமரவர்
அப்போதுமாயவரும் அரிராமர்தான்பார்த்து
அந்தரமாய்நின்றுகொண்டு ஆபங்கேதுசொல்வார்
ஆரடாதப்பிநீ அக்குளத்திலிறங்கினவன்
எவனடாதம்பிநீ இறங்கிஜலமுண்கிறவன்
இந்தக்குளமென்னுதடா இந்தநதியென்னுதடா
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணாதே
என்றசத்தங்கேட்டுமே ஏதுசொல்வார்தருமரவர்
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுறது
எவரோதெரியாது எவ்விடமோபேசுறது
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ

ஆகாசதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
வானுலகதேவர்களோ வநதென்னைக்கேட்கிறது
பேயோபிசாசுகளோ பிணந்தின்னும்ராட்சதரோ
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரென்று நானறியேன் எங்கையோபோகிறீர்
வார்த்தைகள்கேட்குது வயணந்தெரியவில்லை
உத்தரவுகேட்குது உருவந்தெரியவில்லை
பேச்சுகள்கேட்குது பேருந்தெரியவில்லை
தாகவிடாயாக தண்ணீர்குடிக்கவந்தேன்
நாவுவறட்டுகுது நடுங்குதுதேகமெல்லாம்
உள்நாக்குவறட்டுகுது உத்தரவுதாருமையா
உத்தரவுதந்தாலே உண்ணுகிறேன் தீர்த்தமிங்கே
வார்த்தையுரைத்தாலே வாரிஜலமுண்ணுகிறேன்

எம்பெருமான் தருமர் தம்பிமார் நாலுபேரையும்
அதிசயங்கேட்டதற்கு யாருஞ்சொல்ல
வில்லை தருமர் சொல்லுகிறது.

---

உடனுரைக்கத்தருமலிங்கம ஏதுசொல்வார்மாயவனூர்
இப்பூமிதன்னிலே என்ன அதிசயங்கள்
அதிசயத்தைச்சொன்னீரானால்ளியேதீர்த்தமுண்ணும்
இல்லாமற்போனாலே இப்பாலேவந்துவிடும்
சொல்லாமற்போனீரானால் சுருக்காய்நடவுமென்றார்
என்றசொல்தான்கேட்டு ஏதுசொல்வார்தருமலிங்கம்
மனிதாபிறக்கிறதும் மனிதரிறக்கிறதும்
இதுவேஅதிசயங்கள் இனியொன்றுமில்லையென்றார்
அவ்வயணங்கேட்டு அரிராமரென்ன சொல்வார்
இதுவேஅதிசயங்களா இனியொன்றுமில்லையோதான்
இன்னமொருவார்த்தை உண்மையுரையுமென்றார்
வையகத்துபாதருக்கு வருத்தங்களானதுகாண்
ஏதுவருத்தமென்றார் இனிபபிறந்தபேர்களுக்கு
அப்போதருமரவர் ஆயருரைகேட்டு

சாயாம்புமன்னவனார் தருமாங்கேதுசொல்வார்
பத்துமாதஞ்சுமந்து பாலகனையுண்டாக்கி
மூன்னூறு நாள்சுமந்து முருகுழலாள் தன்னருகே
பெற்றெடுத்ததாயாற்குப் பெரியசுமையொழிய
மற்றுஞ்சுமையில்லை வையகத்துமாந்தருக்கு
இவ்வயணங்கேட்டு ஏதுசொல்வார்மாயவனார்
இன்னமொருவார்த்தை இயம்புவேன் சொல்லுமென்றார்
வையகந்தனிலே வாடாப்பயிருசொல்லும்
என்றைக்கும்வாடாத இனியபயிர்சொல்லும்
ஆயரிவையுரைக்க அவ்வார்த்தைதான்கேட்டு
சாயாம்புமன்னவனார் தருமராங்கேதுசொல்வார்
வாடாதிருக்குங்காண வளருமறுகம்புல்
அந்தசொல்தானுரைத்தார் அங்கெனவேமாயவற்கு
இவ்வயணங்கேட்டுமே எம்பெருமாளென்னசொல்லுவார்
சந்தோஷயாச்சுது தாகந்தெளியுமென்றார்
உத்தரவுதந்தாரே உலகளந்தாரெம்பெருமாள்
தக்கபுகழுடைய தருமரவர்கேட்டு
உண்ணுமென்றுசொன்ன உத்தரவுதான்கேட்டு
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தாகந்தெளிவதற்குத் தண்ணீர்குடித்தார்கள்
அள்ளிப்புசித்தார்கள் ஆவல்தெளிந்திடவே
தருமருந்துரோபதையுந் தாகத்துக்குண்டார்கள்
தாகந்தெளிந்தபின்பு தம்பிமாரண்டைவந்தார்

தருமர்வந்து தம்பிமார்களைஎழுப்ப நாலுபேரும்
இறந்துவிட்டாரென்றறிந்து புலம்புகிறது.

---

நாலுபேரண்டைவந்து நடுவேயிருந்துகொண்டு
சகாதேவனடுத்திருந்த தலைமாட்டிலெழுதியதோர்
வாசகத்தைப்படித்தாரே மன்னர்தருமலிங்கம்
என்னவென்றெழுதி யிருந்ததென்றால்வாசகத்தில்
நால்வருமாகவே நச்சுப்பொய்கைதீர்த்தமுண்டு

விஷதீரையுண்டலவோ வேந்தர்மடிந்துவிட்டோம்
மாண்டுமடிந்துவிட்டோம் நீங்கள்வந்தாளண்ணுவே
தாகத்துக்குண்ணுதே தப்பிப்பிழையுமென்று
இவ்வயணமாகவே எழுதியிருக்குது
பார்த்துப்படித்துப் பயந்தாரேதருமராவர்
செத்துமடிந்தார்கள் சீரானதம்பியர்கள்
மாண்டுமடிந்தார்களென்று மன்னர்புலம்புகிறார்
எனனசொல்லிப்புலம்புகிறார் இருண்டவனந்தனிலே
மலையேபருவதமே மாண்டுமடிந்திரோ
செம்பிலேயேபருவதமே செத்துமடிந்திரோ
நீலமலேயே நிலத்தோடேசாய்ந்திரோ
கல்லானதூணுக்கு கலக்கமில்லையென்றிருந்தேன்
கல்லானதூணைக் கறையானரித்ததுவோ
இரும்பானதூணுக்கு என்னகுறையென்றிருந்தேன்
இரும்பானதூணுமே இற்றுவிழுந்ததே
வச்சிரத்தூணுக்கு மயக்கமில்லையென்றிருந்தேன்
வச்சிரத்தூணையோ மண்ணேடுளுததுதே
பெருந்தென்னைச் சிறகாலடித்துதே
குஞ்சைப்பறிகொடுத்த கோழிபோலானேனே
ரெக்கைபறிகொடுத்த டேகைபோலானேனே
கையறுந்தயானையைப்போல் கலங்கினேன்தம்பியரே
ஓடுகிறமானுக்கு ஒருகாலொடிந்தாப்போல்
உள்ளங்குலைந்து உருகிறேனதம்பியரே
எந்தனைத்தவிக்கவிட்டு எங்கேமறைநதீர்கள்
ஐயையோதெய்வமே அலையவிட்டுப்பார்த்தீர்களோ

தருமராஜர் வீமனைப்பார்த்துப் புலம்புகிறது.

---

தக்கபுகழுடைய தருமரெழுந்திருந்து
வீமனருகில்வந்து வேநதர்புலப்புகிறார்
வெற்றிமதயானை வீமாமதகரியே
கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்

நூலார் உடுந்திரளார் நூற்றொருமன்னரையும்
கொலலூகிறேனென்று நீ கொடியசபதமிட்டாய்
அவ்வார்த்தைதான்மறந்து ஆப்பா நீயெங்கொளித்தாய்
வச்சிரமுடியே நீ மண்ணோடேசாய்ந்தாயோ
தங்கமுடியே நீ தரையிற்கவிழ்ந்தாயோ
தாயைமறந்தாயோ தமையனை நீமறந்து
எங்கேயொளுத்தாயோ எந்தநாடுபோனாயோ
எனையலையவிட்டு எங்கே நீபோயொளித்தாய்
என்றுபுலம்பி இளைத்துமண்ணில்மூர்ச்சையானார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்

தருமராஜர் களைதெளிந்து எழுந்திருந்து அர்ச்சுனனைப்பார்த்துப் புலம்புகிறது.

---

அன்றுமொருநாழி சென்றபிறகாக
தோராவடிவழகி துரோபதையாளோடிவந்து
களைத்ததருமருக்கு கடுகமூர்ச்சைதெளியவென்று
காட்டில்தழையொடித்து கடுகவேயோடிவந்து
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசலுற்றாள்
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்து
என்னவென்றுசொல்லி எடுத்துப்புலம்புகிறார்
ஆணழகுமன்னா அருச்சுனாவென்பிறப்பே
என்னைத்தனியேவிட்டு எங்கே நீபோயொளித்தாய்
மீசைமுறுக்கழகா விழியிற்கறுப்பழகா
நாவிலேநக்ஷத்திரம் நயனவிழிப்பார்வைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளிலமிர்தகலசம்
பல்லிலேபரசவீணை பாதத்தில்தாமரைப்பூ
முதுகிலேமச்சரேகை முழங்கால்முத்துமாணிக்கம்
இடதுகால்விருதுபொம்மை வலதுகால்வீரதண்டை
தலவிருதுகுலவிருது சத்ராதிபேர்விருது
எதிர்த்தவன்றன்விருதும் எதிராளிமுகவிருதும்
இத்தனைவிருதுகளை எடுத்து நீபூட்டிக்கொண்டு

கட்டியெதிர்த்தாலே கலங்குமேசேனையெல்லாம்
சத்ராதிகளைஜெயிக்கும் தனஞ்செயரோயர்ச்சுனரோ
எதிரிகளைஜெயிக்கும் என்பிறப்பேயர்ச்சுனரோ
என்னைப்பிரிந்துநீ இறந்தாயடிந்தாயோ
அழகைப்பொழிசினைவர் ஆயுளைபொழுசாரோ
வடிவிமொழிசினைவர் வயதையெழுகாரோ
பெற்றோனுக்கியம்மாள் பிரபலங்கள்காணவென்று
பெற்றாள்வயிற்றிலே நீ பெருநெருப்பையிட்டாயோ
என்னைதவிக்கவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
என்றுசொல்லிதருமராவ ரேங்கிமனந்தளர்ந்து
அழுதுபுலம்பியே அங்ஙனேமூர்ச்சையானார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்

தருமராஜர் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து நகு
லனைப்பார்த்துப் புலம்புகிறது.

---

களைத்த தருமரையே கண்டந்த துரோபதையாள்
துள்ளியெழுந்திருந்து துரிதமுடனோடிவந்து
காட்டில்தழையொடித்துக் கடுகெனவேயோடிவந்தாள்
தருமருகாகத் தையலரும்வந்துநின்று
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசுகிறாள்
காட்டுத்தழையொடித்துக் கடுகெனவேவீசினளே
மற்றுமொருநாழி யற்றபிறகாக
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்து
மூர்ச்சையதுதெளிந்து முன்னின்றுபுலம்புகிறார்
அப்பாநகுலாபொன் னிறவுள்ள கண்மணியே
மலையேபருவதமே வாழ்மலையேபெருஞ்சரமே
நீமடியுங்காரியங்கள் நின்னையத்தைநானறியேன்
மாண்டிடுவீரென்றுநான் மனதிலநினைத்ததில்லை
செத்துவிடுவீரென்று சற்றுமறியேனே
என்னைநீகைவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
நீங்கள்-போவதறியாமல் பூரித்துநானிருந்தேன்

சாவதறியாமல் சந்தோஷமாயிருந்தேன்
ஆரைச்சதமென்பேன் அனனியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுதையா
கண்டமுகங்களெல்லாம் கடுத்தமுகமாகுதப்பா
கூடப்பிறந்தீர்களே கூட்டுப்பாலுண்டீர்களே
ஒக்கப்பிறந்தீர்களே ஒருஸ்தனப்பாலுண்டீர்களே
காட்டுக்குள்கையைவிட்டு கைலாயம்போனீர்களோ
தங்கத்தரிக்கவில்லை தரையிற்கால்பாவவில்லை
நிற்கத்தரிக்கவில்லை நிலத்திற்கால்பாவவில்லை
உங்களை நான்பிரிந்து ஒருநாழிதங்குவேனோ
கூடயடிவேன்காண் கொற்றவரேயுங்களுடன்
ஒக்கமடிவேனே உங்களுடனாக
அலண்டுபிரண்டமுதார் அடித்துகொண்டார்தலைமேலே
மூட்டிக்கொண்டார்பூமியிலே மோதிக்கொண்டாரப்போ
து, மார்கொண்டகண்ணீரை வழித்தெறிந்தார்மண்மே
லே, துடித்துப்பதைத்தலறித் துள்ளிப்புரண்டமுதார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்
மூர்ச்சையாய்விழுந்தாரே முடிமன்னராஜாவும்

தருமராஜர் மூர்ச்சைதெளிந்து சகாதேவனைப்
பார்த்துப் புலம்புகிறது.

---

தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
களைத்தருமருக்குக் களைகள்தெளியவென்று
காட்டில்தழையொடித்துக் கட்டழகிவீசலுற்றாள்
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசலுற்றாள்
விசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்தார்
மூர்ச்சைதெளிந்தெழுந்து மோதிப்புலம்புகிறார்
சாஸ்திரக்கொடிவேந்தா சகாதேவராஜாவே
முன்னேவருங்காரியத்தை முதலறிந்துசொல்வாயே
இனிநடக்குங்காரியத்தை எந்தனுக்குநீயுரைப்பாய்

அப்படிச்சொத்ததொரு அறிவுள்ளகண்மணியே
உன்னைப்பரிகொடுத்து உலகத்தில்வாழ்வேனோ
பன்னிரண்டுதன்வருஷம் பாரவனந்திர்ந்தபின்பு
அக்கியாதவருஷ மதுவுங்கழிந்தபின்பு
பாரவனந்திர்ந்து பட்டணமேபோய்ச்சேர்ந்தால்
குந்தியமமாளோடிவந்து குழந்தைகளெங்கேயென்றால்
மைந்தர்களெங்கேயென்று மாதாவுங்கேட்டாலே
என்னவென்றுசொல்லி எடுத்துரைப்பேன்தாயார்க்கு
கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்
மூடிக்கிமுடியானாலும் மூந்தமுடியாகுமோதான்
தங்கமுடியானாலும் உங்கள்முடியாகுமோதான்

தருமராஜபேர் தம்பிமாரையும் நினைத்துப்புலம்ப
அப்போது துரோபதை தன்புருஷர்களை
பார்த்துப் புலம்புகிறது.

---

தோருவடிவழகி துரோபதைநாயகியாள்
மாலையிட்டபஞ்சவர்கள் மாண்டுவிட நீதியுண்டோ
தாலிகட்டும்ராசாக்கள் தரையில்விழலாச்சே
மங்கிலியமுண்டு மறைமுண்டுளென்றிருந்தேன்
உலகத்துப்பெண்டுகள் ஒருவனுக்கைகொடுப்பார் [ன்
நான்ஐவருக்குமகைகொடுத்து அம்பலத்துககாளானே
செல்வததலையிலே சபபேபெடுமூனதும்
அல்லற்படுந்துபரம் அமைத்தாரேபிர்மதேவன்
ஆரைக்கழுத்தி அரைக்கழுந்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுததியானேனே
தக்கக்கழுத்தி தலைவிரிக்கநாளாச்சே
மல்லிகைச்சாலையிலே மயிர்விரிக்கநாளாச்சே
குங்குமச்சாலையிலே குழல்விரிக்கநாளாச்சே
ஐயையோதெய்வமே அனியாயஞ்செய்தீர்களோ
பார்த்துமிருந்தென்னைப் பரதவிக்கவிட்டீர்களோ
கண்டுமிருந்துமென்னை கனங்குலையவைத்தீர்களோ

தோள்சார்ந்தராஜாக்கள் சோர்ந்துவிடக்காரியமேன்
மார்சாந்தராஜாக்கள் மடிந்துவிடக்காரியமேன
காட்டில்மடிந்தலவோ கையைவிடடுநின்றீர்களோ
அடவியிலேதான்மடிந்து அலையவிடடுப்பார்த்தீர்களோ
சூரியனைச்சாட்சிவைத்துத் தெருவிலகைவிட்டீர்களோ
சந்திரனைச்சாட்சிவைத்து சாகத்துணிந்தீர்களோ
சந்தியிலேகையைவிட்டு சமர்த்தாய்ப்படுத்தீர்களோ
மஞ்சளிழந்தும் மணமிழந்தும்பூவிழந்தும்
தாலிச்சரடிழந்தும் தரணியில்நிறபேனோ
மஞ்சள்சரடிழந்து மணமேல்நிற்பேனோ
கூடமடிவேன்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கமடிவேன்காண் உத்தமரேஉங்களுடன்
நானுமடிவேன்காண ராஜர்களேஉங்களுடன்
அலணடுபுரண்டழுது அப்பிக்கொணடாள்மார்மேலே
எங்கேயோவானம் இடிக்குதென்றிருநதேன்
தப்பாமலவானமல்லோ தலையிலிடித்துதே
என்றுபுலம்பியே இளங்கொடியாளதானழுதாள்
கோவெனறசத்தம குமுறிப்புலம்புகிறாள்
தக்கப்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
சாயாபபுமலனவனும் தருமரவரேதுசொலவார்
தோராவடிவழகி துரோபதையேநீகேளும்
வசநாபிதணணீருணடு மாணடாரேதம்பியர்கள்
நாமும்புசித்தோமே நல்லவிஷஜலத்தை
இறவாமல்நாமு மிருப்பதென்னகாரணங்கள்
மாணடதொருதமபியாகள் மனைவாகள்தன்னுடனே
நாமுமமடிந்தாமல நல்லதெனறெணணுகிறேன்
கூடமடிநதாலே குணமென்றுஎணணுகிறேன்
ஒககமடிநதாலே ஒருமிக்கதீர்ந்துவிடும்
கதியைத்துலைக்கலாம காசிவாநீநகிடலாம்
விதியைத்துலைக்கவல்லோ வேறுவகையறியோம்
என்னசெய்வோமென்றுசொல்லி ஏங்கிப்புலம்புகிறார்

தருமர்மனதறிய எம்பெருமாள் ஒட்டனாகவும் எமன்

ஒட்டச்சியாகவும்வந்து பிணத்தையிழுக்கிறது.

---

எமனும்பெருமாளும் இருவருமாகவேதான்
தருமர் நினைவறிய சாமிவடிவெடுத்தார்
எம்பெருமான்மேகவண்ண ரென்னவடிவானார்
இருவருமாகவே இவர்களண்டை ஒடிவந்து
தருமரைத்தான்பார்த்து சாமியவருரைப்பார்
ஆரையாயிங்கே அழுதுபுலம்புறது
இந்தக்குளத்திலே யெவர்தாகமுண்டாலும்
வசநாபிதண்ணீரில மாண்டுமடிந்தாலும்
எங்களையல்லாமல் எவரெடுக்கலாகாது
எடுத்துப்புதைக்கிறது எங்களுக்குத்தாரமையா
தாங்களெடுத்தபடி ராஜாவிகடட்டனைகாண், எங்றுமே
யெம்பெருமான் இழுத்துப்போனார்வீமனையும், இளவிஜ
யனாம் அர்ச்சனனை இழுத்துப்போனார்ஒட்டச்சியும்

எம்பெருமாள் எமனும் சவத்தையெடுத்துக் கொண்டு

போக தருமராஜர் பரிதாபப்பட்டு

தன்சவத்தைவாங்குகிறது.

---

சவத்தையவ்விழுக்க தருமரவர்பார்த்து
கண்டாரேதருமரவர் கடுகவயிறெரிந்து
பார்த்துமனங்கலங்கிப் பதைத்துப்புலம்பியவர்
ஒட்டர்களருகில் வந்து உத்தமருமேது சொல்வார்
ஆகையால் ஒட்டர்களே ஐயாவே நீர்கேளும்
அண்ணன் தம்பிநாங்களிங்கே அருகாகவந்திருக்க
தமையனென நானும் தனதாகவந்திருக்க
பூமிதனைவெட்டி புதைக்கும்வயணமென்ன
எங்கள்பிணத்தை நீங்கள் இழுக்காதீர்விட்டுவிடும்
தரையிலிழுக்காதே தர்மமாய்ப்போகுதையா

பூமியில்விழுக்காதே புண்ணியமாய்ப்போகுதையா
கோடிசரணமையா கும்பிடுவேனவிட்டுவிடும்
ஆயிரஞ்சரணங்காண் அடிபணிந்தேன்விட்டுவிடும்
மூவாயிரஞ்சரணம் முடிசாய்த்தேன்விட்டுவிடும்
என்றுவருந்தினரோ இயலான தருமலிங்கம்
எமனும்ராமனும் இருவருந்தான்பார்த்து .
பெருமாள்மனமிரங்கிப் பிரியமுடனாக
வீமனைத்தாழவிட்டார் வேந்தர்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமாவரோடிவந்து
வீமனையெடுத்துவந்து மெத்தெனவேதான்வளர்த்தி
வீமாருகாக வேந்தரும்வீற்றிருந்தார்
தோராவடிவழகி துரோபதையாளோடிவந்து
ஒட்டச்சிபாதத்திலே உத்தமியாள்தான்விழுந்து
தாயேநீஒட்டச்சியுன் தருமமாய்ப்போகுதம்மா
என்னை-மாலையிட்டமன்மதன்டி வலியாதேபூமியிலே
இந்த-வையகத்தையாண்டவரை வலியாதேதாயாரே
பூமியையாண்டவர்கள் புரட்டாதேபோகாதே
அங்கம்பொறுக்கவில்லை ஆச்சிநீவலியாதே
ஆயிரங்கண்டனம்மா அடிபணிந்தேனுனக்கு
மூவாயிரஞ்சரணம் முடிவணங்கித்தெண்டனிட்டேன்
கோடிசரணமம்மா கும்பிட்டேன்விட்டுவிடும்
என்றுவருந்தினளே இளங்கொடியாள்துரோபதையும்
எமனும்பெருமாளும் இருவருந்தான்கேட்டு
பரிதாபந்தாளாமல் பார்த்தனைவிட்டார்கள்
கோராவடிவழகி துரோபதையுமோடிவந்து
இளங்கொடியாளர்ச்சுனனை எடுத்துவளர்த்திடவே
ஒட்டனும்ஒட்டச்சியும் உத்தாரமென்னசொல்வார்
எடுத்துப்புதைக்கவுமென்று எதிர்நடந்தார்கள்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
இன்றெல்லாமிங்கிருந்து ஏங்கியழுதாலும்
நம்மாலேயாவது ராஜாவேயொன்றுமில்லை
மாயன்பெருமாளை மனதில்நினைத்தழுதாள்

வாருந்தியழுதாலே வருவார்காணெம்பெருமாள்
மாயன்வந்தபிற்பாடு மெய்யைநத்தெரியுமென்றாள்

தருமராஜர் தன்தம்பிமார் பிழைப்பதற்காக எம்
பெருமானை நினைத்துப் புலம்புகிறது.

---

சாயாப்புமன்னவரும் தருமராஜனென்னசொல்வார்
அடியானந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றார்
எல்லையானந்தசாமி எம்பெருமாள்மேகவண்ணா
கல்லானஅகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தாய்
மூலமென்றழைக்குஞ்சரத்தை காத்தமுகில்வண்ணா
ஆலிலைமேற்பள்ளிகொண்ட அரிராமாவாருமையா
மச்சவடிவுகொண்ட அச்சுதமேயிச்சகத்தில
கூர்மவடிவுகொண்டு பாதாளம்போய்வந்தீர்
சிங்கமாயிரணியனைப் பங்கஞ்செய்துமார்பிளந்தீர்
ராமர்வடிவுகொண்டு ராவணனைச்சங்கரித்தீர்
அரக்குமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பலத்தில் துரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
மண்டலங்கள் தானறிய மானாத்துகில்கொடுத்தீர்
பகையாளிவாசலிலே பட்சம்வைத்துக்காத்தீரே
எதிராளிமுன்னாலே எங்களைக்காத்தீரே
உம்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறியார்
நீரே துணையல்லால் வேறுதுணையுமில்லை
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுகுது
கண்டமுகங்களெல்லாம் கடுத்தமுகமாகுது
ஏழையழுதகண்ணீர் கூரியவாள்தைக்கிலையோ
நானழுதகண்ணீர் பாம்புகொண்டறக்கிலையோ
என்றுபுலம்புகிறார் [illegible]
தருமருடனே [illegible] துரோபதையும்
கூடப்புலம்புகிறாள் கொம்பனையாள் துரோபதையும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமருந் துரோபதையும் வருந்துகிறதை எமனும்
பெருமாளுங்கேட்டு சந்தோஷப்பட்டு இவர்க
ளிடத்துக்கு இருவரும் வருகிறது.

---

ஏமனும்மாயவரும் இருவருந்தான்கேட்டு
சந்தோஷப்பட்டாரே சாமிபெருமாளும்
ஏமன்கிடாமேலே எம்பெருமாள்கருடன்மேலே
இருவருமாகவே எழுந்தருளிவந்தார்கள்
தருமரிடத்திலே இருவரும்வந்துநின்றார்
தருமருந்துரோபதையும் சாமியைக்கண்டவுடன்
சரணமடைந்தாரே சாமிபெருமாளை
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலமவந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
இருவரையுந்தெண்டனிட்டு இட்டார்சிம்மாதனங்கள்
சிம்மாதனமபோட்டு ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
இருமிருமென்றுசொல்லிஇருவரையுந்தெண்டனிட்டார்
ஏமனும்மாயவரும் இருந்தார்சிங்காதனத்தில்
வணணச்சிங்காதனத்தில் வந்தாரிருவருமாய்
அடியளந்தமாயவரும் ஆண்டவருமென்னசொல்வார்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
என்னவகையாக எனையழைந்தீர்தருமலிங்கம்
அழுதுபுலப்புவதேன் ஆயாசமாகவேதான
என்னபுதுமை எனக்கறியச்சொல்லுமென்றார்
அப்போதுதருமலிங்கம் ஆயருக்கேதுசொல்வார்
சாயாம்புமன்னவனுர் தருமமெடுத்துரைப்பார்
மாண்பிடிக்கவந்தவர்கள் மாயவரேதம்பியர்கள்
தாயமைப்பொய்கையிலே தண்ணீர்குடித்தார்கள்
விஷநீரைத்தண்குடித்து வேந்தர்மடிந்தார்கள்
செத்துமடிந்தார்கள் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
மாண்டுமடிந்தார்கள் வைகுந்தஞ்சேர்ந்தாகள்
தம்பியரைத்தேடியே தையலருமநானும்வந்தோம்

அழுதுப்புலம்பிவந்து அன்னவரைக்கண்டோமே
திட்டியெழுப்பினேன் செத்துமடிந்திருந்தார்
பார்த்துவயிறெரிந்து பதைத்துப்புலம்பினேம்
கண்டுவயிறெரிந்து காரவணைபுயைபுகையில்
எவனோதெரியாது இருட்சதன்போல்ஓட்டனவன்
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளஒட்டன்
ஒட்டன்மனைவியாள் ஒட்டச்சிகூடவந்தாள்
இந்தவனத்திலே எவரெவர்மாண்டாலும்
எடுத்துப்புதைக்கிறது இங்கேயவர்க்குத்தரவாம்
வீயாருச்சுணரை வெகுதூரம்கொண்டுபோனர்
தம்பிமாரிருவரையுந் தானிழுத்துப்போனர்கள்
கண்டுமனமபதைத்துக் கதறிப்புலமபினேம்
பார்த்துமனந்தளாமல் பற்றிவயிறெரிந்தோம்
பாதத்தின்மேல்விழுந்து பத்துலட்சமதெண்டனிட்டோ
ம், விட்டுவிடச்சொல்லியே வெகுகோடிதெண்டனிட்டோ
ம், எங்கள்பரிதாபம பார்த்துமனமிரங்கி
எடுத்துப்புதையெனறுசொல்லி இந்தவழிதானடந்தார்
அவர்கள்போனபிற்பாடு ஆண்டவனையுனைநினைந்தேன்
தம்பியரைவிட்டு தரிக்கமனம்கூடவில்லை
என்னசெய்வேனென்றுதா னேங்கிப்புலமபுகிறுர்
தருமர்புலம்புவதை சாமியவர்பாாதது
மாயனம்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
தருமர்முகம்பார்த்து சாமியுமேதுசொல்வார்
என்னசெய்வேன்தருமரே எழுத்தின்படியிவ்வளவு
அன்றெழுதுங்காந்தன் அழிததெழுதப்போறதில்லை
கதிரைத்தொலைக்கலாங் காவேரிநீந்திடலாம்
விதியைத்தொலைப்பதற்கு வெல்லவகையறியோம்
பிரமனெழுத்திற்குப் பிசகுகள்வாராதே
மாண்டாற்பிழைத்தாலேவையகங்கள்கொள்ளுமோ
செத்தார்பிழைததாலே செகமெல்லாங்கொள்ளுமோ
அழுதுபுலம்பியே ஆயாசப்பட்டாலும்
ஆண்டாண்டுதோறும் அழுதுபுரண்டாலும்

மாண்டார்வருவாரென்று மனதில்நினையாதே
செத்தார்வருவாரென்று சிந்தத்திலெண்ணுதே
தம்பிமாரை நீயெடுத்து தகனங்கள்செய்யுமென்றூர்
இவ்வயணமாகவே எம்பெருமான்சொல்லவுமே
தருமர்மனமறிய சாமியுரைக்கவுமே

எம்பெருமாள் செத்தவரை தகனஞ்செய்யுமென்று
தருமர் மனமறியச்சொன்னூர் அதுகேட்டு
தருமருந்துரோபதையும்புலம்பி சுவாமி
யை மடிபிச்சை கேட்டது.

---

எம்பெருமாள்மாயவரும் இப்படித்தானுரைக்க
சாமியுரைகேட்டு தருமர்மிகத்தளர்ந்து
சிந்தைகலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
மெத்தமனதுநொந்து வேந்தர்புலம்புகிறூர்
அடித்தமயிலபோலே அழுதுபுலம்புகிறூர்
பச்சைபுழுவெடுத்துப் பெருநெருப்பிற்போட்டாற்போல்
துடித்தபுழுப்போலே துள்ளிப்புலமபுகிறூர்
உன்னையேநம்பி உயிர்கொண்டுலாவுகிறேன்
நம்பியிருந்தவென்னை நட்டாற்றில்விட்டுவிட்டாய்
இப்படிநீர்கையைவிட்டால எப்படிநான்பிழைப்பேன்
ஆற்றங்கரையோரத்தில் ஆலமம்போலானேம்
குளத்தங்கரையோரத்தில் கோடாலிக்கொம்பானேம
நட்டாற்றிலேமுளைத்த நாணலுங்கோரையானேம்
உள்ளங்கைநெல்லிக்கனி உருக்குலைந்துபோனேமே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோனேமே
கையில்செபமாலை கணங்குலைந்துபோனேமே
இனியிந்தப்பூமியிலே இருக்கவுநானு ாது
என்னையுங்கொன்றுவிட்டு எம்பெருமாள்தகனஞ்செய்யும்
நாலவருடனுக நம்மைத்தகனஞ்செய்யும்
என்றுபுலம்பினூர் இயலானதருமலிங்கம் [ள்
துகில்வளர்ந்தபத்தினியாள் துரோபதையேதுசொல்வா

தமயனருகில்வந்து தையலருமேதுசொல்வாள்
அண்ணாருகேவந்து அழுதுபுலம்புகிருள்
மங்கிலியப்பிச்சையது மாயவரேதாராயோ
மூத்தாணிப்பிச்சையது மூதந்தரேதாராயோ
என்றுமடியேந்தினுள் இளங்கொடியாள் துரோபதையும்

தருமருந்துரோபதையும் புலம்புவதை எம்பெருமாள்
பார்த்து மனமிரங்கி இங்கேயுமிருந்து வேறே
யொரு ஜோகியாகவந்து நாலுபேரையு
மெழுப்புகிறது.

---

தருமருந்துரோபதையுந் தானழுததைப்பார்த்து
கரியமால்மனமகிழ்ந்து கடுகநினைவுகொண்டு
இவர்களுக்குமுன்னாலே இருந்தாரேமாயவரும்
எம்பெருமாள்மாயவரும் என்னவடிவெடுத்தார்
வேறேயுருவமாக விஷ்ணுவடிவெடுத்தார்
பலியான ஜோகியைப்போல் வாராரேமாயவரும
கைதனிலேமருந்துப்பையுங் காவியுடுப்புகளும்
தோளிலேசோளியுடன தொங்குகிறதாடிகளும்
கையில்செபமாலை கமண்டலந்தன்னுடனே
தொண்ணூறும்பத்துஞ்சென்றதுவண்டகிழவனைப்போ
நாலுரும்பத்துஞ்சென்ற நரைத்தகிழவனைப்போல [ல்
தோலுநரம்புகளுந் தொங்குங்கிழவனுக்கு
மூன்றுதடுத்தாலே மூப்பதிடம்விழுவார்
நாலைதடுத்தாலே நாற்பதிடம்விழுவார்
அஞ்சுபுல்தடுத்தாலே ஐம்பதிடம்விழுவார்
தள்ளாடித்தத்தளித்துத் தடிக்கோலையூன்றிகொண்டு
பஞ்சாட்சரயோகி பாதைவழியாக
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாராரே
அரகராவென்றலவோ அந்தவழியாகவந்தார்
தருமாருகில்வந்து அருமைஜோகியேதுசொல்வார்
அத்திபுரத்துக்கு சுத்திப்போறேனிதுவழியாய்

ஆரோ இருவர்கள் அழுதுபுலம்பினர்கள்
ஏதுக்கழுகார்கள் என்றறியஓடிவந்தேன்
அழுதவயணமென்ன ஐயாவேசொல்லுமென்றார்
புலம்பியழுவதென்ன புதுமைகளைச்சொல்லுமென்றார்
அப்போது தருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அப்போதெடுத்துரைப்
மான்பிடிக்கவந்தவர்கள் வனத்திலேதம்பியர்கள் [பார்
வசநாபிதண்ணீருண்டு மாண்டாரே தம்பியர்கள்
விஷநீரைத்தான் புசித்து வேந்தர்மடிந்தார்கள்
செத்துமடிந்தார்கள் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
மாண்டுமடிந்தார்கள் வைகுந்தஞ்சேர்ந்தார்கள்
ஒப்பிட்டவாளை உரையருவிவிட்டாற்போல்
தப்பிப்பிழையாமல் சதிசெய்துமாண்டுவிட்டார்
என்றுசொல்லிதருமலிங்கம் ஏங்கிபுலம்பினர்
மாயவடிவெடுத்த மலைஜோகியேதுசொல்வார்
இறந்ததொருநாலுபேரும் என்னவேணுமுந்தனுக்கு
மாண்டதொருமன்னவர்கள் மன்னவருக்கென்னவேணு
ம், உண்மையாய்சொல்லுமென்றே உத்தமரைக்கேட்கலு
மே, தக்கபுகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இறந்தவர் நாலுபேரும் எந்தனுக்குத்தம்பியர்கள்
மயிலணையாள் துரோபதைக்கு மாலையிட்டமன்னவர்கள்
எங்களைத்தனியாய்விட்டு இறந்துமடிந்தார்கள்
என்றுமவருரைத்து ஏங்கிப்புலம்புகிறள்
மாயவடிவெடுத்த மலைஜோகியென்னசொல்வார்
இறந்தவர் நாலுபேரில் எவர்வேணுமுந்தனுக்கு
செத்தவரிலொருவரை நான் சீக்கிரமெழுப்பித்தாரேன்
எவர்வேணுமுந்தனுக்கு இப்போதேசொல்லுமென்றார்
ஆமானல்சொல்லிவிடும் அல்லவென்றால் நான்போறேன்
தக்கபுகழுடைய தருமரவர்கேட்டு
மலைஜோகிசொன்னதற்கு மன்னரெடுத்துரைப்பார்
ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
என்தாயார்குந்தியம்மாள் ஈன்றெடுத்தமூவர்களில்

இருவரிறந்தார்கள் இருக்கிறனொருவன்
மறுதாயார் மைந்தர்களில் நகுலனையெழுப்புமென்றார்
தக்கபுகழுடைய தருமருரைக்கவுமே
மாயமாய்வந்தவொரு மலேரோகிதானகேட்டு
தருமர் தினைவறிந்து சந்தோஷப்பட்டாரே
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தேகங்குளிர்ந்து திருத்தோளும்பூரித்து
உண்ணாமல்பூரித்து உடம்பெல்லாம்பூட்டுவிட்டு
கரியமால்வுளமகிழ்ந்து காலனையே சரித்து
நால்வருயிரையுமே நமனுரேவட்டிடென்றார்

விஷநீர்குடித்து இறந்துபோன நாலுபேரும்
பெருமாளால் எழுந்திருந்தது.

---

எம்பெருமான் தானுரைக்க யேமனவர்கேட்டு
அப்படியேநல்ல தென்று அந்தயெமனுரும்
பிடித்தவுயிரைவிட்டுப் போதவெழுந்திரென்றார்
தூங்கிவிழுந்தாற்போற் பாலகாயெழுந்தார்கள்
துள்ளியெழுந்தாரே துரைகளந்த நாலுபேரும்
மாயனைபெருமானை வணங்கியேதெண்டனிட்டார்
முக்காலும்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை கண்டுமனமகிழ்ந்து
வாழ்த்திபெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
சந்தோஷமாகத் தானிருந்தார்பெருமாளும
தக்கபுகழுடைய தருமரடிபணிந்து
நாற்காலும்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
தக்கபுகழுடைய தருமரெடுத்தணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீரென்னுடனே
திறமீர் திலதரிப்பீர் நீடூழிவாழ்ந்திடுவீர்
கல்பதித்த தூணதுபோல் கலங்காமல்வாழ்ந்திடுவீர்
வினைப்பெறுவீ ரெதிர்ந்தாமுடியரிவீர்
மைந்தர்களைப்பெற்றெடுத்து மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவீர்

போருக்குப்போயிடுவீர் பொழுதோடவென்றிடுவீர்
வெனறகனரியிலே வீரபட்டங்கட்டிடுவீர
ஆல்போலவேதழைதது அருகுபோலவேரோடி
மூங்கில்போலெநநாளும முசியாமலவாழ்நதிடுவீர்
வாழ்வீரகளெனறுசொல்லி மனங்குளிரவாழ்த்தினர்
இருமிருகமென்றுசொன்ன இனிதாகததமபமாரை
அண்ணருமையாலே அனைவோருமறிற்றிருநதார்
மாயருரையாலே மகிழ்ச்சியாயவீறறிருநதார்
தமபிமாரைக்கணடலவோ சநதோஷப்பட்டாரே
தோபாவடிவழகி துரோபதையுநதானபார்த்து
புருஷர்களைப்பார்த்து பூரித்தாளுத்தமியும்
கணவரைக்கணடலலவோ கடடழகிமனங்குளிர்ந்து
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

யெம்பெருமாள் துரியோதனன் சூதும் காளமகாரிஷி
செய்தயாகமும் வேதாளம்வரவும் தான் இவர்
களைக் காப்பாற்றினதும் பஞ்சவர்களு
க்குச் சொல்லுகிறது.

---

மாயன்பெருமாளும் வார்த்தைபங்கேது சொல்வார்
திரியோதிரன்செய்த சேதியெல்லாம்சொல்லலுற்றார்
காளமகாரிஷியையுங் கூடிகிவருந்தியவன்
கொல்ல அனுப்பினன் கொப்பெனவேஉங்களைத்தான்
காளமகாரிஷியுங் கூடிகிவனந்தனிலே
அக்கினிகுழியநகே அனநததபசுபண்ணி
வேதாளமுணடுபண்ணி வேநதருங்களைக்கொல்ல
நாமிருநதபடியினலே நமனையழைத்துவநதோம்
தாமரைப்பொய்கையொனறு தணணீருமுண்டுபண்ணே
ன், மாணுகவநதலவோ வரவழைத்தேனுங்களைத்தான
அநதரமாய்தான்பேசி அனைவரையுங்கொன்றுவிட்டு
ஓட்டனைப்போலேவநது உங்களைவலித்திருந்தேன்
அநீதமாய்ப்போறீரென அனைவரையுங்காக்கவந்தேன்

என்னபலன்கண்டேன் இராஜாவேவுங்களாலே
பாயனுரைகேட்டு வளமம்பரியதருமராயர்
பாதத்தலேவிழுந்து பணிந்தமுறையமிட்டார்
உடையையன்றிவேறுதெய்வம் ஒருவரெனக்கில்லையையா
உம்மைச்சதமென்று உயிர்கொண்டுலாவினேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
வேரைச்சதமெனபேன் இனியாரைத்தஞ்சமென்பேன
நீயே துணையல்லாமல் வேறேதுணையுமில்லை
அடியாரைக்காக்கிறது ஆண்டவனேயுனபெருமை
யாகுமிறேயென்றுசொல்லி கங்கணங்கட்டினிரே
இடைசிககவேணுமென்று யெம்பெருமாளாய்ப்பிறந்திர்
இனமென்னவினைவருமோ யானறியேனுண்டவனே
ஏதேதுசெய்வானோ இராஜன்திரியோதிரன
அத்தனைக்கும்வந்திருந்து அடியாரைக்காருமென்றார்
என்றல்லோஐவருமாய் இறங்கியடிபணிந்தார்
மெத்தமனமகிழ்ந்தார் மேகவண்ணரெம்பெருமாள்
சித்தமகிழ்ந்தார் தேகமெல்லாந்தான்குளிர்ந்தார்
நல்லஅபஞ்சவரே ராஜர்களே நீர்கேளும்
இந்தவனத்தைவிட்டு இன்னமொருவனத்தில்
மறுமொருவனத்தில் வாசங்கள்பண்ணுமென்றார்
என்னைவினையதாலும் என்னை நினையுமென்றார்
போய்வாரோமென்று பெருமாள்பயணமிட்டார்
ஏமனகடாவின்மேல் எம்பெருமாள்கருடன்மேல
வாகனத்தின்மேலேறி வழிபிடித்துப்போனார்கள்
எமபுரந்தான்தேடி எமனும்போய்விட்டான்
நாலாமவருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

நான்காவது காளமகாரிஷிவனம்

முற்றிற்று.

---

## ரு-வது, சயிந்தவமகாரிஷிவனம்.

ஐந்தாம்வருஷம் பிறந்ததிலைவருக்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
அத்திபுளிகளை அம்மையுந் தாயவளை
தின்றுதிரிகிறார் தேசாந்திரிபோலே
சயிந்தவரிஷிவனத்தில் தானடைந்தார்பஞ்சவர்கள்
ஓரடிக்குபர்ணசாலை உண்டுபண்ணுமைவர்களும
மூன்றடிக்குபர்ணசாலை மூடிபன்னருண்டுபண்ணுர்
ஐந்தடிக்குபர்ணசாலை ஆனழகருண்டுபண்ணுர்
ஆறடிக்குப்பர்ணசாலை ஐவர்களுமுண்டுபண்ணுர்
ஏழடிக்குப்பர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணுர்
பர்ணசாலைமேலாகப் பஞ்சவர்கள்குடியிருந்தார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவ்வனத்திற்றானிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணுர்
அனேகநாள்சென்றபின்பு ஆரணங்குதிரௌபதையும்
அந்தவனஞ்சாரிவர ஆரணங்குதிரௌபதையும்
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கையிலே
உச்சிதங்கள்பார்த்தே உலாவிவருகையிலே
ஆகாயந்தன்னளவாய் அங்கேயொருமாந்தான்
வளர்ந்துதழைத்து மரத்திற்பழுத்திருக்கும்
ஒண்டிப்பழந்தான் உயரந்தகிளைமேலிருக்கும்
சூரியகாந்தியைப்போல் சோனுந்தஅதுதிரௌபதைக்கு
மெத்தாசைப்பட்டாளே மெல்லியிளங்கொடியாள்
கண்டாசைப்பட்டாளாம் கண்ணுடனேதேவியரும்
இந்தக்கனியை எவர்பறித்துதான்கொடுப்பார்
தருமருடன்சொன்னுல் தலைவரிதைக்கேளாரே
மதவீமருக்குரைத்தால் வயிறாவுண்டிடுவீர்
நகுலர்சகாதேவர் நம்மாலமுடியாதென்பார்
அருச்சுனற்குத்தானுரைத்தால் அவராலேயாகுமது
மற்றொருவர்தன்னலே மாளாதுகனிபறிக்க
அருச்சுனரைமெள்ள அழைத்துவருவோமென்று



அர்ச்சுனன் துரோபதைக்காக எய்தமாங்கனிநிலத்திலிருந்து எ டுக்கக்கூடாமையால் எம்பெருமான் மனஞ்சோதித்து கனியைமரத்தி ல் ஒட்டும்படிசெய்தது.

மெல்லநடந்தாளே வேல்பொருதுங்கண்ணாளும்
கொஞ்சிநடந்தாளே கொம்பேரிடையாளும்
அருச்சுனராஜனண்டை ஆணழகிவந்துநின்று
அருச்சுனரைக்கண்காட்டி அழைத்தாளேயிப்புறத்தில்
ஜாடையறிந்தல்லவோ தார்வேந்தனோடிவந்தான்
தருமரறியாமல் தையலருமேதுசொல்வாள்
ஒருமனுவுமெந்தனுக்கு உத்தாரந்தாருமென்றாள்
அந்தவுரைகேட்டு அருச்சுனருமேதுசொல்வார்
மனதில்நினைத்ததெல்லாம் மயிலணையேகேளுமென்றார்
சிந்தையிலெண்ணமெல்லாம் சீராகச்சொல்லுமென்றார்
கேட்டமனுவுக்கு கிளிமொழியேதாரேனென்றான்
உரைத்தபடியுனக்கு தருவேன்காணுத்தமியே
அந்தமொழிகேட்டு ஆரணங்குதுரோபதையும்
கொஞ்சினவார்த்தையுடன் கோபாலன்தங்கையரும்
முத்துநகையாளும் மூருகுழலாளேதுசொல்வாள்
காணாதுகண்டேனையா கண்டாசைப்பட்டேனையா
பாராதுபார்த்தேனையா பார்த்தாசைப்பட்டேனையா
தங்கத்தைக்காய்ச்சியே தரையில்கவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியிலேவிட்டதுபோல்
சூரியனைப்போலழகாய்த் தோணுதுமாங்கனிகாண்
சந்திரனைப்போலழகாய்த் தானிருக்குமாங்கனிதான்
அந்தக்கனியுண்பதற்கு ஆசையாய்த்தோணுதது
மாங்கனியையுண்பதற்கு மனதுமெத்தத்தோணுது
அந்தக்கனிபறித்து அருச்சுனரேதாருமென்றாள்
மாங்கனிதனைப்பறித்து மன்னவரேநீர்தாரும்
என்றுவணங்கினளே இளங்கொடியாள்பாஞ்சர்லி
வணங்கியெழுந்திருந்து மன்னனுக்கேதுசொல்வாள்
தனஞ்சயரேகனிபறித்துத் தாராமற்போனக்கால்
தண்ணீர்குடியேன்காண் தாகவிடாய்தீரேன்காண்
ஆறுமாதமானாலும் அன்னம்பொசியேனென்று
சொல்லிப்பிணங்கினளே துரோபதைபாஞ்சாலி
ஆணழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்

கனிக்காக நீபிணங்க லாகுமோகட்டழகி
இதற்காய்பிணங்குவரோ இட்சணமே தாரேனென்ருன்
அந்தரமாயிருந்தாலும் அறுத்துநான் தாரேனென்ருன்
எந்தமரத்திலே யிருக்குதுபெண்ணரசே
பழங்களிருக்கின்ற பாரவனமெங்கேயென்ருன்
என்றுமவர்கேட்க இளங்கொடியாளப்போது

அருச்சுனன் துரோபதைக்கு மாங்கனிபறித்துக்
கொடுக்க வருகிறது.

---

வாருமையாவென்றுசொல்லி வணங்கியெழுந்திருந்து
அழைத்துவருகிருள் அருச்சுனராஜாவை
கூட்டிவருகிருள் கொப்பெனவேயர்ச்சுனரை
கடந்தார்சிலதூரம் கனியிருக்குமவ்வனத்தே
வந்தாரிருவருமாய் மங்கைதுரோபதையும்
இதுதான்மரமென்று இளங்கொடியாள்காட்டலுற்ருள்
ஆணுலழகுமன்னன் அர்ச்சுனராஜதுரை
மரத்திலிருக்குமந்த மாங்கனியைத்தான்பார்த்து
ஆயிரம்யோசனைதூரம் அந்தரமாயிருக்கிறது
இந்தக்கனிபறிக்க எவரால்முடியுமென்று
இத்தனைதூரத்தி லிருக்கின்றமாங்கனியை
எப்படிக்குநாம்பறித்து ஈந்திடலாமதுரோபதைக்கு
என்றுநினைத்து எழில்விஜயனப்பொழுது
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அப்புறாத்தூணியிலே அலகம்புதானெடுத்து
அர்த்தசந்திரபாணமதை அருச்சுனருமுச்சரித்தார்
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானக்கனிமேல்
மார்புரளவாங்கியல்லோ தோள்புரளவிட்டானே
வருகுதுயஸ்திரந்தான் மாங்கனியைத்தன்னுந்குது
மரத்தில்பழத்தையல்லோ பாணமறுக்கையிலே
அந்தக்கனிவிழுமாம் அண்டாண்டந்தானதிர
அண்டங்களதிர்ந்துவிழ அவனிபாதாளம்விழ

பூமியதிர்ந்துவிழ பூலோகந்தத்தளிக்க
எல்லையதிர்ந்துவிழ எமலோகந்தத்தளிக்க
கெற்பங்கலங்குது கெந்தருவலோகமெல்லாம்
ஓங்குமபெருங்கால்தான் ஒருபக்கம் நீர்வாங்கும்
நட்சத்திரங்களெல்லாம நாலுதிக்குமகாணுதிர
பூமியதிரசேடனை புஜத்தோடேபுஜமதிர
ஆதிசேடன்தானும் அதிர்ந்துமேநஞ்சுகக்க
ஆகாசம்நிறைநதிர அங்கப்போவிழுந்தது
மரத்திலிருந்தகனி மண்மேல்விழுந்தது [ள்
அருச்சுனருந்துரோபதையும் அக்கனியைப்பார்த்தார்க
பாரமலைபோலே பருவதப்போற்றோணுது
இருவராலாகாது இந்தக்கனியெடுக்க
இந்தக்கனியைநாமெடுத்துமுடியாது
ஆனைபலமுள்ளவன் அருச்சுனனுமேதுசொலவான்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
வெற்றிமதயானை வீமனையழையுமென்றான
அப்படியேநலமென்றாள் ஆனந்தவாழ்மாரி

துரோபதை வீமனை அழைக்க வீமன்வருகிறது.

---

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
அன்னமதுபோலே ஆரணங்குவந்துமல்லோ
வெற்றிமதயானை வீமனருகில்வந்து
அருச்சுனராஜனுமமை அழைத்தோடிவாருமென்றார்
சீக்கிரம்வருகவென்று தேன்மொழியுந்தெண்டனிட்டாள்
வெற்றிமதயானை வீமனுந்தானகேட்டு
அப்படியேநலமென்று ஆனந்தவாழ்மார்பன்
இருந்தவிடத்தைவிட்டு எழுந்துநடந்தானே
இருவருமாகவே ஏகிநடந்துவந்து
கனியிருக்குமவ்வனத்தே கடுகியேகண்டார்கள்
தருமறியாமல் அழைத்துவந்தாள்தையலரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்தான்

அசைக்கியேபார்த்தானே அசையவில்லையக்கனிதான்
வெற்றிமதயானை வீமனவனோ சொல்வான
நகுலசகாதேவ ராஜாவையழையுமென்றான்
ஆரணங்குத்துரோபதையும் அப்படியேநல்லதென்று

துரோபதை நகுலசகாதேவர்களை அழைக்க
அவர்கள் வருகிறது.

---

கொஞ்சியேவந்தாளே கொம்பேரிடையாளும்
நகுலசகாதேவ ராஜாக்கள்முன்னேவந்து
அருச்சுனரும்வீமரும் அழைக்கிறார்களேதான்
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
நகுலசகாதேவ ராஜாக்கள்தானகேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தமாயெழுந்தார்
மூவர்களுமொன்றாகி முடுகிவந்தார்கானகத்தே
மாங்கனிதானிருக்கும் வனத்தில்வந்துசேர்ந்தார்கள்
நகுலசகாதேவ ராஜர்களும்வந்தாரென்று
எல்லவருமொன்றாகி எடுப்போங்கனியையென்று
ஐந்துபேருங்கூடி அக்கனியைத்தானெடுத்தார்
என்னபலங்கொண்டு இழுத்துவலித்தாலும
எந்தவிதத்திலேயும் எடுபடலை அக்கனிதான்
சிந்தைகலங்கினார்கள் திடுக்கிட்டுமெய்மறந்தார்
மெத்தப்பயமாச்சே வேந்தர்கள் நால்வருக்கும்
தோராவடிவழகி துரோபதையைத்தான்பார்த்து
அழகானதருமருக்கு அறிக்கையிடுபெண்ணேயென்றார்
தோராவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு
ஆகட்டுமென்றுசொல்லி அபபடியேநல்லதென்று

மாங்கனியினால் ஐந்துபேருந் திகில்பட்டுத் துரோபதை
தருமரை அழைக்க தருமர்வருகிறது.

---

துள்ளியெழுந்தாளே துரோபதைநாயகியும்
ஓடிநடந்தலவோ ஒருநொடியில்வந்தாளே

தருமரெதிரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
வாள்விஜயாருக்கொருமாங்கனியைத்தானறுத்தார்
கொடுத்தாலெவிடாதேயென்றுவரச்சொன்னார்கண்
ணாருமைபாமாவென்றுசொல்ல வருந்தியேதெண்டனிட்டா
ன், தக்கப்புகழுடைய தருமராதுகேட்டு
இதனென்ன அதிசயங்களென்றேயெழுந்திரென்றார்
தருமருந்துரோபதையும் இருவரும்வந்தார்கள்
பாமாதருகேவந்தார் மகாராஜர்தருமலிங்கம்
உற்றுற்றுப்பார்த்துமே யோசனைபண்ணுகிறார்
தம்பிமார்நாலுவரையும் தருமராவரழைத்து
சாயாப்புமன்னவனார் தருமராங்கேதுசொல்வார்
ஆருண்ணுமாங்கனியோ அறியேனே தம்பியரே
எவருண்ணுமாங்கனியோ யேதுமறியேனே
எந்தெந்ததேவர்கள் எடுத்துப்புசிக்கிறதோ
சத்தரிஷியவர்கள் சந்நியாசியுண்கிறதோ
மேலுலகத்தெருவா சாலவந்துண்கிறதோ
வெகுமோசம்வந்ததென்று கடுகியேதருமராயர்

மாங்கனியினால் மோசம்வந்ததென்று தருமர்
எம்பெருமானை நினைத்து தோத்திரம்
பண்ணுகிறது.

---

தக்கப்புகழுடைய தருமராவர்பயந்து
சிந்தை கலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
உள்ளங்கலங்கியல்லோ உடப்புவிடவிடத்து
மன்னர்மனஞ்சலித்து மனதிலேயெண்ணுகிறார்
ஆரைநினைக்கிறார் அளவற்றசிந்தையிலே
எவரைநினைக்கிறார் எண்ணமற்றசிந்தையிலே
மாயன்பெருமாளை மனதில்நினைத்தாரே
அண்டமுலகளந்த ஆதிமூலமிங்கேவா
ஏழுலகமாண்டசுவாமி எம்பெருமாளிங்கேவா
மண்ணளந்துகணைக்குச்சொன்ன மாயவரேயிங்கேவா
தாடகைமுக்கறிந்த தயாளகுணையிங்கேவா

அகலிகைசாபந்தீர்த்த ஆண்டவரேவாருமையா
எல்லையளந்தவரே யெம்பெருமாளிங்கேவர
ஏழைவருந்துகிறேனே எழுந்தருளிவாருமையா
இப்படியாக யிவர்வருந்தும்வேளையிலே

தருமர் இங்கே இப்படிவருந்துவதை எம்பெருமாள்
அறிந்து தான்தருமரண்டை வருகிறது.

---

பஞ்சவர்கள்வருந்துவதைப் பாரளந்தார்தாமறிந்து
ஐவருக்குமங்கேதான் அனர்த்தம் வருகுதென்று
சயிந்தவரிஷியாலே சாபம்வருகுதென்று
ஆயாவரறிந்து அங்ஙனமேதானெழுந்து
ஐவரையுங்காக்கவென்று அப்பொழுதேவாராராம்
வட்டமாங்கருடனேறி வாராரேதருமரண்டை
வனமாய்வனந்தாண்டி வாராரேதருமரண்டை
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகளைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
சில்லெண்றகாடும செடியும்வனந்தாண்டி
சயிந்தவரிஷிவனத்தைத் தான்கண்டார்மாயவரும
பஞ்சவர்கள்தானிருக்கும் பாரவனத்தில்வந்தார்
மாயவரைக்காணுகையில் வளம்பெரியதருமராயர்
ஐந்துபேருமாகவே ஆயரைத்தெண்டனிட்டார்
முக்கால்வலமவந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டதோராசனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
பஞ்சவரைத்தான்பார்த்து பாரளந்தாரேதுசொல்வார்
ஏதுவகையாக என்னையழைத்தீர்கள்
அழைத்ததொருகாரியத்தை அடவுடனேசொல்லுமென
உங்கள்-மனதிலிருக்கிற மருமத்தைச்சொல்லுமென்றார்

தருமர் மாங்கனியின்வரலாறு சொல்லுதல்.

---

மாயன்பெருமாளும் வார்த்தைகள்சொல்லுமென்றார்
சாயாப்புயன்னவனார் தருமாவரேதுசொல்வார்
ஆகாததம்பிமார சகட்ருடன்பிறந்தேன்
பொல்லாததம்பியுட னல்லற்படப்பிறந்தேன்
எந்தன்விதிவசத்தை என்னவென்றுசொல்வேன்காண்
ஆருண்ணுமாங்கனியோ அறியேனேமாயவரே
எவருண்ணுமாங்கனியோ ஏதுமறியேனே
ஆகாததம்பியர்கள் அறுத்துவிட்டாரென்னசெய்வேன்
எம்பெருமான்தனையழைத்தா லெல்லாந்தெரியுமின்று
வந்தீரேமாயவரே வயணங்கள்சொல்லுமென்றார்

எம்பெருமாள் மாங்கனியின் வரலாறுகேட்ட
பஞ்சவர்களைப் பயங்காட்டி மனஞ்
சோதிக்கிறது.

---

தருமருரைகேட்டு சாமியவரேதுசொல்வார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
மைமோசம்வந்துதே கட்டழகா யென்னசெய்வோம
தவசிற்பெரியவர்காண் சமிந்தவரிஷியாரும்
வரத்திற்பெரியவர்காண் பகாதேவரக்கொப்பிடலாம்
யோகத்திற்பெரியவர்காண் உற்றசந்யாசியர்காண
ஒருநூறுவருஷமட்டும் யோகத்திலேயிருப்பார்
அவ்வருஷம்சென்றபின்பு அறுத்திடுவார்மாங்கனியை
அறுத்துப்பொசித்திடுவார் அந்தமகாமுனியும்
அநதமகாரிஷியும் இந்தவனத்துக்கது
வருகிற நாளாகிசே மாங்கனியைத்தான்புசிக்க
வநதுமவர்பார்த்த மாங்கனியைக்காணுவிடில்
கோபித்துக்கண்சிவந்து கொல்லநினைப்பாரே
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
கல்லாகமண்ணாகக் கடுகிச்சபிப்பாரே

முள்ளாகமண்ணை முன்னேசயிப்பாரே
இன்னாள்பிழைத்திருந்தேன் இறந்துவிட நாளாச்சே
சேனநாள் பிழைத்திருந்து செத்துவிட நாளாச்சே
திரியன்செய் வஞ்சனைக்கு சிவன்தப்பிப்பிழைத்திரே
மாபாவிசெய்ததற்கு மாளாமலிருக்கிர்கள்
இந்தவனத்திலே இறந்துவிடக்காலபோதானை
சயிந்தவரிஷ்யாலே சாவுவரநாளாச்சே
இதற்கோயெனையழைத்திர் என்றாரேமாயவனார்

எம்பெருமாள் கனிபின்வரலாறுசொல்லி தன்னாலே
ஒன்றும் ஆகாதென்றுசொல்ல தருமர்
பலம்புகிறது.

---

இப்படியாகவேதான் செப்பத்திருமாலும்
இவ்வார்த்தைகேட்டாரே எழிலானதருமலிங்கம்
முகில்வண்ணர்முன்னாலே முறையிடத்தொடங்கினார்
ஆகாததம்பிமார் அசடருடன்பிறந்தேன்
பொல்லாத துஷ்டருடன் பிறந்ததொருதன்மையினால்
என்-அங்கங்குலையுதே ஆண்டவரேயென்னசெய்வேன்
என்னையறியாம லிக்கனியைத்தானறுத்தார்
அறிந்தேனேயாமானால் அறுக்கவொட்டேனிக்கனியை
பார்த்தேனேயாமாகில் பறிக்கவொட்டேன்மாங்கனியை
அடியார்கள்செய்தபிழை ஆண்டவரேமனம்பொறுத்து
தெரியாதார்செய்தகுற்றந் தேவர்மனம்பொறுத்து
உன்-உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாமல்
உன் பெட்டியின்பூஷணங்கள் பெருமைகுலையாமல்
உன்-தோளில்செபமாலை தொண்டழிந்துபோகாமல்
உன்-கையில்செபமாலை கனங்குலைந்துபோகாமல்
காக்கக்கடனுனக்குக் கரியமாலெம்பெருமாள்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமெனபேன்
என்றுதருமரங்கே நின்றுபுலம்பக்கேட்டு

மாயன்பெருமாளும் மறுவார்த்தையேதுசொல்வார்
என்னைவருத்தாதே என்மேலசலியாதே
உத்தமரே உங்களாலே மெத்தப்பொழுதாச்சு
எச்செலவருளும் என்றார்பெருமாளும்
தக்கப்புகழுடையோர் தருமராஜரேதுசொல்வார்
பரிதாபம் நாங்கள்படப் பார்த்துமேபோவதற்கு
மனமுழ்வருகிறதோ மாயவரேஉந்தனுக்கு
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்மாயவரும்
புகழ்வேந்தர் வார்த்தைக்குப் பொருந்தவேணுமிக்கனி
தான், ஐவருடைவார்த்தையினால் அம்மரத்திலொட்டவே
ணும், அல்லாதேயாமானால் ஆராலுமுடியாது
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
அடியேனுரைவிதத்தை ஆண்டவரேசொல்லுமையா

எம்பெருமான் ஐவருடைய எண்ணமும் துரோபதை
எண்ணமும் அறிந்து மாங்கனிமரத்தில்
பொருந்தினது.

---

தருமருரைகேட்டு சாமிமனமகிழ்ந்து
மாயன்பெருமாளும் வார்த்தையவரேதுசொல்வார்
ஐவர்மனதறிய ஆண்டவரேதுசொல்வார்
தக்கபுகழ்பெரிய தருமரே நீர்கேளும்
உன்மனதிலேதானிருக்கும் மர்மத்தைச்சொன்னீரானால்
வஞ்சனைகளெண்ணாதே மனக்கவடில்லையாதே
உண்டானபடியாக உரைத்தீரேயாமாகில்
அற்றுவிழுந்தகனி அம்மரத்திலொட்டுமென்றார்
மண்மேல்விழுந்தகனி மரத்தின்மேலேறுமென்றார்
அல்லாதேயாமானால் அக்கனிபொருந்தாது
இல்லாதேயாமானால் இறந்திடுவீர்கள்
சொல்லாதேபோனாலே சுருக்காய்மடிந்திடுவீர்
பெருமானவர்சொல்லப் பேர்பெரியதருமலிங்கம்
மாயருரைகேட்டு மகாராஜரேதுசொல்வார்

மனசிலிருக்கின்ற மர்மமதைவதுசொல்வார்
தன்மனதிலுள்ளபடி தார்வேந்தரேதுசொல்வார்
பெரியதந்தைபெற்றெடுத்த பிள்ளை திரியோதிரன்
தம்பிமார்தன்னுடனே தானுஞ்சுகமானால்
ராச்சியம்நலமாகி நாமுஞ்சுகமானால்
நாடெங்கும்வாழ்ந்திருந்தால் கேடொன்றுமில்லையென்று
பெரியோருரைப்படிக் ப் பூமிசுமக்காதோ
என்றுநினைவொழிய இனியொன்றுநானறியேன்
இப்படிக்குத்தானுரைத்து இருந்தாரேதர்மலிங்கம்
அப்போதுமாங்கனியும் ஆகாசமேயெழும்பி
அறுந்துவிழுந்தகனி அந்தரத்திலெழும்புகுது
இருநூறுயோசனைகள் எழும்பியே நின்றுதங்கே

மாயனுக்குதருமர் மனோபாவஞ்சொல்ல மாங்கனி
இருநூறுயோசனை தூரமெழும்பப்பெருமாள்
வீமனைக்கேட்கிறது.

---

எம்பெருமாள்மாயவரும் ஏதுசொல்வாரப்போது
மதவீமனையழைத்து மாயவனேதுசொல்வார்
உனமனதிலுள்ளபடி யுரையுமென்றார்மாயவரும்
வெற்றிமதயானை வீமனவனேது சொல்வான்
திரியோதிரராஜன் சேனைபரிகலங்கள்
குருடன்மகனூராங் குடிகெடுத்தாரசர்களை
நூலார்கடுந்திறளா நூற்றொருவரசர்களை
கௌரவர்சேனைகளைக் கண்டதுண்டமாக்கியல்லோ
ஆனைகுதிரைகளை அழகுள்ளசேனைகளை
சாமத்துரோகி சகுனியவனையுமே
கொன்று அதமாக்கி கொடியபனையாள் துரோபதையை
கொற்றார்குழலியரைக் கூந்தல்முடிக்கவைப்பேன்
துகிலையுரிந்தகொரு துற்சாதனனுதிரமெல்லாம்
வாரிக்குடித்தாலே வயிறெரிவுதீருமையா
அள்ளிக்குடித்தாலே அங்கநதர்க்குமையா

பேர்பெரிய அண்ணருக்குப் பட்டந்தரித்தாலே
அப்போதுஎன்மனது ஆயாசந்தீருமையா
வெற்றிமதயானை வீமனுரைக்கையிலே
என்றபொழுதே எழும்புதுமாங்கனிதான்
சாற்றுமபடிநாநாறு யோசனைதூரம்நின்றிடுமாம்

மாயனுக்கு வீமன்மனோபாவஞ்சொல்ல மாங்கனி
ஈறாறுயோசனை தூரமெழும்பப் பெருமாள்
அருச்சுனனைக் கேட்கிறது.

---

அப்போதுஎம்பெருமாள் அங்கெனவேயேதுசெய்தார்
அருச்சுனனைப்பார்த்து ஆணழகர்கேட்கலுற்றார்
வாள்விஜயாஉந்தனுட மனதில்நினைந்ததெல்லாம்
ஒன்றுமொழியாமல உரையுமென்றார்மாயவனார்
என்றுமவருரைக்க எழில்விஜயனர்ச்சுனனும்
மாயருரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
காவலசகுனியும் கங்கேயராவவரை
கொல்லுகிறேனென்று சொல்லிக் கொடியசபதமிட்டேன்
சங்கமனைக்கொல்லுகையில் சமர்பூமிக்ஷேத்திரத்தில்
அமரர்சமரதர் அளவற்றராஜாக்கள்
அனைவரையுங்கொன்றுமே அண்ணருக்குப்பட்டங்கட்டி
அண்ணருக்குப்பட்டங்கட்டி அடிபணிந்தாதிற்கவென்
று, எண்ணியிருக்கிறேன் இனியொன்றுமில்லையென்றான்
அருநாறுயோசனைதூரம நின்றது அக்கனிதான்

மாயனுக்கு அருச்சுனன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி அறுநாறுயோசனைதூரம் யெழு
ம்ப பெருமாள் நகுலனைக்கேட்கிறது.

---

அப்போதுஎம்பெருமாள் அங்கெனவேயேதுசெய்தார்
நகுலனைத்தானழைத்து நாரணருமேதுசொல்வார்

நாமமுடியானே நகுலனேயென்றழைத்து
மனதில்நினைத்ததொரு மாமத்தைச்சொல்லுமென்றார்
மாயருரைகேட்டு மன்னவனுமப்பொழுது
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
திரியோதிரனபடைகள் சேனைகளைக்கொன்றழித்து
ஆனைசேனைபரிவாரம அடங்கலுங்கொன்றழித்து
மாறளவுரத்தங்களை வழியவிட்டுமண்மேலே
அதமாக்கிசேனைகளை அண்ணருக்குப்பட்டங்கட்டி
என்-கண்ணாலேபார்ப்பதற்கு கருததில்நினைத்தேனையா
என்றுமவனுரைத்து இருநதான் நகுலனுமே
அந்தவுரைகேட்டு அழகானமாங்கனியும்
அந்தரத்தில்நின்றகனி அப்புரத்தில்போகுது
எண்ணாறுயோசனையில் நின்றது அக்கனிதான்

எம்பெருமானுக்கு நகுலன்மனோபாவஞ்சொல்ல மாங்
கனி எண்ணூறுயோசனைதூர மெழும்பப்
பெருமாள் சகாதேவனைக் கேட்டது.

---

எம்பெருமாள்மாயவருமேதுசெய்தாரப்பொழுது
சகாதேவராசாவை சாமியார்கேட்கலுற்றார்
இளையசகாதேவா எண்ணமெல்லாஞ்சொல்லுமென்றார்
தாமமுடியழகன் சகாதேவனேதுசொல்வான்
திரியோதிரன்படையை சேனைபரிதளத்தை
உன்பாதம்பிரசில்லைத்து உக்கிரமாய்ச்சண்டைசெய்து
அண்ணனுக்குப்பட்டங்கட்டி அவனிதனையாளவென்று
எண்ணியிருக்கிறேனே இதுவேநினைவொழிய
மற்றொன்றுமில்லையென்று மாயர்பாதம்பணிந்தான்
இவ்வாறுதானுரைத்து இருந்தான்சகாதேவன்
அப்போதுமாங்கனியும் அனேகதூரமெழும்பி
தொளாயிரம்யோசனை தூரம்நின்றதக்கனிதான்

எம்பெருமானுக்கு சகாதேவன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி தொளாயிரம்யோசனை தூரத்தில் நிற்க
எம்பெருமான் துரோபதையைக் கேட்கிறது.

---

ஆதிநாராயணரும் அங்கெனவேயேதுசெய்தார்
நாராயணபெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணேபத்தினியே துரோபதையே
நெருப்பிற்பிறந்தவளே நீலப்பசுங்கிளியே
ஐவருக்குந்தேவியரே அழியாதபத்தினியே
மனதில் நினைத்ததெல்லாம் மங்கையரேசொல்லுமென்றார்
நெஞ்சில் நினைத்ததெல்லாம் நேராகச்சொல்லுமென்றார்
அப்போது துரோபதையும் ஆரணங்குமேதுசொல்வாள்
ஆரத்திலப்புலியாள் தாசிபடாப்பத்தினியாள்
வானத்திலம்புலியாள் மாசுபடாப்பத்தினியாள்
என்னவென்றுசொல்லலுற்றாள் யேலப்பசுங்கிளியாள்
திரியாதனபாவியத்தை செருக்களங்கள்கொன்றழித்த
ஐவர்களிடத்தொரு அருஞ்சபதஞ்சென்றபின்பு [து
வெற்றிபடையானை வீமருடக்கையாலே
பாம்புக்கொடிவேந்தன் பட்டபிறகாக
தென்னமுடிவேந்தன் திரியோதனன்பட்டபின்பு
நாகக்கொடியோனு நாசமடைந்தாலே
அவன்மல்லாக்கவிழுந்தவுடன மார்பிலேநானிருந்து
மார்பைப்பலகையாக்கி மார்பெலும்பைச்சீப்பாக்கி
மார்பில்வருமுதிரமெல்லாம வாரித்தலைதடவி
நல்லெண்ணெயைப்போலே நலங்கிடுகூந்தலுக்கு
சீப்புசிக்கல்கோலெடுத்து சிவியயிராற்றி
அவன்குடலைப்பிடுங்கியல்லோ கொண்டைக்கயிறுகட்டி
ஈரலைப்பிச்செடுத்து யிறுக்கித்தலைமயிர்முடிப்பேன்
என்விரித்ததலைமுடிக்க மெத்தநாள்சென்றிடுமோ
அவிழ்ந்ததலைமுடிக்க அனேகநாள்சென்றிடுமோ
கூந்தல்முடிப்பேனே குறைகளெல்லாந்தீர்வேனே

சாமிதயவாலே தலையைமுடிப்பேனே
என்று நினைத்திருந்தேன் இனியொன்றுநானறியேன்
இந்தவிதஞ்சொல்லி இருந்தாளேபாஞ்சாலி

துரோபதை மனோபாவஞ்சொன்னது சரியல்லாமல்
தொளாயிரம் யோசனை தூரம்போன மாங்கனி
பூமியில்விழ பெருமாள் துரோபதையைக்
கேட்கத் துரோபதை சொல்லல்.

---

துரோபதைசொல்லலுமே தூரயிருந்தகனி
அந்தரத்தில்நின்றகனி அவனியதில்விழுந்தது
ஆகாசம்போனகனி அற்றுவிழுந்தது
கண்டார்கரியமாலுங் கடுக்கனவேயேதுசொல்வார்
மனதில்கபடுவைத்து வஞ்சனைகள்சொன்னதினால்
அந்தரத்தில்நின்றகனி அவனியிலேவிழுந்ததென்றார்
ஏதேதொளித்தாயோ எந்தனுக்குச்சொல்லுமென்றார்
ஒன்றுமொளியாமல் உத்தமியேசொல்லுமென்றார்
அப்போதுதுரோபதையும் ஆரணங்குஏதுசொல்வாள்

துரோபதை மறுபடியும் பெருமாளுக்கு உண்மையைச்
சொல்ல மாங்கனி மரத்தில்
பொருந்தினது.

---

அண்ணாவே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
இன்னமொருபாவம் இனியொன்றுநானறியேன்
மற்றுமொருபாவம் வஞ்சனைகளொன்றறியேன்
யாதொருவஞ்சனைகள் இடறுகள் நானறியேன்
அண்ணாகரியமாலே அடியேனொருவார்த்தை
பார்த்தனையாலேவிடப் பாஞ்சாலன்என்னைப்பெற்றான்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேருமுண்டு

அடிக்கிறகாற்றதனில் அலை துரும்புதானுமுண்டு
காலவிஷமுண்டவர்க்கு கண்டங்கறுப்புமுண்டு
நீர்ச்சுழலுமுண்டு நிலமதனிற்பூச்சியுண்டு
தண்ணீர்க்கலையுமுண்டு சமுத்திரற்குப்பாசமுண்டு
சந்திரற்குமாசுமுண்டு சற்றேகறுப்புமுண்டு
குண்டுமணிக்கானாலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
எனக்கு-மையேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
பொட்டேகறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
அக்கினியிற்பெண்பிறந்தேன் ஐவரையுமாலையிட
நெருப்பிலேபெண்பிறந்தேன் அருச்சுனரைமாலையிட
என்கூடப்பிறந்தது கோதண்டமானவில்லு
பத்தரையில் நான்வளர்ந்தேன்பார்த்தரேவேணுமென்று
ஆடுக்கரையில நான்வளர்ந்தேனருச்சுனரேவேணுமென்
று, வளர்ந்துசமைந்தேனே மாலையிடும்நாளானேன்
போதவளர்ந்தேனே பிள்ளைபெறும் நாளாச்சு
இப்படியாக இருக்கின்றவேளையிலே
எழிலானபர்ச்சுனற்கு என்னைக்கொடுக்கவென்று
என்தகப்பன்பாஞ்சாலன் எண்ணியிருக்கையிலே
அரக்குமாமாளிகையில் ஐவர்மடிந்தாரென்று
மாண்டார்களென்றுசொல்லி மண்டலத்திற்பேராச்சு
செத்தார்களென்றுசொல்லி ஜெகமெல்லாம்பேராச்சு
அப்போதுயென்தகப்பன் ஆயாசப்பட்டுருகி
அருச்சுனற்கென்றபெண்ணை ஆர்க்குக்கொடுப்பேனென
அருச்சுனனைப்போலாக ஆண்பிள்ளையில்லையென்று
வில்லுவளைப்பாரகன் மேதினியிலில்லையென்று
எலம்பசுங்கிளியை யெப்படிக்காப்போமென்று
என்னுடைய பெண்ணியே இருந்துவிசாரமிட்டார்
இப்படியாக இருக்கின்றகாலத்திலே
வந்தாரேயந்தவேளை மகாவியாசபகவானும்
என்தகப்பன்பாஞ்சாலன் எழுந்திருந்தோடிவந்து
கண்டவுடனேயல்லோ கடுகயெழுந்திருந்து
வந்தவியாசரை வணங்கியேதெண்டனிட்டு

இருமிருமென்றுசொல்லி யிட்டார்சிம்மாதனங்கள்
இட்டசிம்மாதனத்தில் ஏறியவர்வீற்றிருந்து
என்தகப்பனைப்பார்த்து என்னவென்றார்வுக்ஷேமம்
அப்போதுயென்தகப்பன் ஆசாரமாயுரைப்பார்
எந்தன்விசேஷமெல்லாம் எடுத்து அவர்க்குரைத்து
அருச்சுனற்கென்று நான் அனலிற்பிறந்ததுவும்
அரக்குமாமாளிகையி லேவரிறந்ததுவும
இத்தனையுஞ்சொல்லி இருந்தாரேயென்தகப்பன்
அப்போவியாசரும் அரசனுடவார்த்தையெல்லாம்
செவிகொடுத்துகேட்டுமல்லோ சீக்கிரமாயேதுசொல்வார்
உத்தமியாள்தன்னுடனே ஒன்றாய்ப்பிறந்தவில்லு
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லு
எடுத்துநிறுத்துமென்றார் எல்லவருந்தானறிய
பெருவில்லைவளைத்தவர்க்குப் பெண்ணைத்தருவேனென்
று, ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்தானறிய
அரசர்கள்தானறிய அறையும்பறையோசை
அப்போதறிந்திடலாம் ஐவருடசேதி
என்றுமவருரைத்து ஏகிநடந்தாரே
அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்து
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லை
வந்துவளைத்தவர்க்கு மாலையிட்டுத்தாரேனென்று
வில்லைவளைத்தவர்க்கு மெல்லியரைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்து அரசருக்குமோலைதந்தார்
பெண்ணைத்தருவேனென்று பிடித்தார்கள்சின்னதொனி
சின்னத்தொனியையல்லோ தேசமெல்லாமூதிவைத்தா
ர், பாஞ்சாலசீமையெல்லாம் பந்தலலங்கரித்தார்
எங்குமலங்கரித்தார் இராசாக்கள்வந்திருக்க
பாஞ்சாலன்சொன்னதொரு பரிவானவார்த்தையினால்
ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்வந்திருக்க
நாலுபுரத்திலுள்ள ராஜரெல்லாம்வந்தார்கள்
முத்துமுடிதரித்த முடிமன்னரானவரும்
பச்சைமுடிதரித்த பட்டத்துராசர்களும்

வச்சிரமுடி தரித்த மண்டலத்துராஜர்களும்
காசிநாடாண்டதொரு கர்ணமகாவீரியரும்
நாலுதிக்கிலுமண்டான ராஜரெல்லாம்வந்தார்கள்
அப்பெரியசந்நிலே அருச்சுனரும் நீருமாய்
அன்றொருபார்ப்பானாய் அங்குநீங்கள்வந்தீர்களே
பாஞ்சாலன்தானறியான் பாரளந்தாரானவரை
ஆருமறியாமல் அவரெடுத்தமார்க்கமெல்லாம்
உங்கள்வடிவுதன்னை ஒருவரறியார்கள்
அந்தச்சமயத்தில் அடைவுடனேயென்தகப்பன்
வந்திருந்தராஜர்களை வளையுமென்றார்வில்லதுவை
எப்பெரியராஜர்களும் இவ்வில்வளைக்கறியார்
கண்டபத்தினைப்படுப்பார் கலங்கியேவைத்திடுவார்
ஆராலுமுடியாது அப்பெரியவில்வளைக்க
காசிநாடாண்ட கருணனெழுந்திருந்து
வில்லைவளைத்துமல்லோ வில்நாரிபூட்டுகையில்
என்னுடையசொன்னினனே இவனேபுருஷனென்று
வடிவுநிலையுடையான் மாலையிடவேணுமென்று
எண்ணினேனென்மனதில் இனியொன்றும்நானறியேன்
வில்லைவளைக்காமல்கர்ணன் வில்தெரித்துபோய்விழுந்தா
ன், அன்றொருபார்ப்பானாய் அருச்சுனர்வில்வளைத்தா
ர், நீர்பார்த்துமினைப்தீர் நித்திலங்குப்பூமுடியார்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைபோடுமென்றார்
குஷ்டரோகியானவற்குக் குடித்தனஞ்செய்வேனோ
என்றல்லோமாலைதன்னை எடுத்தேசுழற்றிவிட்டேன்
கர்ணன்கழுத்திலே கைமாலைவிழுகாமல்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைவிழுந்தது
அப்பாவஞ்செய்ததல்லால் ஆயரேவேறொன்றில்லை
அருச்சுனர்க்குமாலையிட்டு ஐவருக்குந்தேவியானேன்
பார்த்தருக்குமாலையிட்டு பஞ்சவர்க்குத்தேவியானேன்
மற்றொருபாவங்கள் மாயவரேசெய்தறியேன்

எம்பெருமானுக்குத் துரோபதை தன்கலியாணச்
சங்கதி சரியாய்ச்சொல்ல மாங்கனி மரத்திற்
பொருந்தியது.

---

தோராவடிவழகி துரோபதையாள்சொல்லுகையில்
என்றபொழுதிலே எழும்புதுமாங்கனிதான்
பொட்டெனவேதானெழும்பிப் பொருந்துதேமாங்கனியு
ம், தருமர்மனங்குளிர்ந்து சந்தோஷமானாரே
பஞ்சவர்களைந்துபேரும் பார்த்துமகிழ்ந்தார்கள்

எம்பெருமான் பஞ்சவர்க்குப் புத்திசொல்லி தான்
அவர்கையில் செலவுபெற்று துவாரகைக்
குப் போகிறது.

---

ஐவர்மகிழ்ந்தபின்பு அரிராமரேதுசொல்வார்
பஞ்சவரைதானழைத்துப் பாரளந்தாரேது சொல்வார்
இந்தவனந்தனிலே இருந்துசிலகாலம்
மற்றொருவனந்தனிலே வனவாசஞ்செய்திடுங்கள்
என்னவினைவந்தாலும் என்னைநினையுமென்றார்
பத்திரமாக யிருங்களென்றார்பஞ்சவரை
போகச்சிலவுதாரு மென்றெழுந்தார்புண்ணியரும்
பஞ்சவர்களைவரும் பாஞ்சாலிதுரோபதையும்
ஐவருந்துரோபதையும் ஆண்டவனைத்தெண்டனிட்டு
போய்வாருமென்றுசொன்னார் புகழ்வேந்தரைவர்களும்
விடைபெற்றெழுந்தாரே வேந்தர்பெருமானும்
வட்டமங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகளைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
சில்லென்றாடும் செடிபுள்வனந்தாண்டி
துவாரகாபுரியைநாடி துரிதமுடனவந்துவிட்டார்.
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போனபின்பு



திரியோதிரன் சித்திரசேனனுடன் சண்டைசெய்து தேர்சக்கரத்தில் கட்டுபட்டது.

ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையு ம
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலனையாள்துரோபதையு
ம், அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணார்
இப்படியாக யிருக்கிறார்பஞ்சவர்கள்

ஐந்தாவது சயிந்தவமகா ரிஷிவனம்
முற்றிற்று.

---

## ௬-வது, காமதேனுபர்வதம்.

ஆறும்வருஷம் பிறந்ததுஐவருக்கு
அந்தவனந்தனைவிட்டு அப்பாலேபோறார்கள்
கூடைதலையிலே குடிவாழ்க்கைகாணகத்தில்
கோலிவைத்தீமாடு கூடைதலையிலேவைத்தார்
மன்னரினைவத்தீயாடு வனவாசம்போறார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடுகியேதானடந்தார்
காமதேனுவனந்தனிலே கடுகவந்துசேர்ந்தார்கள்
ஐந்துக்குப்பர்ணசாலை அழகாகஉண்டுபண்ணார்
எழுதிக்குப்பர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
அனேகநன்னாளாய் அவ்வனத்திலேயிருந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே

துரியோதிரன் ஆலோசனை.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்தானும
வணக்காமுடிவேந்தன் மாபாவியென்னசெய்தான்
சபைகள்நிறைந்திருக்கச்சர்ப்பக்கொடியோனுரைப்பான்
காணமகாரிஷியாரைக் கருத்தித்தபசுபண்ணி
ஐவரையுங்கொல்லுமென்று அனுப்பவனந்தனிலே
கொல்லுகிறேனென்றுசொல்லி கொப்பெனவேபோனாரே

ஐவர்-செத்ததுவும்பிழைத்ததுவுஞ் சேதிதெரியவில்லை
ஆரடா தூதுவரே ஆய்ந்துப்பாருமென்றான்
அப்படியேதூதுவர்கள் அனைவோரும்வந்தார்கள்
திரியோதிரனைவந்து தெண்டனிட்டுவதுசொல்வார்
எங்களையழைத்தபணி எதுபணிசொல்லுமென்றார்
அப்போதிரியோதிரன் அவர்களுக்குவதுசொல்வான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனாரே
எந்தவனத்திலே இருக்கிறாரென்றறியேன்
ஐவருலமக்காணாமல் ஆராய்ந்துபார்த்துவாங்கள்
என்றுமேசொன்னானே எரிநாகங்கொண்டவனும்

துரியோதிரன் தூதர்கள் பஞ்சவரைக்காண வருகிறது.

---

மாநாகன்சொன்னதெல்லாம மல்லர்கள்தான்கேட்டு
வாறார்கள்தூதுவர்கள் மகாராசனசொற்படிக்கு
அத்திபுரந்தாண்டி அவசரமாய்வாறார்கள்
குருக்ஷேத்திரபூமி குருபூமிதேசமவிட்டு
காடுஞ்செடிகடந்து கடுகவேவாறார்கள்
தில்லைவனம்பூத்ததரு செடியும்வனந்தாண்டி
சூரியன்வனந்தனிலே தூதர்தேடிப்பார்த்தார்கள்
அங்கேயுங்காணாமல் அப்பாலேதேடிவாறார்
ராயரிஷிவனத்தில் நடந்தெங்குந்தேடிவாறார்
அங்கேயுங்காணாதே அபபுறந்தேடிவாறார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடுகியேதேடினார்கள்
அங்கேயுந்தேடியே அப்பாலேபோகலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகியேதேடிவந்தார்
அங்கேயுங்காணாமல் அப்பாலேபோகலுற்றார்
சயிந்தவரிஷிவனத்தில் தாமெங்குந்தேடினார்கள்
அங்கேயுங்காணாமல் அப்புறந்தேடிவாறார்
காமத்தேனுராயத்தில் கண்டார்கள்பஞ்சவரை
ஐவரையுங்கண்டவுடன் அங்கேபயந்தெளிந்தார்
பஞ்சவர்களையவரையும் பார்த்துத்திரும்பினார்கள்
காவலர்களையவரையுங் கண்டுதிரும்பினார்கள்

துரியோதிரனனுப்பிய தூதவர்கள் காமதேனு
வனத்தில் பஞ்சவரைக்கண்டு துரியோ
தனனுக்குச் சொல்லல்.

---

கண்டலைந்த தூதுவர்கள் கடிதிவழிநடந்தார்
ஆறுகுளந்தாண்டி அதிகவனந்தானுந்தாண்டி
காடுவனங்களூடே கரியமலைதான்தாண்டி
ஆனந்தமாகவே அத்திபுரத்தில்வந்தார்
துரியோதிரனிருக்கும் சிங்காதனந்தருகே
மகாராசன்முன்னாக வந்துபணிந்தார்கள்
வந்துபணிந்துமல்லோ மன்னனுக்கேதுரைப்பார்
துரியோதிராஜனுக்கு சேதிகளைச்சொல்லலுற்றார்
ஐவரைத்தேடியே ஆரணியம்போனோமே
மாண்டார்களென்றீரே வனத்திலேகண்டோமே
காமதேனுபர்வதத்திற் கண்டுவந்தோம்பஞ்சவரை
அந்தவனத்திலே ஐவரிருக்கின்றார்கள்
பார்த்துபயந்துவந்தோம் பஞ்சவர்களைவரையும்
கண்டுபயந்துவந்தோம் காவலர்களைவரையும்
என்றுமொழிந்தார்கள் ஏகிவந்ததூதுவர்கள்
தூதுவர்கள்சொன்னதெல்லாம் துரியோதிரன்கேட்டு
துன்னிமனங்கொதித்து சொல்வானொருவார்த்தை

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குப்போகச்
சகுனியுடன் ஆலோசனை பண்ணுகிறது.

---

என்றவுரைகேட்டு எரிதாகங்கொண்டவனும்
சபைதன்னிறைந்திருக்கச் சர்ப்பக்கொடியோனுரைப்பா
ன், ஐவர்வனவாசம்போய் ஐந்தாறுவருஷமுண்டு
வில்வித்தை ஆண்மைகளை மெத்தமறந்திருப்பார் [லை
ஆனைகளுஞ்சேனையும் ஆண்டவொண்ணாப்படையுமில்
அக்ரோணிசேனைகூட்டி ஐவர்மேல்படையெடுத்தால்
ஐவரைக்கொன்றிடலாம் அதம்பண்ணிப்போடலாம்

இதுவோமயங்காண் இராசரைக்கொல்லுவதற்கு
அம்மான்சகுனியே நீ ஆலோசனைசொல்லுமென்றான்

சகுனி துரியோதிரனைப் பஞ்சவர்களுடன் சண்டைக்குப்
போகச் சொல்லுகிறது.

---

அப்போசகுனியும் அங்கேயெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லியவன் குடிக்குச்சகுனியம்மான்
இதுசமயமிதுசமயம் இவன்குடியைகெடுக்கவென்று
மருமகனுக்காக வார்த்தைகளேதுசொல்வார்
மெய்வார்த்தைசொன்னீர்காண்விஷநாகங்கொண்டவரே
ஐவர்பிழைத்துஇனி ஆரணியம்விட்டுவந்தால்
தப்பிப்பிழைத்துவந்தால் தர்மர்பஞ்சபாண்டவர்கள்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுகேட்பாரே
இப்போபடையெடுத்து இராசரைக்கொன்றிடலாம்
நல்லசமயங்காண் நமக்குக்கிடைத்ததென்ன
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்
மாமனுரைகேட்டு மகாராசரேதுரைப்பார்

திரியோதிரன் சண்டைக்குப்போகச் சேனைகளைத்
திட்டப்படுத்துகிறது.

---

ஆர்காணும்ராசர்களே அங்கிருக்கும்மந்திரிகளே
ஐந்துகுருக்களுடன் ஆயிரஞ்சேவகரும்
பலபலராணுவமும் பத்துலட்சம்சேவகரும்
நாலானசேனைகளும நடப்பார்கள்தாதியரும்
அத்தண்டசேனைகளும் அடங்கலும்பயணமென்றார்

திரியோதிரன் பஞ்சவர்களுடன் சண்டை
பண்ணவருகிறது.

---

அப்போதிரியோதிரன் அவனுடையசேனைகளும்
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றான்

இன்றுவெளிக்கூடாரம் இராவுடனேபோடுமென்றார்
நாட்டுமென்றார்சண்டாவை நகாரையடியுமென்றார்
அங்கேநட்டான் சண்டாவை அடியுமென்றார் பேரிகை
அடிபடுதாயபேரி அண்டங்கிடுகிடென்ன [யை
சண்ணை சண்டையென்றுசொல்லி சண்டை நகாரடிபடுது
ரெணங்கன்ரெணங்கென்று ரெணபேரியடிபடுது
ஆனையின்மேல்பேரிகையும் அசுவத்தின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஒருகோடி முரசுகளும்
தாளமொடுமத்தளமும் தவில்முரசுவீராணம்
பதினெட்டுவாத்தியமும் பலதிசையுந்தானமுழங்க
அண்டபிண்டந்தானதிர அடிபடுதுமேளவகை
முக்காதமட்டும் முரசுமுழங்கிவர
நாற்காதமட்டும் நாகசின்னமூதிவர
ஐங்காதமட்டும் அடிபடுதுபேரிகையும்
ஆனையின்மேல்நகபத்து குதிரையின்மேல்டங்காவும்
கானலுக்கெடுத்தார்கள் கரும்பு நல்லகூடாரம்
வெய்யலுக்கெடுத்தார்கள் வெள்ளை நல்லகூடாரம்
மழைக்குமெடுத்தார்கள் வர்ணவெள்ளைக்கூடாரம
பனிக்குமெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
காற்றுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம
குதிரையொருகோடி சொக்கரித்துவருதங்கே
யானை அநேகங்களும் அண்டவெல்லாணுவமும்
அமரருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும கன்னடியரானவரும்
ஈழத்து[illegible]ரும் இளநாட்டுச்சோனகரும்
வேதியரும தியரும விலவேசகராசர்களும்
தொழுமுன்மலையாளர் சோனகரும் வொட்டியரும்
பட்டாவுத்தரியும் பாரிபவிலசமுதாடு
நேரிமுமைப்பெரியகத்தி திகரானபாக்குகளும்
அதிரும்இருப்புலக்கை ஆயுதவரிசையுடன்
ஈட்டிசத்திவேலாயுதம் எடுத்தார்கள் சூலாயுதம்
அத்தண்டாணுவமும அல்லவரும்பயணமென்றார்

துரோணரும் அசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகன்னனுமே
சாமத்துரோகி சகுனியவன்கூட
மாமாசகுனியும் மைத்துனன்தேத்தரசன்
தங்கைமணவாளன் தருசகேப்பொட்டிமகன்
அக்காள்மணவாளன் அறுதலியாள்பெற்றபிள்ளை
காந்தாரிபிள்ளைகளும் சவுராசேனைகளும்
குருடன்பெற்றபிள்ளைகளும் கோடிராசர்களும்
ஐவரைக்கொல்லவென்று அனேகம்பேர்பயணமானார்
செந்துளெழும்புது தெய்வலோகங்கப்புது
கருந்துளெழும்புது கதிரோனைக்கப்புது
கொடிகள்பறக்குது குவலயமெட்டிருது
முடிகள்திருகுது மூன்றுலோகந்தத்தளிக்க
அச்சகிறுகிறென்ன ஆனைநெரிந்தோலசய
வண்டிக்கிரிச்சுகளும் மகாரதங்கோவித்தமிட
குதிரைகளைத்துவிழக் கோடிமன்னர்சத்தமிட
சங்கைபிரச்சலது சமுத்திரக்கோஷ்டமுடன்
செல்லும்ஜனங்கள்தொகை சொல்லிமுடியாது
வாரஜனங்களென்றால் பட்டுமிதக்களிலே
பஞ்சவரைக்கொல்லவென்று பாதகனும்வாரானே
ஐவரைக்கொல்லவென்று அரும்பாவிவாரானே
அஸ்தினபுரத்தாண்டி அப்புறம்வருகையிலே

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்கு வருகிற
போது துரோணரைச் சண்டிரப்பார்க்கச்
சொன்னது.

---

தென்னமுடிவேந்தன் துரியோதிப்பாவி
துரோணரைத்தானழைத்துச் சொல்வான் துரியோதிரன்
பஞ்சவரைக்கொல்லவென்று பாரவணமபோறோமே
வாருந்துரோணரே வழிநிமித்தம்பாருமென்றான்
ஐவரைக்கொல்லவென்று ஆரணியமபோறோமே

என்னசகுனங்கள் இனிநிமித்தங்காணுது
சகுனத்தைப்பாருமென்றான் தர்மமுடியானும்

துரியன்சொற்படி துரோணர் சகுனம்பார்க்கிறது.

---

தென்னமுடிவேந்தன் துரியோதிரன்சொற்படியே
அரசனுரைப்படிக்கு ஆசாரியானவரும்
தர்மமுடியானுக்குச் சகுனங்கள்பார்க்கையிலே
ஏனைசகுனங்கள் எதிராகக்காணுது
பொல்லாச்சகுனங்கள் பொருந்துது மன்னனுக்கு
வாயசமிடமாச்சு வலியன் வலமாச்சு
நரையானிடமாச்சு நரிகள்குறுக்காச்சு
பாம்புகுறுக்காச்சு பார்ப்பானெதிரானான்
சாரைகுறுக்காச்சு சந்திரர்மேல்பல்லி சொல்லும்
வேடனெதிரேவருவா விலவியனெதிரானார்
வெட்டிப்பிடியுமென்று வேடனெதிர்வாரார்கள்
குத்திப்பிடியுமென்று கோட்டானுமோலமிடும்
பட்டப்பகலிலே பகலாந்தைசீறுகுது
நெருப்பெடுத்துக்கைகிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்

துரோணாசாரியர் துரியோதிரனுக்குச் சகுனங்கள்
நல்லதல்லவென்றுசொல்ல துரியன் அவர்
சொல்லை தடுத்துவருகிறது.

---

துரியோதிரனுக்குத் துரோணாவருரைப்பார்
அப்பாதுரியோதிரா அரசர்சிகாமணியே
எந்தனுடவார்த்தைதனை யிராஜாவே நீர்கேளும்
ஆகாதசகுனங்கள் ஆகுதேயிப்பொழுது
பொல்லாச்சகுனங்கள் பொருந்துதேயென்னசெய்வோம்
இன்றைக்குநாள்போக்கி இனியொருநாள் நாம்வரலாம்
சண்டைக்குப்போகவேண்டாம்வாருமென்றழைக்கையிலே
தென்னமுடிவேந்தன் துரியோதிராஜன்

அவ்வார்த்தைதான்கேட்டு ஆகாமல்லவேதுசொல்வா
ன், சகுனத்தால்பழுதுமுண்டோ சந்திர வாசர்களே
போலவாச்சகுனமென்று போகாமல் நிற்பார்களோ
ஐவருமல்லாமல் அடப்பக்காரப்பையனில்லை
பஞ்சவருமல்லாமல் பலவகையோரொருவரில்லை
இந்தச்சகுனத்தில் ஏதொருகுற்றமில்லை
நடவும்நடவுமென்று நடைபேரியடியுமென்றான்
வருகுதுபாளயங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புது சூரியனைக்கப்புது
கருந்தூளெழும்புது சந்திரனைக்கப்புது
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகளைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைககிரைதேடும் கதலிவனந்தான்தாண்டி
செந்நாய்புலிகாடி சிறுவனந்தான்தாண்டி
எல்லையதுதாண்டி முல்லைவனந்தான்தாண்டி
சூரியவனந்தனிலே துரைகளெல்லாஞ்சேர்ந்தார்கள்
அங்கேநடடானைசண்டாளை அடியுமென்றான்பேரிகை
யை, அன்றுபகாமங்கிருந்து அடுத்தவொருமற்றநாள்
மற்றநாட்காலையிலே வாரார்கள் துரைகளெல்லாம்
ராடரிஷ்வனத்தில நடந்தார்கள் துரைகளெல்லாம்
சண்டாளைநாட்டுமென்றான் சல்லரியடியுமென்றான்
அடித்தார்கள்பேரிகையை அடிவானத்திடிபோல
அன்றுமுகாமங்கிருந்து அடுத்தவொருமற்றநாள்
மற்றநாட்காலையிலே வருகுதுபாளையங்கள்
காளயகாரிஷ்வனத்தில் கடுகவந்துசேர்ந்தார்கள்
ரணபேரி அறையுமென்றான் தலைகிலையபலனதுமென்று
ன, அரசன தன்சொற்படியே அறைந்தார்கள்பேரிகையை
ஊதுனார்சின்னந்தொனி உலகமேழுந்தானதிர
ஆனாறுபகாமங்கிருந்து அடுத்தவொருமற்றனாள்
மற்றநாட்காலையிலே மன்னர்பயணமிட்டார்
காமகிந்துபர்வதத்திற் கடுகிவருகையிலே

ஐவரைக்கொல்லவென்று அருட்பாவி வருகையிலே
பஞ்சவரைக்கொல்லவென்று படுபாவி வருகையிலே

துரியோதிரன் ஐவரையுங் கொல்லவருகிறதை
யெம்பெருமாளறிந்து வந்தவர்க்கெல்லாந்
தாகமுண்டாக்கினது.

---

ஐவருக்கும் வந்தவிதி ஆயருந்தானறிந்து
கையோசர் வருகுதே காவலர்கள் பஞ்சவர்க்கு
மோசகாலன் வந்து மூடிக்குது மன்னவர்க்கு
பாவிபெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
தோஷியெடுத்தானே தொண்டர்களைக்கொல்லவென்று
சந்தானுப பகையாளி ஏற்பட்டான் பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலுமே இறக்கவகைபண்ணுகிறான்
அசதியாய்நாமிருந்தால் ஐவரிறந்திடுவார்
மறதியுடனிருந்தால் மாண்டிடுவார் பஞ்சவர்கள்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
உன்னைக்கெஞ்சிப்பழும உருக்குலைந்துபோகுதே
தேகமில்செபமாலை தொண்டழிந்துபோகுதே
கையில்செபமாலை கனங்குலைந்துபோகுதே
என்னவுபாயமது செய்கிறாரெம்பெருமாள்
வருகிறராசருக்கும் மாதாகங்கொண்டார்க்கும்
தண்ணீர்க்குவனங்கள் தாகவிடாயுண்டுபண்ணார்
தண்ணீர்க்குவனங்கள் தாகவிடாயானார்கள்
அத்தனைராசருக்கும் அடிநாக்குலருகுது
தாவுவறட்டுதது நடுநாக்குலருகுது
அவ்வனத்துள்தீர்த்தங்கள் அள்ளியுண்ணக்கிடையாது
மாயர்பெருமானும் மலைமாமரேது செய்தார்
தேவேந்திரனுடைய சுரபியெனுங்காமதேனு
அப்பசுக்களதீர்த்தமுண்ணும் அக்குளமொன்றொழிய
தீர்த்தங்களில்லாமற் செய்துவிட்டாரப்போது
அத்தனைஜெனங்களுக்கும் அனேகவிடாயாச்சுது

தண்ணீர்களையாகி தவிக்கு துபாளையங்கள்
காதையடைத்துக் களைத்தார் துரைகளெல்லாம்
தூதுவரைத்தானழைத்து துரியோதிரனுரைப்பான்
இந்தவனத்திலே எங்கும் நதியிலையோ
எங்குங்குளமிலேயோ யிறங்கியேதீர்த்தமுண்ண
தேடியேபாருமென்று செப்பியனுப்பினன்
அப்படியே நல்லதென்று அந்தவனங்களெல்லாம்
தேடிப்புறப்பட்டார்கள் திரியோதிரன்தூதுவர்கள்
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துபார்த்தார்கள்
காமதேனுதன் ளத்தைக் கண்டார்கள்தீர்த்தமுண்ண
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார் தூதுவர்கள்
திரியோதிரனுக்குச் சேதியுரைத்தாகள் [ம்
அகலமுள்ளதாயிருக்கும் அலங்காரப்பொய்கைகண்டோ
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டார்

திரியோதிரன் காமதேனுகுளத்தில் தண்ணீர்
குடிக்க சேனையுந்தானும் வருகிறது.

---

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்கேட்டு
நல்லதுவாமேருமென்று நடந்தார்கள்சேனையெல்லாம்
வருகிறவேளையிலே வானுலகயிடையரெல்லாம்

தெய்வலோகத்து இடையர் காமதேனுபசுக்களுக்கு
அந்தக்குளத்தில் தண்ணீர்காட்ட வருகிறது.

---

அந்தச்சமயத்திலே அந்தராத்துமிடையரெல்லாம்
வானுலகயிடையபெல்லாம மாடுகளைத்தான் திருப்பி
காட்டிலேமேய்க்கின்ற காமதேனு அத்தனையும
மேய்த்துத்துரத்தியே மிரட்டிக்குளத்தில்விட்டார்
குளத்திலேநீர்குடித்துக் குளமெல்லாஞ்சேராக்கி
தண்ணீர்கலங்கியே தரையிலமண்மேல்கிளம்பும்
குளங்கள்கலங்கியல்லோ குளத்தின்மேல்மண்கிளம்பும்

பசுக்கள் குளங்கலக்கினதை தூதர்சொல்லத் திரி
யோதிரன்கேட்டுக் கோபித்து இடையர்
களைக்கொன்று பசுக்களை மடக்கச்
சொல்லுகிறது.

---

அந்தச்சமயத்திலே அரவக்கொடியோன் தூதர்
தூதர்கள்தான்பார்த்துச் சொல்லுவாரரசருக்கு
ஐயையோராஜாவே ஆரோதெரியாது
ஆயிரம்யிடையர்கள் ஆவுகளைக்கொணடுவந்து
விட்டுமே அக்குளத்தை மிகக்கச்சேறுக்கிவிட்டார்
தண்ணீர்குடிக்கவேதான் உதவாதுயென்றார்கள்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வானரசனுமே
ஆயிரம்யிடையரையும் அங்கேபலிவெட்டிவிட்டு
அந்தண்ட பசுவையெல்லாம் அத்திபுரமோட்டுமென்றார்
இராஜனுரைகேட்டு நடந்தாரேதூதுவர்கள்
மாடுகளைத்தானையும் மடக்கித்திருப்பினார்கள்
எதிர்த்தயிடையர்களை யாவரையுங்கொன்றுவிட்டார்
சண்டைபண்ணவந்தவரைச்சதைத்தங்கேபோட்டார்கள்

காமதேனு பசுக்களைமேய்க்கவந்த இடையர்களைத்
திரியோதிரன் தூதர்கள் கொன்றவர்கள்
போக மற்ற இடையர்கள்போய்த்தே
வேந்திரனுடன் சொல்லுகிறது.

---

தப்பிப்பிழைத்தவர்கள் தான்விழுந்தோடலுற்றார்
அமராபதிதேடி அவ்விடையர்ஓடலுற்றார்
தேவேந்திரன்முன்னே தெண்டனிட்டார்யிடையரவர்
வந்துபணிந்தவர்கள் வார்த்தைகளேதுசொல்வார்
காமதேனுபசுக்களைத்திற்றுக்களைமேய்த்திருந்தோம்
காட்டிலேமேய்த்தோடிக் கடுகிக்குளத்தில்விட்டோம
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளமன்னன்
சேனைபரிவாரத் திரளுடன்கூடிவந்தான

மாடுகளைமடக்கிக்கொண்டான்வல்லுயிரைவாங்கிவிட்டா
அல்லவரைக்கொன்று னடியார்கள்தப்பிவந்தோம் [ன்
என றவுரைகேட்டு எதுசொல்வாரிந்திரும்
உருட்டினன் கண்ணை உருபினன்பெரும்புலிபோல்
கண்கள்சிவக்குதே காந்தாளமாகுதே
மீசை துடிக்குதே மின்கோபமாகுதே
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுதே
நீலவிழிகண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாய்விடுது
என்றுமில்லாக்கோபம் பிறந்ததுயிந்திரற்கு

தேவேந்திரன் தன்மகனைச் சண்டைக்குப்போகச்
சொல்ல சித்திராங்கதன் மாதலியைத் தேர்
கொண்டு வரச்சொன்னது.

---

என்மகனேசித்ராங்கா இயலாணரத்தினமே
மாட்டைமடக்கின பன்னவராஜாவை
பிடித்தபிடியோடே பின்கட்டாய்கட்டிவாராய்
ஆனைசேனைபரிவாரம அடங்கலுங்கொணறழித்து
பிடித்தபிடியோடே கொண்டுவாராய்பொட்டெனவே
கைப்பிடியாய்க்கொண்டு கண்ணெதிரேவந்துநில்லு
இல்லாதேயாமானல் எதிர்வந்துநில்லாதே
உத்தாரமபண்ணரே உம்பாபிரானிந்திரும்
தேவேந்திரன் மகனர் சித்திராங்கதராஜன்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிகமாய்ச்சிந்தித்து
மாதலியைத்தானழைத்து மச்சுரதமெங்கேயென்றன்
தேரையலங்கரித்துச் சீக்கிரம் நீகொண்டுவா
என்றவுரைகேட்டு எழுந்தானேமாதலியும்
ஆறுவண்டி நூறுசட்டம் அதுக்கேற்றநூத்துக்காலும்
நூத்துக்கால்சொப்பனிடுக் கொடுங்கைத்திரைவளைத்து
கொடுங்கைதிரைவளைத்துக் கும்பகலசம்வைத்து
கும்பகலசத்தின்மேற் குடைகளைகட்டினன்
அங்கெனவேதேர்ச்சீலை அலங்காரமபண்ணினனே

தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்சொப்பனிட்டான்
வாசிலைக்குளிப்பாட்டி வாயிற்கடிவாளமிட்டான்
நாலுகால்வண்டையமும் நடுக்கழுத்திற்கொலுசுகளும்
முன்னாலேகுட்டிகளும் பின்னாலேகுச்சுகளும
பக்கத்தில் அல்நாவடி பதியவைத்தானசெலங்களை
மூக்கிலேசினிகளும் மூனைனேசடிவாளம்
சந்ரப்பிறைசூடப்பிறை தரித்தான்குதிரைக்கு
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்தெண்டனிட்டான்

திரியன்மேல் சித்திரசேனன் சண்டைக்குப்போகிறது.

---

கடுகியெழுந்தானே கட்டழகன்சித்ரசேனன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
ஆக்கினைகருங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
பில்லைசமுக டுபிருவெடுக்கலொட்டியாணம்
கட்டியரைதனிலே காங்குகச்சைசுங்குவிட்டு
சந்திரகாந்திகுட்டிகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
முத்தினுநுமாலை முகத்தழகாய்கட்டினான்
சிங்காணிவில்லெடுத்து சிறுநாரிபூட்டினான் [ல்
அப்பருத்தோணியை அணிந்துகொண்டான்தன்முதுகி
தேரைச்சுத்தித்தெண்டனிட்டு சிவ்வெனவேஏறினான்
ஏறினபோதே பியலானசாரதிதான்
ஆகதப்வார்கைப்பிடித்துத் துரிதமுடன்சாரிசெய்ய
வருகுதுமச்சுரதம் வானுலகந்தானதிர
தேர்தனிலேசங்குநாதம் சித்ரசேனன்பண்ணினானே

திரியோதிரன் சேனைகளைக் காமதேனு அதம்பண்ணினது.

---

அந்தச்சமயத்தில் அறிந்ததுகாமதேனு
சங்குத்தொனிகேட்டுத் தானவருதுகாமதேனு

குதித்துக்குமாளமிட்டு வருகுதுகாமதேனு
வந்துவிழுந்தது வளம்பெரியபாளையத்தில்
குத்துதுகொம்பாலே சூளர்பால்மிதிக்கிறது

திரியோதிரனும் அவனுடையசேனைகளும் சித்திர
சேனனும் சண்டைபண்ணுகிறது.

---

அத்தண்டசேனைகளை அதம்பண்ணுங்காமதேனு
மாண்டஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தஜெனங்களென்றால் செப்பமுடியாகாது
அந்தச்சமயத்தில் வந்துவிட்டான்சித்ரசேனன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்சரபாணம்
கைகண்டபாணமெல்லாங் கடுகெனவேவிட்டுவிட்டான்
கூச்சலெழும்புகுது கொப்பெனவேபாளையத்தில்
கண்டான்திரியோதிரன் கட்டழகனேதுசொல்வான்
எவனோதெரியாது இங்குவந்தான்சண்டைபண்ண
இத்தண்டதுரைகளெல்லாம் எல்லாருமுவந்திப்பாய்
ஆயுதங்கள்தானெடுத்து அமராடுசெய்யுமென்றான்
எண்ணான்கு ஆயுதத்தை எடுத்து அரையிற்கட்டி
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகாரடித்தார்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிதானடித்தார்
எட்டினார்சண்டை எழும்புதுசமரப்போ
வில்வளைத்துநாரிபூட்டி விட்டாரிவர்கணையை
ஒருவர்க்கொருவர் ஒழிவில்லாப்பாணம்விட்டார்
அம்புவரும்வேகமதை ஆர்க்குமுடியாது
பாணம்வரும்விதங்கள் பார்த்துமுடியாது
ஒருகோடிபாணங்கள் ஒருமிக்கவிட்டுவிட்டார்
துரியன்விடும்பாணம் சொல்லமுடியாது
கர்னன்விடும்பாணம் கணக்குமிதங்களில்லை
துரோணர்விடும்பாணம் சொல்லமுடியாது
கோபமாய்க்கிருபாச்சாரி கோடானபாணம்விட்டார்
வீஷ்டுமாசாரியரும் வேணபாணங்கள்விட்டார்

அசுவத்தாமாவும் அநேகநெடும்பாணம்விட்டார்
சகுனிசயிந்தவனும் சரமேறசரம்பொழிந்தார்
அவரவர்கள்விடும்பாணம் அபரிமிதமில்லை
ஒருவருக்கொருவர் ஒருகோடிபாணம்விட்டார்
வாயுவஸ்திரங்களும் வருணாஸ்திரங்களும்
சந்திர அஸ்திரமும் இந்திர அஸ்திரமும்
சங்குஞ்சங்கம்போலே சரங்கள்பொழிந்தார்கள்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டானநெடும்பாணம
தன்மேல்விடும்பாணமெல்லாம் தாக்காமலேவிலக்கி
பின்னையுங்கோடிசரம் பிரளயமாய்விட்டுவிட்டான
அத்தனைபேர்விட்டசரம் அத்தனையுங்கொள்ளைகொண்டா
அங்கசர்தேருடைத்து அவரவர்கள்வில்பறித்து [ன்
ஆனையின்மேலிருந்ததுரை அலறியேமண்ணைக்கவ்வ
குதிரையின்மேலிருந்ததுரை கொக்கரித்துமண்ணைகவ்வ
ஒட்டையின்மேலிருந்ததுரை ஓலமிட்டுக்கீழ்விழ
தென்னங்குலைபோலே திருகினான்வேணதலை
கருப்பங்குலையைப்போல கண்டித்தானவேணதலை
ஆலைக்கரும்புபோலே அறுத்திட்டானவேணதலை
பேய்க்காலஅப்புபோல்பசைந்தெடுத்தான்பாளயத்தை
பனைதொங்குபோலாகப் பழித்தவிழிபிதுங்க
கண்டச்சதையரிந்து கழுகுக்கிரைபோட்டான்
ஈரல்சரியுது இரைச்சிவெளியாகுது
குடல்கள்சரியுது குறிப்பாக அப்பொழுது
செப்பைவிலாஎலும்பு நெறநெறென்றுகால்முறியும்
பட்டஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தசனங்களென்றால் செப்பமுடியாது
சித்ரசேனன்சண்டையிலே சேனைகளுமாளுகுது
அபயமபயமென்று அலையுதுபாளையங்கள்
தண்ணீர்தண்ணீரென்றுசொல்லித்தவிக்குதுபாளையங்கள்

ரத்த முழுகுது ரணமூண்டங்கொக்கரிக்க
இந்தவிதயயானையங்க ளேடாகூடமாச்சுது
திரியோதிராசன் தேரிழந்து நின்றுவிட்டான்

சித்திரசேனன் திரியோதிரனைக்கூட்டி இழுத்துக்
கொண்டு போகிறபோது திரியோதிரன்
முறையிடுவது.

---

அங்கந் துளையாக்கி அதிரடித்தான்சித்ரசேனன்
அந்தரவீதியிலே அவனைபிடித்துக்கட்டி
பிடித்த பிடியோடே பின்கட்டாய்க்கட்டினான்
தேர்குத்துக்காலோடே திரியனைப்பிடித்துக்கட்டி
ஊதினானைசங்குநாதம் உம்பாபிரான்றன்மகனும்
திரியன்பிடிபடவே திகிலெடுத்துராசரெல்லாம்
ஒருவருடனொருவர் சொல்லாமலோடலுற்றார்
திரியனைக்கட்டிக்கொண்டு தெய்வலோகம் போறாராம்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
எண்ணாதுமெண்ணுகிறான் எண்ணிப்புலம்புகிறான்
ஆறுந்தெரியாது ஆகாசம்கொண்டுபோறான்
எவனுந்தெரியாது எமலோகங்கொண்டுபோறான்
ஐவரபஞ்சபாண்டவரை அனர்த்தமபண்ணவந்தேனே
எண்ணையொருவன் இழுத்துபோறானே செய்வென்
கூடவந்தராசாக்கள் கோடானகோடியுண்டு
மட்டில்லாராசாக்கள் வந்தார்கள்வீரியர்கள்
அத்தண்டராசாக்கள் அல்லவருங்கையைவிட்டார்
கட்டியிழுத்துக் கைலாசம்கொண்டுபோறார்
ஆரவந்துகாப்பார்கள் ஆபத்துவேளையிலே
எவர்வந்துகாப்பார்கள் என்சீவன்பிழைக்கஇப்போ
தர்மரைத்தானினைத்தால் தயவுவைத்துக்காத்திடுவார்
இந்தவனத்திலே யிருக்கிறாரென்றூர்கள்
கூவிப்புலம்பினால் குரல்கேட்குந்தருமருக்கு
தம்பியரைத்தானனுப்பி தயவுவைத்துக்காத்திடுவார்

ஐவருமிப்போது அன்புள்ளவத்தாக்காத்தாலே
ஐவரைக்கொல்லுகைக்கு ஆலே சனைத்தேடிடுவோம்
தப்பிப்பிழைத்தோமானால் தருமனைக்கொன்றிடுவோம்
என்றவனையோசனையாய் எனனசொல்லிப்புலம்புகிறான்
கூவிப்புலம்புகிறான் கொற்றவன்திரியோதிரன
அண்ணாவேயண்ணாவே அழகான தர்மலிங்கம்
ஐவர்பஞ்சபாண்டவரே அண்ணாவே நீர்கேளும்
ஐவரைப்பார்க்கவே அதிகப்பிரியமுமாய்
பார்க்கும்படியாக வந்தேன்காண்பஞ்சவரே
காணும்படியாக வந்தேன்காண்காவலரே
எவரோதெரியாது இழுத்துப்போறான் அந்தரமாய்
ஆரோதெரியாது அழைத்துப்போறான் அந்தரமாய்
கூடப்பிறக்கிலையோ கூட்டுப்பாலுணகிலையோ
தாயாருமவேறானால் தகப்பனொன்றலவோ
மனதுமிரங்கலையோ மகாராஜர் தர்மலிங்கம்
தப்ட கப யனமேல் தயவிலையோவுங்களுக்கு
அந்தரமாய்க்கொண்டுபோறான் ஆரோதெரியாது
என்-அவிவைபககாத்தாலே அனேககோடிபுண்ணியங்கா
ண், சாபாபபுமேனியனே தயவிலையோயெனமேலே
என்றுபுலம்பியே இடிபோலேகூச்சலிட்டான்
கூவுந்தாலகோட்டு கொடுபெணவே தருமருக்கு
உற்றுற்றுக்கேட்டாராம் உரகதன்வார்த்தையெல்லாம்

திரியோதிரன் முறையிடுவதை தருமர்கேட்டு
அருச்சுனனைப்போய் திரியோதிரனை
அழைத்துவரச்சொன்னது.

---

தருமர்மனங்கொள்ளாமல் தம்பியரைத்தானழைத்து
ஆனலழதுமன்று அருச்சுனரே நீர்கேளும்
பெரியதகப்பனபெற்ற பேரானஅண்ணன் தம்பி
திரியோதிரனம்மைத் தேடியேபார்க்கவந்தான்
ஆரோஒருவன் ஆகாசங்கொண்டுபோறான்

எவனோதெரியாது இழத்துப்போரன் அந்தரமாய்
பார்த்துமிருந்தோமானால் பாதகமெத்தவரும்
மெத்தவருந்துகிறான் வில்வேந்தனிப்போது
நம்மைவருந்துகிறான் ரக்ஷிப்பாயென்றுசொல்லி
ஆபத்துவேளையிலே ஆதாரத்தால்புண்ணியங்காண்
கடுகவிடுவிடுத்துக் கையோடேகூட்டிவாராய்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஊரோடிருந்தநம்மை உரகதன்தானழைத்து
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
எத்தனைவஞ்சனைகள் இடறுகள்செய்தான்காண்
நாடுபறித்தானே ராச்சியத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையும்விலங்கிலிட்டு அறையிலடைத்தானே
அரமனைப்பெண்களையும் அம்பலமேற்றிவைத்தான்
அண்ணன்பெருந்தேவி யாடையுரியவைத்தான்
பாரவனவாசம் பரதேசமோட்டினான்
இந்தப்பரதேசம் இனிதநிரியுமென்றானே
சமத்துரோகனுக்கு தயவுநினைப்பாரோ
பொல்லாதபாவிக்குப் புண்ணியந்தேடுவாரோ
தென்னமுடிவேந்தனை திரியோதிரராஜன்
எத்தனை நாளிருந்தாலும் இடரல்லோதேடுகிறான்
கொல்லநினைக்கிறான் கொடும்பாவிதிரியோதிரன்
இன்றோடொழிந்து எமலோகஞ்சேருமட்டும்
செத்தாற்பழுதில்லை சீராண அண்ணாவே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
அவரவர்செய்தவினை அவரேயனுபவிப்பார்
நன்மையைச்செய்தவர்கள் ராச்சியத்தையாண்டிடுவார்
பொல்லாங்குசெய்தவர்கள் போவார்பெருநரகில்
நன்மையைச்செய்தவர்க்கு நட்சத்திரங்காணும்
தீமையைச்செய்தவர்க்குத் தெரியாதிருளாகும்
வஞ்சனைகள்வேண்டாமே மாயன்துணையாவார்
இக்கணமேநீயேகி யிடுவந்துசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாதே என்னுணைதம்பியரே

அருச்சுனன் திரிப்பினை யழைக்கப்போவது.

---

என்றவுடை கேட்டு எழுந்தானருச்சுனனும்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குக் குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசொருகியல்லோ கடுகவெழுந்தானே
கிங்காணிவில்லெடுத்து தேர்விஜயன்பயணமானான்
வாரானேயர்ச்சுனனும் வழிப்பட்டான் அங்கெனவே
நடந்தானேயர்ச்சுனனும் நாழிகைக்குக்காதவழி

அருச்சுனனும் சித்ரசேனனும் சண்டை செய்தல்.

---

அப்போதருச்சுனனும் அதிவேகமாகவல்லோ
அக்கினிபாணத்தை அதிவிரைவாய்த்தானெடுத்து
வரிவில்லினைத்தொடுத்து மார்புரளவாங்கினான்
அக்கினிபாணமது அதிவேகம்போய்த்தடுக்கும்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
சீறியெழும்பியே சீக்கிரமாய்வந்தெதிர்த்தான்
சண்டை சண்டையென்று சாரப்போமுழங்குது
ஒருவற்கொருவர் உயுக்தங்களாகுது
ஒருவர்விடுக்குசாங்கள் ஒருவர்விலக்குவாரும்
இருவர்சமானமாக யினைந்துமே சண்டைபண்ணார்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டார்
சூரியனைத்தான்மறைக்கும் சூரர்விடும்பாணமெல்லாம்
நான்குநாழிகைமட்டும் நல்லசண்டைபண்ணுர்கள்
அருச்சுனன்சண்டைகளை அண்டர்பிரான்மகனறிந்து

அருச்சுனனும் சித்ரசேனனும் சமாதானமாகி
திரியோதிரனை தருமரண்டை
அழைத்துப்போகிறது.

---

என்னிலும் வல்லபிரான் என்றுமனதிலெண்ணி
இவன்-யாரோதெரியாது ஆண்மையுள்ளசேவகன்தான்
வபமிசத்தை நாமறிந்துமறுத்தல்லோசண்டைசெய்வோம், என்றல்லோசித்ரசேனன் ஏதுசொல்வானருச்சுனனை
ஆரடாதப்பி நீ ஆண்மையுள்ளசேவகனே
எவனடாதப்பி நீ எதிர்த்துசண்டைசெய்யவந்தாய்
ஊரேதுபேரேது உன் தகப்பன்வாறேது
எவருடையபுத்திரன் நீ எனக்கரியச்சொல்லுமென்றார்
இவ்வார்த்தைகேட்கவே ஏதுசொல்வான் அர்ச்சுனனும்
யுத்தகளந்தன்னிலே உறவின்முறைகேட்பாரோ
படுகளத்திலொப்பாரி கேட்பாரோபாருலகில்
(நீ) ஆண்பிள்ளையானால் அமராதுசெய்யுமென்றார்
உன் தகப்பன்றன்பெயரும் ஊர்பெயருஞ்சொன்னாலே
நானுரைப்பேன்பிற்பாடு நவிலென்றான்வாள்விஜயன்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனன்தான்கேட்டு
உத்திரவுதானகேட்டு வுச்சாகங்கொண்டவனும்
தேவர்க்கதிபதிதான் தேவேந்திரனென்தகப்பன்
எனறவுரைகேட்டு ஏதுசொல்வான அர்ச்சுனனும்
அண்ணனென்றறியாமல் அமராதுசெய்தேனே
தமையனென்றறியாமல் சண்டைகள்செய்தேனே
வில்லைத்தரையில்வைத்து விஜயனுமோடிவந்து
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுதெண்டனிட்டான்
முக்கால்வலம்வந்து மூவொருகால்தெண்டனிட்டான்
அண்ணாசரணமென்று அடிபணிந்தானருச்சுனனும்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனனேதுசொல்வான்
ஆர்வீட்டுப்பிள்ளை நீ அறியவுரையுமென்றார்
என்னையறியாயோ என்னுடைய அண்ணாவே

என்தாயார்குந்தியம்மாள் என்தகப்பன்தேவேந்திரன்
என்தகப்பன்தேவேந்திரன் என்பேரருச்சுனன்காண்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்சித்ரசேனன்
என்றநதைக்கு நீபிறநத தன்மையிலைதம்பியரே
நான்விட்டபாணத்தால் நம்பியே நீர்பிழைத்தீர்
அல்லாதேயாமானல் அமரில் மடிந்திடுவீர்
தப்பிப்பிழைத்தீரே சாமியுடபுண்ணியத்தால்
என்றிவர்களோர்மனதா யிருவருறவாடி
ஒருவற்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்
எழில்விசயனப்போது ஏதுசொல்வானண்ணனுக்கு
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன்
என்னசெய்தானென்று நீர் இட்டுப்போறீரண்ணவே
அவன்செய்தகுற்றமெல்லாம் அண்ணநீர்சொல்லுமென
இவ்வார்த்தைதானகேட்டு என்னசொல்வான்சித்ரசேன
ன், காட்டிலேமேய்ந்ததொரு காமதேனு அத்தனையும்
பார்ப்பக்கள்தன்னையிந்தப் பாவிமடக்கிக்கொண்டான்
ஆயிரமிடையரையும் அநீதமாய்க்கொன்றுவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுப்பினார்என்தகப்பன்
கைப்பிடியாய்க்கொண்டுவர கட்டளையுமிட்டார்காண்
அவர்சொன்னபடியினாலே அமரதுசெய்தேன்காண்
இவனுடையசேனைகளை எல்லாம்நான்கொன்றழித்து[ன்
விரைவாகக்கைப்பிடியாய்வின்னுலகங்கொண்டுபோறே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான் அர்ச்சுனனும்
ஆனல்கேளண்ணவே அடியேனொருவார்த்தை
சாயாம்புமேனியரும் தருமாவரெங்களண்ணர்
என்னைவிடுவித்து இட்டுவாவென்றுசொன்னர்
என்னையனுப்பினர் இயலானதர்மலிங்கம்
அழைத்துவாச்சொன்னரே அண்ணனுமிப்பொழுதே
உன்முகத்தில்நான்விழிக்கேன என்றுமேதருமலிங்கம்
கூட்டியனுப்பினர் குறிப்பாகயெந்தனையும்
என்மேல்தயவுவைத்து இவனையனுப்புமென்றுன்
தேவேந்திரன்மகனர் சித்ரசேனனேதுசொல்வான்

மாடுமடக்கியே வல்லுயிரைக்கொண்டவனை
கைப்பிடியாய்க்கொண்டுவாக் கடுகியனுப்பினர்
ஆசையாற்கொண்டுபோறே னருச்சுனனென்னசெய்வேன்
ஆனல்கேளண்ணவே அடியேனொருவார்த்தை [ம்
அருச்சுனன்வந்து அழைத்துப்போனனென்றுசொல்லு
ஐவரென்றுசொன்னலே அதிகமனமகிழ்வார்
அல்லாமலேயாமானல் அழைத்துமேபோனலே
அண்ணவே நாளைக்கு அமரர்புரம்வருவேன்
தேவேந்திரபுரத்தைச் சிதறவேகொள்ளைகொள்வேன்
ஆடுகளைமாடுகளை அழகானஊருகளை
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிகளும்
அங்காடிவீதிகளும் அரமனைத்தெருவுகளும் [வேன்
அத்தனையுங்கொள்ளையிட்டு அதபபண்ணிப் போட்டிடு
என்வார்த்தைதான்கேட்டு இவனைவிடுவிடென்றான்
சித்ரசேனன்கேட்டுச் சிந்தைமகிழ்ந்தவரும்
சந்தோஷப்பட்டவரும் சர்ப்பக்கொடியோனை
கட்டவிழ்த்துவிட்டுவிடுங் காணென்றான்சித்ரசேனன்

சித்ரசேனன் தேவேந்திரனைக் காண்கிறது.

---

போய்வாறேனென்றலவோ புறப்பட்டான்தேரேறி
அமராபதிதேடி அடைவுடனேதானடந்தான்
தேவேந்திரனுக்கு சித்ரசேனன்தெண்டனிட்டான்
அருச்சுனன் தன்னுடைய அதிசயச்சேதிகளும்
அரவக்கொடிவேந்தன் அகப்பட்டசேதிகளும்
இவ்விருவர்சேதிகளும் இயலாகத்தன்சேதி
தகப்பனுடனுரைக்கச் சந்தோஷமாகினர்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனை
திரியோதிரனுரைத் தேர்விசயன்கூட்டிவாருன்
அண்ணனருகாக அழைத்துவந்துவிட்டாரும்
அண்ணர்தருமருக்கு அடிபணிந்தான் திரியோதிரன்

சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
எமன்மகன் தருமராயன் எடுத்தணைத்தான் திரியனையும்
எங்கிருந்துவந்தீரப்பா எனக்கறியச்சொல்லுமென்றார்
அத்துவானகானகத்தில் ஆரணியம்வந்ததென்ன
அந்தரமாகவே ஆர்காணுமகொண்டுசென்றார்

திரியோதிரன் தருமருக்குத் தன்வரலாறு கூறுதல்.

---

திரியோதிராஜன் சொல்லத்தொடங்கினான்
ஆசையாம்பாசமதா லண்ணாவேபார்க்கவந்தேன்
எத்தனைநாள்காடுறைந்தீர் இட்டுப்போகவேணுமென்று
எண்ணாதுமெண்ணினேன் இக்காடுதேடிவந்தேன்
என்னை-ஆரோதெரியாது அந்தரமாய்க்கட்டிப்போனார்
ஐயமையமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்தானுமங்கே அமர்செய்துவிட்டுவந்தான்
எத்தனைநாள்காடுறைவீர் இயலானராசாவே
பாரவனவாசம் பரதேசந்திரிவானேன்
வேடரைப்போலாக வில்லியரைப்போலாக
பரதேசந்திரிவானேன் பட்டணத்தில்வாங்களென்றான்
அஸ்தினாபுரத்தை ஆண்டிடுவீர்வாங்களென்றான்
இவ்வார்த்தைதானைக்கேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
ஆறுவருஷமாச்சு ஆரணியம்வந்துநாங்கள்
இன்னஞ்சிலகாலம் இப்படியேதான்திரிந்து
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்து
வந்தபிறகாச்சு மனதுவைத்துயென்மேலே
சொன்னபடிசீமை துரைத்தனந்தாருமென்றார்

வீமன் கனிபறித்துவர திரியோதிரன் புசித்து
தருமரிடத்திற்செலவுபெற்று அஸ்தினா
புரம் செல்லுகிறது.

---

வெற்றிமதயானை வீமாமதகரியே
அண்ணர்களையாகி அதிகப்பசியானார்

காடெல்லாந்தான் திரிந்து கனிபறித்துவாருமென்றார்
வெற்றியுதயானை வீமனெழுந்திருந்து
அறுநெல்லிசிறுநெல்லி அழகான தமர்த்தையும்
காட்டுவிளாப்பழமும் கருநெல்லிப்பழங்களுடன்
வேரில்பழுத்திருக்கும் வெடித்தபலாப்பழமும்
மலைத்தேன்சுனைத்தேனும் மாங்கனியும்தேங்கனியும்
மட்டிப்பலாப்பழம்பறித்து மதவீமன்கொண்டுவந்தான்
தேக்கிலைதான்பறித்து திறல்வீமன்கொண்டுவந்தான்
பறித்தகனிகளெல்லாம் பசியாறவுண்ணுமென்று
கைக்குச்சலங்கொடுத்துக் கட்டழகருண்ணுமென்றார்
ஆசனந்தான்போட்டு அமுதுபுசியுமென்றார்
விஷநாகங்கொண்டவனும் வேந்தனுமதான்புசித்தான்
எண்ணுதுமன்னனுமிருந்த எரிநாகங்கொண்டவனும்
இப்படிக்கொத்த இயலானபஞ்சவர்கள்
எப்படிக்குச்சாவார்கள் இக்கனியைத்தின்றவர்கள்
அஸ்தினபுரத்திற்போய் ஆலோசனைபண்ணவேண்டும்
எப்படியும்பஞ்சவரை இக்காட்டிற்கொல்லவேணும்
என்றுமனதிலெண்ணி இருந்துகனியொசித்தான்
பசியாறஉண்டானே பாதகன்திரியோதிரன்
கைபூசிக்கொண்டானே காதகன்திரியோதிரன்
சாயாமபுமன்னவனார் தருமர்பெருமாளும்
பினனுஞ்சிலகனியை பெருமூட்டையாகக்கட்டி
அப்பாதிரியோதனா அழகான இக்கனியை
அரண்மனைக்குக்கொண்டுபோய் அனைவருமதான்புசிக்க
எடுத்துப்போமென்றுசொல்லி ஈந்தாரே அக்கனியை
வாங்கியே அக்கனியை மன்னவனுமதோளிலிட்டான்
ஐயாபோய்வாரேனென்ற டிபணிந்தான திரியனுமே
சாயாமபுமன்னவனார் தர்மலிங்கமேதுசொல்வார்
காண்டீபா அருச்சுனரே கடுகியெழுந்திருந்து
அண்ணன திரியன்முன் னக்கனியின்மூட்டைகொண்டு
காடுகடக்களவும கைமூட்டை நீவாங்கி
அண்ணரைவழிகூட்டி அனுப்பிவாதம்பியென்றார்

தருமருரைகேட்டு தார்விஜயன் தானெழுந்து
கனிமுட்டைதோளில்வைத்து கடுகியேபின்னடந்தான்
திரியோதிரன்பின்னே நடந்தானேதேர்விஜயன்
காடுசெடியுங் கடியவனுந்திரமும்
ஆறுஞ்சுனையும் அவ்வனமுந்தான்கடந்து
காடுகடந்தபின்பு கைமுட்டைவாங்கிக்கொண்டு
தென்னமுடிவேந்தன் திரியோதிரனேதுசொல்வான்
ஊரதில்லும் அர்ச்சுனரே தொல்லுலகில்வாராதே
கடக்கதில்லும் அர்ச்சுனரே காசினியில்வாராதே
காடுமெரிந்தகாலமால் (என்) நாடுமெரியாதே [யை
அரைக்ஷணப்போதையிலே அறுத்தெரிவே னுன்தலை
தருமாபெருமையினால் தணிதது விட் டன்கோபமதை
என்அதிரியண்சொல்லி இறைந்துவழிநடந்தான்
அண்ணாருகாக அருச்சுனன்வந்தமுதான
அப்போதிரியோதிரன அதிகவிரைவாக
காடுசெடியுங் கரியமலைகடந்து
அஸ்தினாபுரத்துக்கு ஆணழகன்போயடுத்தான்
சிங்காதனமீதிற் சென்றானே திரியோதிரன்
ஆசாரிஜவரையும் அனந்தமகாராஜாவையும்
மாமன்சகுனியையும் மைத்துனன்சயிந்தனையும்
அத்தண்டபேரையும் அழைத்தான்திரியோதிரன்
கொண்டுவந்தகாய்கனியைக்கொப்பனவேமுன்னேவை
த்தான,இக்கனியையுண் ணுமவ ரெப்படிகாணமாண்டிடு
வார், தேவேந்திரனமகனா சித்ரசேனனெனைப்பிடித்தார்
தேரிலெனைக்கட்டி தெய்வலோகங்கொண்டுசெனறார்
அபயாபயமெனறு அழுதுபுலப்புகையில்
அருச்சுனன்வந்து அமராதுசெய்தான்காண்
எனனைவிடுவித்து இட்டுவந்தானண்ணரண்டை
ஐவரையுங்கண்டேனே அனேகயானவார்த்தைகளை
உச்சிதமாகவேதான் ஒற்றுமையாய்வார்த்தை சொன்னே
இந்தககனிதான்புசிக்கும் எழிலானபஞ்சவாகள் [ன்
எப்படிக்குமாண்டிடுவார் இயலானபஞ்சவர்கள்

என்றிவர்கள்தான்பேசி யிருந்தார்சிலநாள்கள்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
ஆறும்வருஷம் முடிந்ததுஐவருக்கு

ஆறுவது காமதேனுபர்வதம்.

முற்றிற்று.

---

## ௭-வது, காமதேனுபர்வதம்.

---

ஏழாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைசாமானத்தில்
கோலிவைத்தசிமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசிமாடு வனவாசம்போனார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடந்துவழிகூடி
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
கெந்தர்வபர்வதத்தில் வந்தாரேபஞ்சவர்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குப்பர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே
அங்கேபெருமாளுடஆலயங்கைகூடதானம்பண்ணி
ஈசமூலர்த்தி இழைசேர்ந்தகட்டுநிறுத்தி
சம்பமூர்த்திபூசைகளும் சகலமுந்தான்முடித்து
ஆசனமிட்டுயல்லோ அரிராமர்பூசைபண்ணார்
அரிபூசைகுருபூசை அனைத்துங்கடன்முடித்து
கைதனிலேதீர்த்தமள்ளிக் கதிரோனைப்பூசித்து
எரிக்குங்கதிரோனை எமபெருமாள்தோத்தரித்து
கண்ணிரண்டுமூடியே கையிரண்டுமேந்திக்கொண்டு
சிவஞானமாகவே ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்



பெருமாள்சக்கரத்துக்குப் பயந்து கெந்தருவன் அர்ச்சுனனிடத்தில் அபயமடைதல், பெருமாள் நிரியோதிரனுடன் கலந்து அர்ச்சுனனிடம் போர்செய்தல்.

எம்பெருமான் ஜெபம்பண்ணும்வேளையில் கெந்தருவன்
தம்பலம்வுமிழ பெருமாள் கோபிக்கிறது.

---

ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மாயனெனும்கெந்தருவன் வாரானேதேரேறி
தேரேறிவருகையிலே தின்றுவுமிழ்ந்தானே
வாள்மினருயேலரிசி வாசமுள்ளசாதிபக்ரி
வெத்திலையும்பாக்குகளு மென றுவுமிழ்ந்தானே
மாயவனார்கைதனிலே வந்துவிழுந்தது
துப்பியதம்பலமுந் துழாய்மெனவிகையில்விழ
கண்திறந்துபார்த்தாரே கைதனிலேதம்பலத்தை
சுத்தியங்கேபார்த்தாரே தோணவில்லேவேயொருவர்
ஆகாயவீதியிலே அவனாரோதெரியாது
கைதனிலேதம்பலத்தை காரியுமிழ்ந்தானே
செபதபஞ்செய்கையிலே செய்ததிவன்செருவமென
கண்கள்சிவந்தாராம் காநதாளமானாராம்
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுமாம்
நீலவிழிக்கண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாகுது
கோவைப்பழம்போலக் கூடவிழிகண்சிவக்கும்
பாவற்பழம்போலப் பத்தினியேகண்சிவக்கும்
சக்கரத்தைத்தானெடுத்து சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலவெம்பெருமாள்
மந்திரதூபமிட்டு வலதுகையிலதானெடுத்தார்
தம்பலமவுமிழ்ந்தவன்றன் தலையை நீவாங்கிவா
அரைக்ஷணப்போதையிலே அறுத்துவா அவன்தலையை
ஆனாலுவந்தெதிர்த்தாலும் அயராவந்தெதிர்த்தாலும்
பிரமதேவன்வந்தாலும் பிரியங்கள்சொன்னாலும்
தேவபிரான்வந்தாலும் தெண்டனிட்டுக்கொண்டாலும்
சுத்தரேவந்து கையமர்த்திக்கொண்டாலும்
மூப்பத்துமுக்கோடி முனிவர்தடுத்தாலும்
ஆரார்தடுத்தாலும் ஆரவாரம்பண்ணாலும்

அரைநாழிக்குள்ளாக அறுத்துவா அவன்தலையை
இக்கணமேசென்று நீ இருதுண்டப்போட்டுவா

மாயன் கெந்தருவன்மேல்கோபித்து சக்கரத்தை
அனுப்புகிறது.

---

சக்கரத்தைத்துபமிட்டு சாமியார்விட்டுவிட்டார்
வருகுதுசக்கரந்தான் வானுலகந்தானதேடி
இயல்பாய்வழிதனிலே எதிர்ப்பட்டார்நாரதரும்
நாரதமாமுனிதான் நமஸ்கரித்தார்சக்கரத்தை
இத்தனைகோபத்துடன் எங்கேநீர்போறீர்காண்
அரிராமர்சக்கரந்தான் அம்முனிக்குரைத்துசொல்லும்

நாரதர் சக்கரத்தை நீர்போகிறகாரியம் மென்ன
வென்றுவினவ சக்கரம்சொல்லுதல்.

---

ஸ்ரீராமஜெயபெருமான் செபதபஞ்செய்கையிலே
வாசங்கள்தானின்று வலதுகையில் அப்பினன்
ஆகையால்சுவாமியவர் அப்போதுகோபமானர்
என்னையனுப்பினர் இவன்தலையறுக்கவென்று
கெந்திருவன்றன்தலையை முந்த அறுக்கவந்தேன்
அவ்வார்த்தையைக்கேட்டு அந்தமுனிபோய்நடந்தார்
கெந்தருவன்தனருகே வந்தாரே நாரதரும்
ஆரடாகெந்தருவா ஆபாவர்பேரில்
தமபலமுமிழ்ந்ததினல் சாமியார்கோபமுடன்
சக்கரமனுப்பியுந்தன தலையைத்தரிக்கவென
வருகுதுசக்கரந்தான் மாளவிதியாச்சே
ஆதிசிவனருகே அபயமிட்டுபோனக்கால்
பாயசிவன தானபாாத்துப் பட்சம்வைத்தாராமானல்
ஆதிசிவன்தன்னலே ஆருயவுனைக்காக்க
அல்லாதேயாமானல் அறுத்துவிடுவுன்தலையை
தப்பிப்பிழையுமென்று தவமுனிசொல்லுகையில்
அவ்வார்த்தைதான்கேட்டு அஞ்சிப்பயந்தவனும்

கெந்தருவன் சக்கரத்துக்கஞ்சி மும்மூர்த்திகளண்டை
போய் முறையிட்டுத் தீராமையால் அருச்சுன
னண்டை போகிறது.

---

வாய்வேகமாகவே வழிபிடித்தான் கெந்தருவன்
சக்கரம்வந்திடவே தான்புலம்பியோடுகிறான்
ஆதிசிவனருகில் அபயமிட்டுவோடுகிறான்
அரவாபரணனே ஐயாவுனக்கபயம்
சங்கரா நான்சரணம் சதாசிவாவுனக்கபயம்
சாந்தலிங்கா நான்சரணம் தாணுவேவுனக்கபயம்
வெள்ளிரிஷபமேறும் வித்தகா நான்சரணம்
மாபூஷணந்தரித்த மகாதேவாவுனக்கபயம்
முக்கண்படைத்தவரே முதல்வரேவுனக்கபயம்
திரிபுரமெரித்தசெங்கண் தேவாவுனக்கபயம்
காமனைக்கண்ணாலெரித்த கடவுளே நான்சரணம்
எமனையுதைத்தவரே ஈசாவுனக்கபயம்
கங்கையணிந்தோனே சடைதரித்தோனே
திங்களைத்தன்சிரசில் தரித்தசிவனாரே
அபயமபயமையா அந்திவண்ணாவுனக்கபயம்
அபயக்குரல்கேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
ஆரடாகெந்தருவா அபயமிட்டவாறேது
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தவயணங்கள் வார்த்தைவுரையுமென்றார்
ஆண்டவனேயென்சாமி அடியேனொருவிண்ணப்பம்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
காயசாக்காய்ந்ததொரு கமுகினதுபாக்கை
வாயாரத்தின்றுமனமேலே துப்பினேன்
தாமரைப்பொய்கையிலே சாமிபெருமாளும்
தினகரனைத்தான்பார்த்து செபதபஞ்செய்தாராம்
நானுமிழ்ந்ததம்பலம் ராமர்கையிற்றான்விழவே
கோபாலசுவாமியவர் கோபம்பெரிதாகி

சக்கரத்தையனுப்பினர் தலையைக்கரிக்கவென்று
என்னைக்கொல்லவருகுது பெலானசக்கரந்தான்
ஆகையாலாண்டவனே ஆதரிப்பீரென்றுவந்தேன்
என்னை நீகாத்தருளும் ஈசாவெனப்பணிந்தான்
காக்கக்கடனுனக்கு கார்வண்ணன்மைத்துனனே
இவ்வார்த்தைதான்கேட்டு ஈஸ்பாருமேதுசொல்வார்
நான்வேறுவிஷ்ணுவேறோ நானிலத்திற்கெந்தருவா
ஆயருக்குப்பகையாகி அருகேவாலாமோ
உன்னை நான்காத்தாக்கால் உலகளந்தாரென்னசொல்வார்
கார்வண்ணரெந்தனுக்கு கடிகிப்பகையாவார்
காக்கவேமுடியாது கடக்கவேபோய்விடுங்காண்
பிரமதேவன்தன்னருகே போனீரேயாமானல்
அவராலேயாகுங்காணுதரிக்கவல்லபிரான்
என்றுவுரைத்தாராம் எண்டோளரப்போது
அழுதுபுலம்பியே அப்புறம்போய்ப்புகுந்தான்
பிரமலோகந்தான்புகுந்து பிரமாஅருகில்வந்தான்
அபயமபயமையா யாதரிக்குங்கர்த்தாவே
என்னையேயாதரியும் என்றல்லோதெண்டனிட்டான்
ஆயுளைப்பார்த்தெழுதும் அரிபிரமேதுசொல்வார்
ஆருக்கபயமாகி அழுதுப்புலம்பிவந்தாய்
வந்தகருமங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்
ஆண்டவனேஐயாவே அயனாரே நீகேளும்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
அடைக்காயுப்வெற்றிலையும் அய்யா நான்மென்றுதின்று
வாசங்கள்தின்று நான் மண்மேலேதுப்பினேன்
மாயவனார்கைத்தலத்தில் வந்துவிழுந்துதாம்
மாயன்வெகுகோபமாகி வரவிட்டார்சக்கரத்தை
என்னையேகொல்லவென்று இபலாயனுப்பினர்
ஆகையாலாண்டவனே யாதரிப்பீரென்றுவந்தேன்
எந்தனையாதரியும் என்றல்லோயடிபணிந்தான்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வன் நான்முகனும்
நான்வேறுவிஷ்ணுவேறோ நானிலத்திற்கெந்தருவா

மாயருக்குப்பகையாகி வந்தாயேபாதகனே
உன்னையேயாதரித்தால் உலகளந்தாரெந்தனுக்கு
பொல்லாப்புநேர்ந்துவிடும் பெரும்பாவியெந்தனுக்கு
உன்னையேயாதரிக்க உதவாதுஎந்தனுக்கு
யமபுரமேறிநீ எமனுடனுரைத்தால்
எந்தவிதமாகிலும் எமனுன்னைக்காத்திடுவான்
கடுகிநடவுமென்று கைவிட்டார்பிரமதேவர்
அழுதுபுலம்பியே அதிவிரைவாய்த்தான்வாரான்
எமனருகில்வந்து இளைத்துப்புலம்புகிறான்
காலனுங்கண்டு கடுகவேயேதுசொல்வான்
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றான்
அப்போதுகெந்தருவன் அவருக்கெடுத்துரைப்பான்
அந்தரமார்க்கத்திலே அழகுரதமேறிவந்தேன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்ததாம் மாயருடகைத்தலத்தில்
ஆகையால்கோபித்து அனுப்பினார்சக்கரத்தை
என்னைக்கழுத்தறுக்க எதிர்வருகுதென்றான்
என்னையுமாதரியுமென்றனேகெந்தருவன்
காலனுங்கேட்டுமவன் கடுகியெடுத்துரைப்பான்
மாயருக்குப்பகையானால் மன்னவனேபார்க்கலாமோ
மாயருடஊழியத்தை மன்னவனேசெய்திடுவேன்
உன்னையேகாத்தாலே உலகளந்தார்கோபமுற்றால்
எதிர்த்துப்புறப்பட்டால் எதிர்நிற்கப்போறேனோ
காக்கமுடியாது கட்டழகாகெந்தருவா
அமராபதியாளும் அழகானதெய்வபிரான்
தேவேந்திரனருகில் சென்றுநீபோவீரானால்
காக்கவும்வல்லபிரான் கடுகிநீபோகுமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமவன் அழுதுபுலம்பிவாரான்
தெய்வலோகந்தனிலே தேவேந்திரனருகில்
அபயமிட்டு அடிபணிந்தான் ஆனதொருகெந்தருவன்
ஆரடாதம்பிநீ அறியவுரையுமென்றான்

ஆண்டவனேஐயாவே அடியேனொருவார்த்தை
ஆகாயவீதியிலே அழகாகமேறிவந்தேன்
வெற்றிலையும்பாக்கும் வாழ்மிளகுஜாதிபத்திரியும்
ஜாதிக்காய்ஏலரிசி சன்னலவுங்கமுடன்
வாசங்கள்தின்று நான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்துகாம் மாயவனார்கைத்தலத்தில்
ஆகையாலெம்பெருமாள் அடியேன்மேல்கோபமாகி
சக்கரத்தையனுப்பியெந்தன் தலையையறியுமென
வருகுதுசக்கரந்தான் வல்லுயிரைவாங்கவென்று
சொல்லவருகுது கொப்பெனவேசக்கரந்தான்
ஆதரித்தென்னையாட்சி அனேககோடிமோட்சமுண்டு
என்றவுரைகேட்டு யேதுசொல்வாரிந்திரரும்
மாயருக்குப்பகையாகி வந்தவனை ஆதரித்தால்
எதிர்த்தாரேயாமானால் எதிர்நிற்கப்போறேனோ
மாயனுக்குச்சரியானார் வையகத்தில்யாருமில்லை
உன்னையோயாதரிக்க உலகத்தில்யாருமில்லை
தருமருடதம்பியவன் தார்விஜயனர்ச்சுனன்தான்
அருச்சுனனுமுன்னை ஆதரிக்கவேமுடியும்
அபயக்குரல்கேட்டு ஆதரிப்பான்வாள்விஜயன்
ஆதிசிவனென அரனொருவந்தாலும்
எழுதும்பிரமாவும் எம்பெருமாள்வந்தாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்வந்தாலும்
ஆர்வந்தெதிர்த்தாலும் ஆரவாரம்பண்ணுலும்
அருச்சுனராஜனவன் அனைவோரைவென்றிடுவான்
வாழ்விஜயனருச்சுனனும் வல்லமையுள்ளவனகாண்
அருச்சுனனை நீகோரி அபயமிட்டுப்போனீரானல்
ஆதரிப்பான்வாழ்விஜயன திவிரைவிற்போய்ச்சேரும்
என்றவுரைகேட்டு எழுந்தானேகெந்தருவன்
அழுதுபுலம்பியே அர்ச்சுனனைத்தேடிவாரான
தெய்வலோகந்தாண்டி தேர்விஜயனைத்தேடி
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அலறியேதேடிவாரான்
அபயமபயமென்று அருச்சுனன்முன்னேவந்தான.

அருச்சுனன் கெந்தருவனுக்கு அபயங்கொடுத்தது.

---

அபயக்குரல்கேட்டு அருச்சுனனேதுரைப்பான்
ஆரடாகெந்தருவா அழுதுபுலம்புவானேன்
ஆரெதிர்த்துவந்தாலும் அமராதுசெய்திடுவேன்
அந்தத்தேவதைகள் ஐயன்பிடாரிகளும்
ஆகாயவாணிகளென்னுத்துமாதானறிய
காக்கிறேனஞ்சாதே என்றல்லோகைகொடுத்தான்
அருச்சுனனுங்கைகொடுத்து அஞ்சாதேயென்றுசொல்ல
சற்றுபயந்தெளிந்தானே தார்வேந்தன்கெந்தருவன்
அருச்சுனராஜனவன் அப்போதுவெதுசொல்வான்
யார்க்குப்பகையாகியழுதுபுலம்பிவந்தாய்
எவரெதிர்த்தாருனனோடே இங்கழுது நீவந்தாய்
வந்தகருமமென்ன வாய்திறந்துசொல்லுமென்றான்
அஞ்சிபயந்தவனும் அருச்சுனனோடுரைப்பான்
ஆகாயவீதியிலே அழகுடனேறிவந்தேன்
வாசங்கள்தின்று நானே மண்மேலேதுப்பினேன்
நானுமிழ்ந்தததம்பலந்தான் ராமர்கையில்விழுந்ததாம்
ஆகையாலெவரும் அப்போவெகுகோபமுடன்
என்னையேகொல்லவென்று எடுத்துவிட்டார்சக்கரத்தை
சக்கரமவருதுகாண் தலையைத்தரிக்கவென்று
ஆதிசிவனருகில் அபயமிட்டுப்போனேனையா
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
அயன்பிர்மதேவனிடம் அபயமிட்டுப்போனேனையா
ஆதிபிரமனுடனே அபயமிட்டுப்போய்ச்சேர்ந்தேன்
என்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
எமதர்மராஜனண்டை எதிர்கொண்டபயமிட்டேன்
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
தேவேந்திரனருகில் சென்று நான் அபயமிட்டேன்
காத்திடுவாரென்று நான் கடிகியே அபயமிட்டேன்
என்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்

அழகில்மிகுந்தவரே அருச்சுனரேயும்மைநாடி
தேடியே அபயமிட்டு தெய்வலோகம்விட்டுவந்தேன்
ஆதரித்திராமானுல் அனைவர்க்குங்கிர்த்தியுண்டு
இவ்வார்த்தைதான்கேட்டு எழில்விஜயனர்ச்சுனனும்
எண்ணுதுமெண்ணுகிரு னெண்ணிமனங் குன்னுகிரு
ன், மாயருக்குப்பகையாகி வந்தவனைக்காததாலே
ஆயருக்குமெந்தனுக்கும் அடுத்தாற்பகையாமே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிவிசாரமிட்டு
ஐவர்சகாயரல்லோ ஆயர்பெருமாளும்
நயபினேனென்றவரை ரட்சிக்கவேணுமல்லால்
காக்கிறேமென்றுசொல்லி கைவிடலாகாது
ஆயாபெருமாளுக்கு அன்பானவார்த்தைசொல்லி
எந்தவிதத்திலேயும் அவன்றனைக்காக்கவேணும்
அல்லவென்றுகோபமிட்டால் அமாதுசெய்திடுவோம்
என்றுநினைத்தவனும் என்னசொல்வான்வாழ்விஜயன்
திங்களுஞ்சூரியனும் தெற்குவடக்கானுலும்
அழகானதாமரையும் அடியிலேபூத்தாலும்
நறிககிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
நாவாலேசொன்னதெல்லாம நான்தவறப்போரதில்லை
எநதவிதத்திலேயுட இடறகற்றிக்காத்திடுவேன
என்றல்லோயாதரித்தான் இயலானவாழ்விஜயன்

அருச்சுனன் கெந்தருவனுக்கு பயந்தீர்க்க பெரு
மாளுக்கு கோபம்வந்து சக்கரத்தை
யனுப்புகிறது.

---

வருகிறசக்கரந்தான் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
கண்கள்பொறிபறக்கக் கடிகிவருகுதே
அருச்சுனராஜாண்டை அருகேவந்துதெண்டனிட
என்னருகேகாரியமேன் எங்குவந்தீர்சக்கரமே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்ருன்
சாமியனுப்பிவைத்த சக்கரமேதுசொல்லும்
மாயனுக்குப்பகையான மாபாவிகெந்தருவன்

அருச்சுனரேவுன்னிடத்தில் வந்தானரும்பாவி
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினார்மாயவரும்
ஆகையாலனுப்புங்காண அர்ச்சுனரேயவன்தலையை
அறுத்தெரிக்கத்தான்போறேன் அவனையனுப்புமென
தனஞ்செயனப்போது சக்கரத்துக்கேதுசொல்வான்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனனவனை
மாளத்தானவற்குப் பகையானனென்றறியேன்
அபயமபயமென்றான் ஆதரித்தேனனவனை
காக்கிறேனென்றுசொல்லி கைவிடலாகாது
ஆகையால்சக்கரமே ஆயருக்குச்சேதிசொல்லும்
கோடிசரணார்நானு கும்பிட்டேனென்றுசொல்லும்
ஆயிரந்தெண்டனிட்டு அடிபணிந்தேனென்றுசொல்லு
ம், சக்கரத்தாழ்வாரும் தார்விசயற்கேதுசொல்லும்
ஆனாற்போய்வாரேனென்று அப்போதிரும்பிவந்து
மாயவரைக்கண்டு வணங்கிநமஸ்கரித்து
ஆழிசிவனருகில் அபயமிட்டுநிற்கையில
ஆழிகேமாடபோமென்று அவரும்விலக்கிவிட்டார்
அருச்சுனர்தன்னருகில் போனேனபயமிட்டு
வணங்கிநமஸ்கரித்து மாயாவுன்வார்த்தைசொன்னேன்
உனக்குப்பகையான உண்மையெல்லாம் நானுரைத்தேன்
எத்தனைசொன்னாலும் இரங்காமலர்ச்சுனனும்
ஆண்டவனேவுன்னருகே அனுப்பினான்சொல்லுமென்
று, இவ்வார்த்தைகேட்கலுமே எம்பெருமாள்கோபமாகி
ஆங்காரக்கோபமுடன் அரிராமரென்னசொல்வார்
ஐவரைக்காப்பதற்கு ஆண்டவனும்நாமிருந்து
இத்தனைநாள்நான்காத்தேன் இப்பாணபஞ்சவரை
எனக்குப்பகையாளிதனக்குப்பகையலவோ
ஆதரிக்கனாமுண்டோ அரியானேயென்சமர்த்தை
மறுக்காலொருதரம்நீ வாள்விசயனருகிற்சென்று
நானுரைத்தவார்த்தையெல்லாம் நல்விசயனுக்குரைத்து
மாயவற்குவேண்டாத மாபாவியானவனை

விட்டுவிட்டாலல்லாது வேணபகையாகுமென்று
குருகுலவம்மிசத்தார் கூட்டோடொழி.,மென்று
கொல்லநினைப்பார்காண் குடிகேடுவருமென்று
சொல்லியேவாருமென்று சொன்னாரேமாயவனார்
அப்போதுசக்கரத் தாழ்வாருந்தானடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
அருச்சுனராஜனண்டை அருகேவந்துதெண்டனிட்டு
மாயவனார்சொன்னதொருவார்த்தையொன்றுந்தப்பாமல்
காண்டீபனருச்சுனற்குக் கரியமால்சேதியெல்லாம்
உண்டானவார்த்தையெல்லாம் ஒளியாயலேயுரைத்தான்
காண்டீபனருச்சுனனும் கடிகியேயேதுசொல்வான்
ஏதறிவான்கநதருவன் ஏழையானுன்னடியேன்
வாள்விசயனர்ச்சுனன்மேல் வன்பகையுந்தனுக்கேன்
ஏதுகுற்றமானாலும் எனக்காய்மனம்பொறுத்து
ஆயிரந்தெண்டன் அடிபணிந்தேனென்றுசொல்லும்
காக்கிறேனென்றுசொல்லி கைவிடஞாயமல்ல
நறிக்கிப்பிழிந்துயென்னை நரகத்திற்போட்டாலும்
கைவிடான்விசயனென்று கண்ணருக்கு நீயுரையும்
ஊழியுள்ளகாலமட்டும் உனைமறவானருச்சுனனும்
வணங்கினானென்றுரையும் மாயருக்கு நீர்தாமும்
அனேகங்கோடிநமஸ்காரம் அருச்சுனன்செய்தானென்
று, தாமோதரன்றனக்குச் சக்கரமேபோய்ச்சொல்லும்
சக்கரமேபோய்ச்சொல்லுஞ் சரணஞ்சரணமென்று
சொல்லித்தொழுகானே சுவாமிபெருமானை
சக்கரத்தாழ்வாற்குத் தனஞ்சயன்விடைகொடுக்க
சக்கரத்தாழ்வாருந் தானுமங்கேபோய்நடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
மாயாருகல்வந்து வணங்கியேதெண்டனிட்டு
வாள்விசயனசொன்னதொரு வார்த்தைகள்தானுரைக்க
ஆயரவர்கேட்டு ஆங்காரக்கோபமதாய்
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தப்பிறந்தென

சக்கரம் அருச்சுனன்மனமறிந்து பெருமாளுக்கு
சொல்ல பெருமாள்கோபித்து சாத்தகியை
அனுப்புகிறது.

---

கொல்லநினைப்பாரே சூடிபேடுவந்திடுமே
வேண்டாங்காணவாள்விஜயா வீணபகைதேடாதேயென
அருச்சுனற்குச்சொல்லநீ அதிவிரைவிலோடியநத
கெநதிருவன்தன் தகூவை இநதகூதவைமறத்து
ஒருகூதணைப்போலதயிலே உத்தரவுங்காண்டுவாரும்
என்றவுரைகேட்டு எழுந்துநடந்தாராம்
காடுசெடியுங் கரியமலைதானகடந்து
அருச்சுனன் தானிருக்கும் ஆரணியம்போய்ச்சேர்ந்தான்
அருச்சுனனைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டான்
மாயனுரைத்தவொரு வார்த்தையொன்றுதப்பாமல்
ஒன்றுமொளியாமல் உரைத்தாரேசாத்தகிதான்
அரசர்சேதிசெயலெலாம அருச்சுனனதானகேட்டு
எந்தவார்த்தைக்கிரக்கமாய்ச்சொன்னாலும்
இரங்காமல்மாயவருமு எதிர்க்கவும்ஞாயமுணடோ
ஆயனபெருமாளும அறியாரோஎனசமர்த்தை
பெண்டுகள்பேச்சுகளோ பேசுகிறாரம பெருமாள்
கைவலுவையுண்டானால் கடுகிவரச்சொலலும்
மூலையிலேதாமிருநது மாருகிறதுஞாயமுண்டோ
மைதானவெளியிலே வரச்சொலலுமசண்டைபண்ண
காக்கிறேனென்றவனை கைவிடப்போறேனோ
மாயவருடனேக மயேஸ்வரனாவந்தாலும்
பெருமாளுடனேகப் பிரமதேவர்வந்தாலும்
எவரெதிரதபோனாலும இளைப்பேனென்றுபாராதே
போவெனறுசொன்னான் போர்விஜயன்கோபமதாய்
சாத்தகியாழ்வாரும தானடந்தானபொட்டெனவே
ஆயாருகில்வந்து அடிபணிநதுதெண்டனிட்டான்
அருச்சுனன்சமர்த்துகளும ஆண்மைகள்பேசினதும்

சண்டைக்குமுன்றிப்பாய் தானவரசொன்னதுவும்
அவ்வார்த்தைசொல்லுகையில் ஆபரும்கோபமுற்று
அவ்வலரிக்கண்ணைசெவக்க செவ்வலரியாருமப்பா

அருச்சனன்மேல் பெருமாள்கோபமாகி சண்டைக்குப்
போக திரியோதிரனை வரவழைக்கிறது.

---

கோபமபெரிதாச்சு கோபாலமாயருக்கு
சாத்தகியைத்தானழைத்து சாமியாரேதுசொல்வார்
திரியோதிரனுக்குச் சேதியுரையுமென்றார்
மாயவற்குப்பகையானார் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
ஐவரைக்கொல்லவென்று ஆயபயணமிட்டார்
உன்னுடையசேனைகளும் யுத்தமானராஜர்களும்
சேர்த்துணையாகச் செப்பிவரச்சொன்னார்காண்
வாருங்களென்று வரவழையுந்திரியனைத்தான்
இப்போசமயம் இதேபயமாய்வாருமென்று
நாகக்கொடிவேந்தன் ராஜனைவரவழையுமென்றான்
சாத்தகியும்வாரும் சரணமிட்டுப்போய்நடந்தார
அவ்திருபுரத்துக்கு அடைவுடனேபோய்ச்சேர்ந்து
திரியோதரனுக்குச் சேதிகள்சொல்லலுற்றார்
ஐவரைககொல்லுகைக்கு ஆபமனதாகி
அழைத்துவரசசொன்னார்காண் அரவக்கொடியோனே
வருவீரேயென்று சொல்லவாய்மொழிகேட்கலுற்றார்
சாத்தகிசொல்லுமெ சாப்பக்கொடியோனும்
திரியோதிரனகேட்டு சிந்தைமனமகிழ்ந்து
ஐவரைக்கொல்லுகைக்கு அதிகமனதாகி
நல்லசமயம் நமக்குக்கிடைத்ததென்று

திரியோதிரன் பெருமாளிடம் வருகிறது.

---

அங்கேநட்டான்சண்டாவை அடியுமென்றான் பேரிகை
யை, இன்றுவெளிக்கூடாரம்பிப்போதுபோடுமென்றான்
காலனுக்கேநித்தார்கள் கறுப்புநல்லகூடாரம

வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளை நல்லகூடாரம்
யானையின்மேல்டங்காவும் குதிரையின்மேல்டோராவும
ஒட்டையின்மேல் நகபத்து ஓசைசெவிடுபட
யானையுஞ்சேனையுடன் அரசமன்னர்பயணமிட்டார்
துரியோதனன் தம்பிமார் ன் தொண்ணூற்றொன்பதுபேர்
கருணன்சகுனியும் காந்தாரிபிள்ளைகளும்
துரோணாசுவத்தாமன் சொற்பெரியகங்கையனும்
கிருபனகிருபாசாரி கீர்த்தியுள்ளமன்னர்களும்
பின்னையவன்மக்குணனும் பேர்மிகுந்தமந்திரியும்
மற்றுஞ்சிலராஜர்களும் மந்திரிகள்பயணமானார்
அமரதருஞ்சமரதரும அதிரதரானவரும்
கலிங்கர்த்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கரரும் இளநாட்டுச்சோனகரும்
என்னென்று ஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
நாலுபக்கத்திலுள்ள ராசாக்கள்சேனையுடன்
காரமேகம்போலே கறுத்தானைகூட்டம்வரும்
மேகத்துமின்னலைப்போல் வெள்ளானைக்கூட்டம்வரும்
வானத்துமின்னலைப்போல் பணித்தேரசைந்துவர
செவ்வானம்போலே சிவந்தபுரவிகளும்
அர்ச்சுகிருடினை யானைநெடுந்தேரசைய
வண்டிக்கிருகினென மதயானைகோஷ்டமிட
குதிரைகளைக்குமங்கே கொக்கரிக்கும்பாளையங்கள்
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணகளென்று ரணபேரிதான்முழங்க
தேர்களசைந்துவரச் சிகரக்கொடிபறக்க
மாயவனார்பட்டணமே வாராகளெல்லோரும்
அங்கேநட்டான்சண்டாவை அங்கிறங்கிப்பாளையங்கள்
திரியோதிராஜன் ஸ்ரீகிருஷ்ணாருகில்வந்து
மாயவுரைக்கண்டு வணங்கியேதெண்டனிட்டான்
ஏழுலகமுண்டசாமி எம்பெருமானேதுசொல்வார்

மாநாகங்கொண்ட மகாராஜர் நீர்கேளும்
காலையில்தானெழுந்து கனிவாய்முகங்கழுவி
தினகரனைத்தோத்தரித்து செய்தேன்செபதபங்கள்
ஆகாயவீதியிலே அருமபாவிகெந்தருவன்
வாசங்கள்தின்றுமெந்தன்வலதுகையில்தானுமிழ்ந்தான்
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினேன்சக்கரத்தை
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனராஜனவன் ஆதரித்துக்கொண்டானும்
ஆகையாலருச்சுனனை அசுமாக்கவேணுமென்று
உந்தனுக்குச்சேதிசொல்லி உரகதனேவாருமென்றேன்
எனவார்த்தைதள்ளாமல என்மேல்தயவாகிவந்தீர்

ஐவரையுங்கொல்ல திரியோதிரனும் அவன்சேனை
களும் எம்பெருமாளும் அவர்சேனைகளும்
சண்டைக்கு வருகிறது.

---

ஐவரைக்கொல்லுகைக்கு அனைவரும்போவோமென்றார்
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றார்
அமரதரும்சமரதரும அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும், கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
அத்தண்டராணுவமும் அல்லவரும்பயணமென்றார்
துரோணரசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகர்னனுமே
எண்ணான்குஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
ஏறினார்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
தேரணியுமாவணியும் சேனைத்திரளுமே
வாரஜனங்களெல்லாம மட்டுமிதங்களில்லை
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
வனமாய்வனங்கடந்து வரு துபாளையங்கள்
தினகான்வனந்தனிலே சேர்ந்தார்துரைகளெல்லாம்
அடலுமுகாயங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்

முருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னர்வந்தார்கள்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தாரந்நேரம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காமதேனுபர்வதத்தில் கடுகிவந்தார் துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
கெந்தமாபர்வதமே கிட்டியேவாரார்கள்
ஒற்றனொருவனை ஓடியேசொல்லுமென்றான்
திரியோதிரன்படையும ஸ்ரீகிருஷ்ணன்சேனைகளும்
வருகிறாரென்றுசொல்லி வாள்விஜயனுக்குரையும்
அன்றுசொல்லியருச்சுனற்கு அனுப்பினார் தூதுவனை

அருச்சுனற்கு எம்பெருமாள் சண்டைக்குவருகிறே
னென்று தூதனிடம் சொல்லுதல்.

---

ஓடினன் தூதுவனும் ஒருநொடியிற்போய்ச்சேர்ந்தான்
அர்ச்சுனராஜருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மாயனார்உதகதனும் வருகிறார்சண்டைபண்ண
எச்சரிக்கையாகவே இருமென்றார்எ பெருமாள்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தானருச்சுனனும்
தருமராஜரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
அண்ணைதருமருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மச்சரதமேறி வருகிறவேளையிலே
வாசங்கள்தின்று மணமேலே துப்பினான்
அவனுமிழ்ந்ததம்பலங்கள் அரிராமர்கையில்விழ
மாயன்பெருமாளும் மகாகோபந்தானுகி
சக்கரத்தைவிட்டார்கான் தலையைத்தரிக்கவென்று
அபயமபயமென்று அலறிப்புலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனனவனை
ஆதரித்தேனென்றுசொல்லி அமர்செய்யவந்தாரா
ஐவரைக்கொல்லவென்று அரிராமர்வாராரும

மாயருடன்சண்டைபண்ண வாறீரோ அண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுரைப்பார்தருமருமே
போருக்குமாயருடன் போகாதேதம்பியென
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
அஞ்சாதேதம்பியரே அதமாக்கிப்போட்டிடுவேன்
திரியோதிரன்படையும் ஸ்ரீராமர்சேனைகளும்
எல்லோரையுங்கொன்று எமலோகஞ்சேர்த்திடுவேன்

வீமனும் அர்ச்சுனனும் சண்டைக்குப் புறப்படுகிறது.

---

என்றுமதவீரன் எழுந்தானேகோபமுடன்
தருமரையுந்துரோபதையுந் தம்பிமாரிருவரையும்
அபயமிட்டகெந்தருவன் அவனையுந்தானழைத்து
உச்சிமலைநடுவே உள்ளேகுகையிருக்கும்
அந்தகுகையிலே அனைவோருமபோயிருங்கள்
வந்ததிரளையெல்லாம் மண்ணுக்கிரையிடுவோம்
எம்பெருமாள்சேனைகளை எமலோகஞ்சேர்த்திடுவோம்
எச்சரிக்கையாகவே இருமென்றானப்பொழுது
அப்படியேதருமரவர் அதிவிரைவாய்த்தானெழுந்து
உச்சிமலைநடுவே ஒருகுகையிற்போயிருந்தார்
வீமனருச்சுனரும் விரைவாகத்தானெழுந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் தத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
அம்புவில்லுந்தானெடுத்து ஆயுத்தப்பட்டார்கள்
வடக்குமுனையிலே மதவீமன்வந்துநின்றான்
தெற்குமுனையிலேதேர்விஜயன்வந்துநின்றான்
வருகுதுபாளையங்கள் மண்ணுவிண்ணுங்கொள்ளாமல்
ஆனைகுதிரைரதம் அளவில்லாச்சேனைகளும்

வருநிறஜனங்கள் தனை மாயவனர் தானழைத்து
திரியோதிரனை சேரவாவழைத்து
உன்னுடையசேனைகளை உகமையுள்ளராஜர்களை
சமரதுசெய்யவந்த சமர்த்துள்ளமன்னர்களை
ஆனைகுதிரைகளும் அரசுமன்னருள்ளவரும்
மாவணியுந்தேரணியும் மற்றுமுள்ளராணுவமும்
உன்னுடையபாளையத்தை ஒன்றாகவேகூட்டி
வடக்குமுகத்திலே மதவீமன்தன்மேலே
சண்டைபோய்செய்யுமென்று தான்சொன்னார் திரியனுக்கு
தெற்குமுகத்திலே தேர்விஜயன்தன்னருகே
என்னுடையசேனைகளெல்லோரும்போயெதிர்த்து
அருச்சுனன்றன்னுடனே அமரதுசெய்திடுவோம்
என்றுபெருப்பிளைத்தார் இயலானமாயவரும்
கவனச்சங்கூதினர் சண்டைக்குவாரோமென்று
ஊதினர்சின்னம் உவகைந்தார்பாளையத்தில்
சண்டை சண்டையென்றுசொல்லி சண்டைநகராடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
செத்துவொருமடங்கு தினகரனைக்கப்புகுது
கருத்துவொழப்புகுது கதிரோனைக்கப்புகுது
வந்துவெதிர்க்கார்கள் வாள்விஜயன்றன்னுடனே
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
தன்னுடையசேனையுடன் தான்வடக்குத்திசையதனில்
வந்துவெதிர்த்தானே மதவீமன்தன்னுடனே
எண்ணெறைச்சேனையுடன் எச்சரித்துத்தான்வளைத்தார்
சிங்கநாதந்தானூதி சேனைகளுங்கொக்கரித்தார்
கண்டான்மதவீமன் கண்கொள்ளாச்சேனைகளை
எல்லவரைக்கொல்லவென்று எழுந்தான்மதகரியான்
கோபம்வருகுது கொற்றவனர்வீமனுக்கு
அவ்வளவிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுது
கண்டுனையுருட்டிக் கதிர்பிறைசேனைகளை
எட்டிதுங்கல்மலையை எகிறவிட்டான்பாளையத்தில்
மலைகளைத்தான்பிடுங்கி மதவீமன்வீசுகிறான்

குன்றுகள்சேர்த்தெடுத்துக் கொப்பெனவேசாடுகிறுன்
ஆனைகுதிரைகளும் அலறிக்கலங்கிடுமாம்
அச்சுகளுந்தான்முறிந்து அநேகரதம்விழுமாம்
வண்டில்முறிந்துசில மச்சுத்தேர்தானெடியும்
ஜெனங்கள்மடியுது செம்புரவிவோடுகுது
கண்டங்கண்டமாகுது கடுஞ்சேனையத்தனையும்
அம்மாடியென்றுசொல்லி அலையுதுபாளையங்கள்
செத்தஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
ரத்தாறுவோடுகுது ரணங்கள்மிகக்கொப்பளிக்க
ஐயோசிவனேயென்று அலையுதுபாளையங்கள்
பார்த்துமுடியாது பாவியுடஜனங்கள்
சொல்லிமுடியாது துரியோதிரன்பாளையங்கள்
இந்தவிதமாக எழில்வீமன்கொல்லுகிறுன்
இப்படியாகவே இவன்சண்டை பண்ணுகையில்
ஆணலழகுமன்னன் அருச்சுனன் தன்னுடனே
வந்துயெதிர்த்தாரே மாயர்பெருமாளும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
மார்பிரளத்தானெடுத்து தோள்பிரளவாங்கிவிட்டான்
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
சொர்னமழைபோலே சொரிகிறுர்பாணமது
சங்கரன்மாரிபோலே சரமேல்சரம்விடுத்தார்
அருச்சுனன்பின்னிடையான அகோரச்சரம்பொழிந்தா
ன், ஆகாயந்தன்னளவாய் அம்பாலேபந்தலிட்டு
சூரியனைத்தான்வளைத்தான் சூராதிசூரனவன்
வில்பிடித்தகைத்தலத்தில் மெத்தச்சிவப்பேறும்
வளைத்தவில்நிமிராமல் மாரிச்சரம்பொழிந்தார்
வாயுவினஸ்திரமும் வருணஸ்திரமும்விட்டார்
பின்னையுமஸ்திரங்கள் பிரளயமாய்த்தான்விடுத்தார்
நாலுகடிகைமட்டும் நல்லசண்டை பண்ணுர்கள்
ஒருவற்கொருவர் உகந்துபின்வாங்காமல
சண்டையமர்க்களத்தில் தாக்கிப்பொருதலுற்றுர்.
விலக்குவாரில்லை மிகுத்தசமரதனை

மாயன்பெருமாட்கு வருகுதுமெத்தக்கோபம்
என்றுமில்லாக்கோபம் எழுபபுதுமாயருக்கு
விட்டதொருபாணமெல்லாம் மட்டறுத்தான்வாள்விஜய
ன், அருச்சுனரைகொல்ல அரிராமர்கோபமதாய்
சக்கரத்தைதாளெடுத்தார் சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலர் அர்ச்சுனரை
மந்திரதூயமிட்டு மாயவனுரே துசொலவார்
அருச்சுனன் தன்சிரசை அரை நொடியில்வாங்குமென்றுர்
சுழற்றியெடுத்தாரே சுவாமியுஞ்சக்கரத்தை
கண்டானேவாள்விஜயன் காந்தாளமாயெழும்பி
தானுமெடுத்தானே தன்னுடையசக்கரத்தை
சக்கரத்தைமந்திரித்து சாமியைகொல்லவென்று
எடுத்தானேசக்கரத்தை இமையோர்கள்தானறிய
சக்கரத்தைமந்திரித்து சாமியைக்கொல்லவென்று
வாவென்றழைக்க வகையறியானருச்சுனனும்

சாமிபெருமாள் சக்கரமெடுக்கத் தனஞ்சயன்
பதில் சக்கரமெடுக்க இருவரும்
சமாதானமாகிறது.

---

கண்டார்பெருமாளும் கன்மோசம்வந்ததென்று
நாமல்லோகற்பித்தோம் நல்விசயனர்ச்சுனற்கு
சக்கரத்தைவிட்டாக்கால் தானழைக்கவகையறியான்
சக்கரம்வந்துதானல் தலையைத்தறித்திடுமே
மோசம்வருகுதென்று முகில்வண்ணரேதுசெய்தார்
தன்னுடையசக்கரத்தை சாமியார்தேரில்வைத்தார்
தேரைவிட்டிறங்கினுர் ஸ்ரீராமர்பொட்டெனவே
கண்டானேயர்ச்சுனனும் கடுகயிறங்கினுன்
தேரைவிட்டுத்தானிறங்கி ஸ்ரீராமர்க்கெதிரானுன்
ஒருவற்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்

எம்பெருமானும் அர்ச்சுனனும் சமாதானமானதை
திரியோதிரன்கண்டு பொறுமைபட்டுச்
சொல்லாமல் ஓடுகிறது.

---

கண்டான்திரியோதிரன் கரியமால்மோசமும்
தனஞ்சயனுமாயனுமே தழுவிவிளையாடுவதும்
எண்ணுதுமெண்ணினன் எரிநாகங்கொண்டவனும்
மாயன்கெடுத்தானே வஞ்சனைகள்செய்தானே
பொல்லா நினைவுகொண்டு பெருமாளழைக் கவந்தார்
நம்மையேகொல்லவென்று நாரணரழைத்துவந்தார்
அறியாமல்வந்துவிட்டோம் அமாதுசெய்வோமென்று
மாயவனை நம்பி வருவது நீதியல்ல
ஐவர்சகாயரென அவனியதிற்கேட்டிருந்தும்
அறிந்துமிருந்துநாம் அநீதமாய்மாளவந்தோம்
யுத்தம்பண்ணவந்திங் குறவாடிப்போனுமே
கொல்லுகிறேனென றுவந்து கூடியுறவாடினுமே
இனியிருக்கஞாயமல்ல எனறுவழிபிடித்தான்
ஆனையுஞ்சேனையும் அண்டவொண்ணுபானையதும்
தப்பியிருந்த தளப்பெரியசேனைகளை
கூட்டி நடந்தானே கொத்துப்போர்வீரியனும்
காடுஞ்செடிகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைகடந்து அனேகமலைதான்கடந்து
அத்திநகர்பட்டணத்தை அடுத்தான் திரியனுமே
அந்தச்சமயத்தில் ஆயருமர்ச்சுனரும்
ஒருவற்கொருவர் உறவாடிப்போய்நடந்தார்
மலையேறிவுச்சி வாராரிருவருமாய்
தருமருந்துரோபதையும் தம்பிமாரிருவருமாய்
கடிகியெழுந்திருந்து கார்வண்ணரைத்தொழுதார்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்மாயவரை
முக்கால்வலம்வந்து மூடிவணங்கித்தெண்டனிட்டார்
பெருமாள்மனமகிழ்ந்து பிரியமுடன்தான்வாழ்த்தி

அல்லவரைக்கையமர்த்தி அரிராமர்வீற்றிருந்தார்
திருமருடனுக சாமியரே துசொல்வார்
காலேக்கடன்முடித்துக் கையேந்திசெபதபங்கள்
செய்துகொண்டிருக்கையிலே தேரேறி அந்தரமாய்
ஆரோவொருகெந்தருவன் அதிகக்கெருவமதாய்
போகிறவனென்கையிற் புளிசசெனறுதம்பலத்தை
துப்பினுமசக்கரத்தைத் துணித்துவாவென்றனுப்ப
கிரீடியிடம் அபயமெனக் கெநதருவனேடிவர
எனக்குப்பகையான இபலானபாதகனை
ஆதரிக்கஞாயமுண்டோ அமர்செய்யக்காரியமேன்
எனனுடைமர்பொருந்த இராஜாவேஞாயமுண்டோ
தக்கபுகழ்பெரிய தருமரவரே துசொல்வார்
அறியாதார்செய்தபிழை ஆண்டவனேயலயபொறுத்து
தெரியாதார்செய்தபிழை தேவர்பனம்பொறுத்து
இரவும்பகலுமே எப்போதுமுந்தனைத்தான்
உம்மைத்தொழுதல்லோ உலகாளவென்றிருந்தோம்
ஆரைச்சதமெனபேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உம்மையேதெய்வமென்று உயிர்கொண்டுலாவுகிறோம்
என்றுவணங்கினர் இபலானதருமரவர்
உள்ளங்குளிர்ந்துமே உலகளந்தாரே துசொல்வார்
அருச்சுனனைத்தான்பார்த்து அரிமாயரே துசொல்வார்
சென்றதுவுன்சபதம் தேவேந்திரன்மகனே
அபயமிட்டபேர்களைத்தா னாதரிக்கவல்லபிரான்
செப்பியதுதான்தவருன் தேவேநதிரன்மகனா
மார்க்கண்டனுக்காக மயேஸ்வரன்சொல்லிவிட்டார்
நிலையறியார்பரமசிவன் நிலையறிநதான் நாமறியோம்
உன்னிலும்வல்லபிரான் உலகத்திலாருமில்லே
சந்தோஷமாச்சுது தர்மர்பஞ்சபாண்டவரே
இந்தவனம்விட்டு இனியவனம்போயிருங்கள்
எதுவினைவந்தாலும் எனனை நினைத்திடுங்கள்
போய்வாரேனென்று பெருமாளெழுந்திருந்தார்

எம்பெருமாள் விடைபெற்று தன்னிருப்பிடம்
செல்லுகிறது.

---

ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
காடுசெடியும் கரியமலைதான் தாண்டி
மாயவனூர்போனபின்பு வாள்விஜயனேதுசொல்வான்
வாராய் நீகெந்தருவா வார்த்தையொன்று நீர்கேளும்
உன்-ஆபத்துதீர்ந்தது ஆண்மையுள்ளகெந்தருவா
உந்தனரண்மனைக்கே உளமகிழ்ந்துபோய்ச்சேரும்
என்றுவிடைகொடுத்தார் எழில்விஜயனர்ச்சுனரும்
அப்போதுகெந்தருவன் அர்ச்சுனற்குத்தெண்டனிட்டு
நான்செய்தபாவத்தை இராஜாவேதீர்த்துவிட்டீர்

கெந்தருவன் அருச்சுனர்கையில் விடைபெற்றுக்
கொண்டு தன்னிருப்பிடம்போய்ச் சேருகிறது.

---

ஆபத்தைத்தான்தீர்த்து ஆதரித்தீர்வாள்விஜயா
உனக்கேதுநான்தருவேன் உயிர்க்கேத்தராஜாவே
பாராசாரிவெண்புரவி பஞ்சவர்னநற்புரவி
சாகாப்புரவிநான் தாரேன்காண்வாள்விஜயா
உந்தன்ரதத்திற்கு உற்றபுரவியென்றான்
ஆணலழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
வனவாசந்தீர்ந்துநாங்கள் வந்தபிறகாக
அப்போதுவேணுமென்று லப்புரவிதானனுப்பும்
எந்தன்மேல்தயவு நீ என்றும்மறவாதே
போய்வாருமென்றுசொல்லி புண்ணியருங்கூறினர்
மாயனெனனும்கெந்தருவன் வணங்கியேதெண்டனிட்டு
போதச்சரணமென்று போய்நடந்தான்கெந்தருவன்
ஏழாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
இந்தக்கதைதன்னில் இடறுகளுண்டானல்
ஜகத்தினிலுள்ளவர்கள் சரியாகயிக்கதையை



வீமன் பாரிஜாதமலர் கொண்டுவரச் செல்லல்.

இகழ்ச்சியாயுள்ளதெல்லாம் புகழ்ச்சியாய்த்தான் திருந்தி
அகத்தினிற்றான் பொருந்தி அன்பாகத்தான்படித்தால்
சுகத்துடன்தான்வாழ்ந்து சுவர்க்கபதிசேர்வார்கள்
இந்தப்படியாக பெய்போனார்வாழ்ந்திருவார்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாயவனைப்போது
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்பரனுர்

ஏழாவது கெந்தர்வபர்வதம்

முற்றிற்று.

---

## ஆறாவது. குருபாரிஷிவனம்.

---

எட்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலினைவைத்தரீ ஈடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னினைவைத்துசிமாடு வனவாசமபோனாகள்
குருபாரிஷிவனத்தில் குடித்தனமாய்ப்போனார்கள்
அந்தவனத்திலே ஐவர்குடித்தனமாய்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
எழுடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்ணசாலையேலாம் பஞ்சவாகள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாட்சென்றபின்பு

துரோபதை வனசாரிவந்து பாரிஜாதபுஷ்பம்
கேட்கிறது.

---

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
ஒற்றையொருநாளில் ஒண்டியாய்த்துரோபதையாள்
அந்தவனத்தில் அதிசயத்தைப்பார்த்துவர

வரத்திற்பெரியவராம மகாரிஷியானவராம்
யோகத்திற்பெரியவராம உத்தமருஷியும்
சாமியிலும்பெரியவராம் தவத்தில் மிகுந்தவராம்
அவர்-பூசைபண்ணுந்தீர்த்தம பொய்கைபோலாகுது
ஓடுஞ்சலத்திலே ஒதுங்கிவரும்பூமலரும்
பாரிசாதபூமலரும் பரிமளமாய்வீசுகுது
ஆற்றிலடித்துக்கொண்டு அலைநதுவருகுது
கண்டாளே துரோபதையாள் கடிதினாற்கொண்டாள்
மெத்தாசைப்பட்டாளே வேல்பொருதும்பெண்ணாளும்
எண்ணுதுமெண்ணுகிறு ளெண்ணரிதுரோபதையும்
ஆரோடேசொன்னாலே ஆகுமித்தகாரியங்கள்
எவரோடேசொன்னாலே எடுத்தளிப்பாரிம்மலரை

துரோபதை வீமனைப் புஷ்பம் கேட்கிறது.

---

வெற்றிமதயானை வீமருடன்சொன்னாலல்
பரித்துத்தருவார்காண பரிமளத்தைதாமறிய
என்று நடந்தாளே இளங்கொடி துரோபதையும்
பர்ணசாலைமேலாகப பாஞ்சாலியோடிவந்து
வெற்றிமதயானை வீமனைத்தான்பார்த்து
ஏலப்பசுங்கிளியாள் இளங்கொடியாளே துசொல்வாள்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம
காணுதுகண்டேன்காண கண்டாசைபட்டுவந்தேன்
பாரதுபார்த்துவநதேன் பார்த்தாசைப்பட்டேனையா
என்மனதுக்கேற்றபடி எனக்குவிடைதாரும்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணே பச்சைப்பசுங்கிளியே
எதுநினைந்துவந்தாய் எனக்கரியச்சொல்லுமென்றார்
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
அகிலாண்டகாவேரி ஆறொன்றுதான்வருது
ஆற்றங்கரையருகில் அங்கொன்றுதான்வருது
பரிமளத்தோடிருக்குது பார்த்துவந்தேனபாரிசாதம்

அந்தவனத்திருந்த அநேகமிருகமெல்லாம்
மறுகாலொருவனுக்கே மருண்டோடுதேமிருகம்
அனுமாருடரோமங்கள் அசைந்துகொடுத்ததுகாண்
கோபமவருகுது கோபாலதுதயற்து
என்னையடித்தவனை இச்சணமேகொன்றிடுவேன்
என்றுசொல்லித்தானெழுந்து நின்றானே நல்லனுமான்
அடித்தானே வீமனை அடிவானத்திடிபோல
கோடையிடிபோலே குத்தினான்மார்கலங்க
அந்தவடிபட்டவுடன் அங்கேகளைத்தானும்
மண்மேல்விழுந்தானும் மல்லார்ந்தபாவனையாய்
விழிகள்பிதுங்கியே விழுந்தானேமூர்ச்சையதாய்
மாண்டவன்போலே மண்மேல்விழுந்தானே
அநேகநெடுநேரம் ஆனபிறகாக
மூர்ச்சைதெளிந்து மூடியன்வன் தானெழுந்தான்
கண்டானே நல்லனுமான் சடிகியவனை துரைப்பான்
என்னுடையசண்டையிலே எவரும்பிழைத்ததில்லை
இவன்-ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
அடித்தவடியோடே அவெளியில்விழுந்தவன்காண்
தவறியெழுந்தவன்காண் தப்பிப்பிழைத்தானே
என்றுமனதிலெண்ணி இயலனுமானே துரைப்பான்
ஆரடாராட்சதனே ஆங்காரமுள்ளவனே
ஆரென்றிருந்தீர்தான் அரிராமர்தூதரல்லோ
லங்கையழித்தவன்நான் ராவணனைக்கொன்றவன்காண்
அஞ்சனாதேவிபெற்ற அனுமந்தனானல்லவோ
என்னோடெதிர்த்து இனிபிழைக்கப்போறீரோ
என்றவுரைகேட்டு இயவானவீமனவன்
உற்றதுகேட்டு மெத்தப்பயந்தவனும்
அண்ணனென்றறியாமல் அமரதுசெய்தோமே
என்று-பச்சைத்தழையுருவி பாதத்திற்றானபோட்டு
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
ஐங்கால்வலமவந்து அடிவணங்கித்தெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்

கண்டந்தநல்லனுமர் கடுகியேயுரைப்பார்
ஆரடாதம்பிநீ அறியவுரையுமென்றான்
(உன்) ஊரேதுபேரேது உன்னுடைபேரென்ன
ஆருடையபுத்திரனுகாண் அரியவுரையுமென்றான்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
என்தகப்பன்வாயுராஜர் என்தாயார்குந்தியம்மாள்
மந்தாரக்குந்தியம்மாள் பெற்றெடுத்தமகாராஜன்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலமணிகளைவருண்டு
தருமராஜர்தம்பி தாக்குடையவீமனென்பேர்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வான்நல்லனுமான்
உத்தமனே நாமிருவர் ஒக்கப்பிறந்ததினால்
என்னுடையசண்டைக்கு எவரும்பிழைத்ததில்லை
தம்பியென்றதாகையினால் தப்பிப்பிழைத்தீரே
மானமுளநீபிழைத்தாய் மதவீமனாகையினால
(என்று) ஒருவரொருவர் உறவாடிக்கதான்பேசி
எதுவகையாக இங்குவந்தாய்தம்பியரே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
இந்தவனமதனில் வந்தோநாம்வனவாசம்
பாஞ்சாலன்பெற்றமகள் பஞ்சவர்னநற்கிளியாள்
பாரிஜாதபூவலைப் பார்த்தாசைப்பட்டாளாம்
கானறுதபூவலைக் கண்டாசைப்பட்டாளாம்
பாரிசாதபூமலைப் பறிக்கவென்றுஇங்குவந்தேன்
வேண்டிவந்தபூமலை வேலவேந்தேதாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுமந்தனேதுசொல்வான்
சுருபாரிஷிவனத்தில் கோடியுடுக்காவலர்கள்
எழுலட்சங்கிங்கிலியர் இவ்வனத்திற்காவலுண்டு
இத்தனைகாவலிலே எப்படிக்குப்போய்வருவாய்
அந்தரிஷியறிந்தால் ஆக்கினைசெய்திடுவார
கொல்லதினைப்பாரே குடிகேடுவந்திடுமே
ஆருமறியார்கள் அவருடையபுட்பவனம்
என்னசெய்வேன்தம்பியரே எப்படிப்போய்நீவருவாய்

(உனை)வாலமுனையில்கட்டி நான் வனத்திலேவிட்டிடுவே
ன, ஆருமறியாமல் அப்பலனை நீபறிக்து
வாலையசக்கிவிட்டால் எடுத்துநான்வந்திடுவேன்

வீமன் அனுமான்வாலின் வழியாகச்சென்று
ராட்சதரையெல்லாங் கொல்லுகிறது.

---

(என்று) வாலிலேகட்டினன் மதகரியான்வீமனைத்தான்
வாலைக்கிளப்பி வனத்திலேபோகவிட்டான்
இந்தவனப்புதுமை எல்லாமறியவென்று
வாலையவிழ்த்தானே மதகரியானப்பொழுது
அசக்கிவிட்டானென்றுசொல்லி அனுமாரும்வாங்கினர்
வீமனைக்காணமல் மெத்தமனந்தளர்ந்தார்
ஆயாசப்பட்டு அனுமந்தனுந்தானிருந்தார்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்தான
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கவென்று

பூமரங்களை வீமன் அதம்பண்ண காவலர்கண்டு
சண்டைபண்ணி இறந்தவர்போக மற்றவர்
ரிஷியாருக்குச் சொல்லல்.

---

சுற்றிவருகிருன் சுந்தரமாயவ்வனத்தே
மல்லிகைமுல்லை மலர்போடுசெண்பகமும்
பாரிசாதபுஷ்பமங்கே பரிமளமவீசுகுது
வீசுகின்றபுஷ்பமரம் வேருடனேதான்பிடுங்கி
படுத்துப்பிரண்டானே பரிமளத்தைத்தானறிந்து
அந்தவனமெல்லாம் அதம்பண்ணனப்போது
அந்தவனத்திலே அனேகம்பேர்ராட்சதரும்
எல்லவருந்தான்வந்து எட்டினர் வீரண்டை
வந்தவளைத்தார்கள் மதகரியான்வீமனுடன்
எட்டினர்சண்டை எழும்புதுசமருமப்போ
ஒருவர்கொருவர் யுத்தங்களாகுது
வெற்றிமதயானை வீமன்வெகுண்டெழுந்து

அடிப்பான்கெதையாலே அனேகம்பேர்கீழேவிழ
அனந்தம்பேர்ராட்சதரை அதமாக்கிக்கொல்லுவனே
இந்தவிதமாக எண்கோடிராட்சசரை
கொன்றுவதைத்தானே கோடானகோடிகளே
கொன்றவர்தான்போக நின்றதொருராட்சதர்கள்
குருபாரிஷிமருகே கொப்பெனவேவோடிவந்தார்
அபயமபயமென்று அடிபணிந்துதெண்டனிட்டார்
ஏதுக்கபயம் என்னகருமமென்றார்
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
சிங்காரப்பூவனத்தைச் சீரழித்தான்பாவியவன்
மரங்களைத்தானபிடுங்கி வனமெல்லாம் அதமாக்கி
ஏழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
இவ்வார்த்தைகேட்டு எரிக்குங்கதிரவன்போல்
காயுங்கதிரவன்போல் கண்சிவந்தார்குருபாரிஷியும்
கோபம்வருகுது கொடுங்காலருத்திரன்போல்
என்னுடையபூவனத்தில் எவரொருவர்வாறதில்லை
தேவர்முனிவர் தீண்டொணாதபூவனத்தை
ஆரடாதுவசமே ஆயிரம்பேர்போங்களென்றார்
கைப்பிடியாய்தான்பிடித்துக் கடுகெனவேகொண்டுவாங்க
என்றசங்கதிகேட்டு எழுந்தார்களாயிரம்பேர் [ள்
வாய்வேகமாகவே வனத்திலேபோயிறங்கி
ஆரடாராட்சதனே ஆங்காரக்கோபமுடன்
வனத்தை அதமாக்கி வந்தவரைக்கொன்றவனே
எங்களுடையகுருமை இட்டுவரச்சொன்னாரே
குலத்திற்பெரியவர்காண் குருபாமகாரிஷியும்
உன்னை-அழைத்துவரச்சொன்னார்கள் ஐயருமிப்போது
கடுகெனவேவாருமென்று கையைப்பிடித்திழுத்தார்
கையோடேகைப்பிடித்தான் கடியவேகையைவிட்டார்
ஆயிரந்துஷ்டவரை அரைக்ஷணத்தில்தட்டிவிட்டான்
அத்தண்டபேலரையும் அவனொருவன்கொன்றுவிட்டான்
நானொருவன்தப்பிவந்தேன் நல்வார்த்தைசேதிசொல்ல
என்றவனகூறலுமே எழில்குருபாமுனிகேட்டு

கோவைப்பழம்போலே கூர்விழிகள்தான்சிவக்க
சவுரிப்பழம்போலே தன்னிருமேடுகள்சிவக்க
நெருப்புப்போல்கண்சிவக்க நெறநெறென்றுபல்கடித்து
சுவாசமனலெழும்பச் சுரணையொன்றுந்தோன்றாமல்
தானாகவந்து சபிக்கமனதாகி
ஏறினார்கனகதண்டி யெழில்குருபாமுனியவரும்
பாரவனத்திருக்கும் பங்களாதன்னருகே

புஷ்பவனத்தைபழித்தவனை சபிப்பதற்காக குருபா
முனிவருகிறதை எம்பெருமாளறிந்து அனை
வரையும் சமாதானப்படுத்துதல்.

---

வருகிறவேளையிலே மாயனிதுவறிந்தார்
காவலர்கள்பஞ்சவர்க்குக் கைமோசம்வந்ததே
மோசங்கள்வந்து மூடிந்ததேபஞ்சவர்க்கு
பொல்லாதகாலம் பிறந்ததுபஞ்சவர்க்கு
ஆகாதகாலம் ஐவருக்குவந்ததையோ
உள்ளங்கைநெல்லிக்கனி உருக்குலைந்துபோகுதையோ
தோளில்சேபயாலே தொண்டழிந்துபோகுதையோ
பெட்டியிலே ஆபரணம் பெருமைகுலையுதையோ
எழிலகுருபாரிஷியுடனே எதிர்ப்பாரொருவரில்லை
மரமாக்கிக்கல்லாக்கி வனத்திலேகொன்றிடுவார்
ஐவரைக்கொன்றிடுவார் அனர்த்தம்வரநாளாச்சே
காத்ததுகாத்தாமே கூடப்போகக்காப்பேனென்று
வட்டமாங்கருடனேறி வாராரேமாயவனார்
ஐவரிருக்கும் ஆரணியம்வந்துவிட்டார்
சாயாம்புமன்னன் தருமருங்கண்டாராம்
கடிகியெழுந்திருந்து கார்வண்ணனைத்தொழுது
சரணமடைந்தார்கள் தர்மமுடிராஜாக்கள்
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
ஜோட்டசங்காதனத்தில் ஏறியிருந்தாராம்
சாயாம்புமன்னா தருமமவனேதுவாப்பார்

இன்னேரவேளையிலே எம்பெருமாளெழுந்தீர்
அடியாரைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
வந்தகருமமதை மெய்த்திறந்துசொல்லுமென்றார்
அடியனந்தமாயவனார் ஆதிமூலமே துசொல்வார்
நால்வரிருக்கையிலே நல்லதம்பியெங்கேயென்றார்
வெற்றிதயாளை வீமாசனெங்கேயென்றார்
தருமாறியேயென்றார் தம்பியரைக்காணேனென்றார்
கோராவடிவழகி துரோபதையாளே துசொல்வாள்
பாரிசாதப்பூமலரைப் பார்த்தாசைப்பட்டேனையா
பிரியமாய்வேண்டுமென்று பிணங்கினேன்வீமாண்டை
பூபறித்துவாரேனென்று போய்விட்டார்வீமராஜன்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கே துசொலவார்
கைமேசம்வந்ததுகாண் கபடமில்லாத்தருமராயா
ஐவர்பஞ்சபாண்டவரே ஒருத்தம்வாலாச்சே
குருபரிஷிவனத்திற் கொப்பெனவேபோய்ப்புகுந்தான்
மரத்தைப்பிடுங்கியவன் வனநாசமாக்கிவிட்டான்
ஏழலட்சம்பாட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
அந்தவனத்தை அதமாக்கினபடியால்
கொல்லவருகிறார் கொப்பெனவேமாமுனியும்
தவத்திற்பெரியவர்காண் சகலகலைவல்லவர்காண்
வரத்திற்பெரியவர்காண் வல்லகுருபா முனியும்
அதிசாபம்தாளிடுவார் ஐவரைக்கொன்றிடுவார்
என்னசெய்யப்போறேனென எம்பெருமாள்கூறுகையில்
அஞ்சப்படாதமல்லேலோ ஆண்டவற்கே துசொல்வார்
இத்தனைநாள்காத்திரோ இன்றுகைவிட்டீரே
அரக்குமாமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அப்பவாசலிலே அபிமானங்காத்தீரே
ஆபத்தைதீர்க்கவந்த ஆண்டவரும் நீரலவோ
உம்மைவிடவேறு துணை உற்றதுணைதானுமுண்டோ
காக்கக்கடனுனக்கு என்றவர்கைதொழுதார்
மாயன்பெருமாளுதே வார்த்தையங்கே துசொல்வார்
குருபரிஷியுடன்பேசிக் கொண்டுநான்தானிருப்பேன்

அப்போது நாலுபேரும் அந்தவழிவந்திடுங்கள்
தருமரேயும்மை நான் தாழ்ந்துவணங்குகிறேன்
உன்னைவணங்கினால் உபசாரவார்த்தைசொல்லும்
ஆரென்றுகேட்பாரே அந்தகுருபாமுனியும்
உம்மிலும்வல்லபிரான் உண்மையுள்ளமாமுனியும்
என்றுஉரைத்தாலே எழுந்துவணங்கிடுவார்
வணங்கிநமஸ்கரிப்பீர் வாழ்த்திமெச்சிநினைப்பீர்
வெற்றிமதயானை வீமனெதிர்வந்தாலும்
அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்பேன்
அந்தரிஷியாரும் ஆரென்றுதான்கேட்பார்
உன்னிலும்வல்லபிரான் உண்மையுள்ளமாமுனியும்
என்றுசொல்லிநானிருப்பேனிவ்விதமாசெய்யவிட்டால்
அந்தகுருபாமுனியும் அனர்த்தம்பண்ணிபோட்டிடுவார்
ஆகையால்நான்போறேன் ஐவரேயின்புவாரும்
என்றுயெழுந்தாராம் இயலானமாயவரும்
வாரார்பெருமாளும் வனத்துடுகான்கடந்து
குருபாமுனியெதிரே கோப்பெனவேவருகையிலே
மாயவரைக்காணுகையில் வணங்கினார்குருபாமுனி
ஒருவற்கொருவர் உறவாடிப்பேசினார்கள்
மாயன்பெருமாளே வனத்திலேயெங்குவந்தீர்
இந்தவனமதனிலேது வகையாகவந்தீர்
வந்தவகையதனை வாய்திறந்துசொல்லுமென
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
வனசாரியாகவே வந்தேன குருபாமுனியே
வந்தயிடத்திலிந்தவனத்திலுமைக்கண்டேன்காண்
இன்னேரவேளையிலே எங்குவந்தீர்சொல்லுமென
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
வனத்திலேபோய்ப்புகுந்து மரங்களைத்தான்பிடுங்கி
ஏழுலட்சந்தூதுவரை எல்லவரைக்கொன்றிடுவான்
பொல்லாதபாவியைக் கொல்லவென்றுபோறேன்நான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரோதுசொல்வார்
உம்முடையவனத்திலே ஒருவர்வரப்போறதில்லை

தெய்வலோகத்தாரும் தீண்டாதபூவனத்தை
அமார்சித்த முனிவராலும் ஆகாதவனமழிக்க
ஐயரோவென்றவனத்தை அதமாக்கும்பாலகனை
இட்சணமேசெல்லுகிறேன இட்டுவரச்சொல்லுமென்று
ர், இருவருமாகவே ஏகாய்க்கொல்லவென்று
ஆடோது அவனை அழைத்துவாரட்சதனை
என்று அவர்பேசுகையில் இபாலானதருமரவர்
நகுலனைத்தானனுப்பி நல்வீமர்க்கேதுரைப்பார்
அண்ணனுந்தம்பியுமே ஆதிநாராயணரும்
குருபாரிஷியருகே கூடிப்பேசியேயிருப்பார்
கொல்லவென்றுதான் அவரைக் கூட்டிவரச்சொல்வார்கள்
அப்போதுஅவர் அவர்க ளழைத்துமமைத்தான்வருவார்
வந்தவுடனமை வணங்கிநமஸ்கரிப்பார்
அப்போதுநீயன்று ஆசீர்வதிப்பீரென
சொல்லிவரச்சொன்னார்காண் துரிதமுடனேயென்று
தருமரிஷியுரைகத் தார்வேந்தன் நகுலனுமே
வாயுவேகமாகவே வந்துவிட்டான்வீமனண்டை
அண்ணனுக்கீமா அண்ணருங்கிருஷ்ணரும்
இப்படிக்குச்சொல்லச் சொன்னார்களென்னையென்று
வீமனுக்குச்சொல்லி வந்துவிட்டான் நகுலனுமே
வனத்தில் குடியிடம் வந்துவிட்டான் நகுலனுமே
தம்பிமார்புடைசூழ தருமர்வருகையிலே
அங்கேவரப்பார்த்து அரிராமர்தானெழுந்து
அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்க
பார்த்தாருருமரிஷி பயந்தவருமேதுசொல்வார்
எந்தவூரெந்தநாடு இவர்பேச்சைசொல்லுமென்றார்
மாயனபெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
ஜெபத்திலுமதபத்திலும் செய்திடுமோர்நிஷ்டையிலும்
அதிகமுடையவர்காண் அழகானதருமரிஷி
ஆதிகைலாசம் ஆளுமிடந்தனிலே
உனனுடையபேர்விளங்க ஒருமணியடிபடுது
முனிவரிவர்போலே மூனுமணியடிபடுது

அன்னதானங்களிலே அதிகமுடையவர்காண்
யோகத்திற்பெரியவர்காண் உலகினிலும்வல்லபிரான்
ஏறெடுத்துப்பார்த்தாலே எரிந்துவிடும்லோகமெல்லாம்
பொய்வசனஞ்சொல்லாதார் புகழான குருமரிஷி
தருமரிஷியாரைத் தழுவியணைத்துக்கொண்டு
சிங்காதனத்தில சிறப்பாய்வீற்றிருந்தார்
தக்கபுகழுடைய தருமரிஷியேதுசொல்வார்
சாமிபெருமாளே சன்யாசியானவரோ
இருவருமாகவே இங்குவந்தவாறேது
என்றுதானசொல்லுகையில் ஏதுசொல்வார்குருமாரிஷி
தருமரிஷியாரே சாமியே நீர்கேளும்
என்னுடையதோட்டத்தில் எவரொருவர்வந்ததில்லை
அந்தரலோகத்து அமரர்கள்வந்ததில்லை
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
வந்துபுகுந்து வனத்தைப்பாழாக்கினான்
எழுலட்சபராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
ஆசையாயிங்குவந்தேன அவனை அதமாக்கவென்று
இவ்வார்த்தைகேட்டு ஏதுசொல்வார் தருமரிஷி
உம்முடையதோட்டத்தை அழிப்பாரொருவரில்லை
இங்கேயழையுங்கள் இக்ஷணமேசபித்திடுவேன்
என்றவர்சொல்லுகையில இங்குவந்தாவீமனை
திகைக்கவேதானெழுந்து ஸ்ரீராமாமாயவரும்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டாவீமருக்கு
முக்காலவலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டார்குருமாரிஷி கடிகியேயேதுரைப்பார்
அவன்யாரென்றும்தெண்டனிட்டீர் ஆயனபெருமாளே
ஆனாலுங்கேளுமையா அரியரிஷியாரே
ஆதிகயிலாசம் அரனாரிடந்தனிலே
உம்முடையபேராலே ஒருமணியடிபடுது
தருமருடபேராலே மூன்றுமணியடிபடுது
அந்தரிஷிபேராலே ஐந்துமணியடிபடுது
யோகத்திற்பெரியவர்காண் உத்தமரிஷியாரும்

தம்பிமார் நால்வருடன் தாழுங்கொலுவிருந்தார
குருபாரிஷியுமங்கே கெப்பெனவேதானெழுந்து
தானவரைத்தானழைத்துச் சொல்லுவாரோர்வார்த்தை
ஆயிரக்கலயரிசி அடிசல்சமையுமென்றார்
காயுங்கனியுங் கடுகசசமையுமென்றார்
நல்லபொறிக்கறியும் ராஜாக்கள்போஜனமும்
அடிசில்சமைத்தோமென அடிவணங்கித் தெண்டனிட்
டார், குருபாமுனிகேட்டு கொப்பெனவேதாமெழுந்து
கடுகசரணமென்று கைக்குச்சலங்கொடுத்தார்
பலாயிலேதைத்துப் படைத்தார்களன்னமதை
சமைத்திட்டசாதங்கறி தானேபுசித்தார்கள்
உபசாரமபண்ணியவா உண்ணுங்கள்சாமியென்றார்
அத்தண்டபேரும் அமுதுபுசித்தார்கள்

பஞ்சவர்களைந்துபேரும் பெருமாளுமலரவரிடஞ்
செல்லுகிறது.

---

சந்தனம்புட்பமும் தாம்பூலம்வாங்கிக்கொண்டார்
அத்தண்டபேரும ஆலிங்கனஞ்செய்துகொண்டார்
போய்வாரேமென்றுமே போநடந்தார்கள்
பர்னசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
ஏழுலகையாண்டவராம் எம்பெருமாளேதுசொல்வார்
வெற்றியதயானே வீமன்செய்ககாரியத்தை
நாமிருந்தபடியாலே நாடியுனைமக்காக்கவந்தோம்
அல்லாதேயாமானல் அனைவருமாண்டிடுவீர்
எங்கேயிருநதாலும இடாலலோசெய்திடுரான்
ஆகாதகாரியங்கள் அழமபுகள்செய்யலாமோ
இந்தவனத்தைவிட்டு ஏகுங்கடுத்தவனம
அநதவனத்தில் ஐவரும்போயிருங்கள்
ஆண்டுகழிநதது அவ்வனத்திலவீற்றிருங்கள்
போய்வாரோமென்று போகலுற்றாரெம்பெருமாள்
எட்டாம்வருஷம முடிந்ததுபஞ்சவர்க்கு

எட்டாவது குருபாமுனிவனம் முற்றிற்று.

---



ஸ்ரீகிருஷ்ணபகவான் மோகினி யுருவெடுத்து அருச்சுனனைத் தடுத்தல்.

## ௯-வது. ரோமரிஷிவனம்.



அந்தவனத்தைவிட்டு அப்புறம்போறார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகாணகத்தில்
கோவிலைத்தசிமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னரிவைத்தசிமாடு வனமேகுடியிருப்பு
சுபரோமரிஷிவனத்தில் துரிதமுடனவந்தார்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
எழுடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவர்இருக்கும்வேளையிலே
நெஞ்சில்ரோமமாமுனியை நினைந்தார்தருமராஜர்

ஐவரிடத்துக்கு ரோமரிஷிவர தருமர் தனதுதன்
பத்தை அவரிடத்தில்சொல்ல அவர் அதற்கு
வழிமானஞ்சொல்லுகிறது.



ஆசனம்போட்டு அடிபணிந்தார்தருமராஜர்
எந்தவூர்எந்த நாடு எங்கிருந்துஇங்குவந்தீர்
ஊரேதுபேரேது உத்தமனேசொல்லுமென்றார்
வந்தவயணமதை வகையாகச்சொல்லுமென்றார்
அப்போதருமலிங்கம் ஆண்டவருக்கேதுரைப்பார்
குருகுலவம்மிசத்தில் குந்திமைந்தரைந்துபேர்கள்
தருமனானான்வீமனவன் தம்பிதனஞ்சயனும
நகுலசகாதேவ ராஜாக்களைவரையா
தருமாபுரமென்னும் தாரணியையாண்டிருந்தோம்
பங்குப்பகையாளி பாவிநாள்தாயாதி
சென்மப்பகையாளி சேனநாள்தாயாதி
பெரியதந்தைபிள்ளை பேரானதுரியோதிரன்
ஐவரைக்கொல்லவென்று ஆலோசனைதேடி
விருந்துண்ணவாருமென்று விருந்தோலைதானனுப்ப
பெய்யானஓலையென்று விரைவாகப்போனோமையா

வாரவழிகளிலே வைத்தானே தண்ணீர்பந்தல்
வசநாபித் தண்ணீர்பந்தல் வைத்தானேபாவியவன்
கொல்லநினைத்தானே கொப்பெனவேயெங்களைத்தான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனையும் செய்தான்பெரும்பாவி
வருகிறவழியிலே வசிகளை நாட்டினான்
உருக்கூசிசெப்பூசி ஒருகோடி நாட்டினான்
எழுகூசியனேகமொடு இரும்பூசிதான்புதைத்தான்
கோடிமுள்ளுகத்திகளுங் குறுக்கேபுதைத்துவைத்தான்
மாண்டுமடிவாரென்று வசிகளை நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னையொருயோசனை செய்தான்பெரும்பாவி
பொய்க்குழியைவெட்டியே போட்டுவைத்தார்சிம்மாசன
ம், ஆழக்குழியிலே யாட்களையுள் நிறுத்தி
ஆயுதந்தானுடனே ஆள்நிறுத்திவைத்தானே
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
எண்ணெயிட்டுக்கொள்ளுமென்று எங்களுக்குச்சொல்லி
யவன், ஏழுலட்சம்மல்லர்களை எங்களிடந்தானனுப்பி
எண்ணெயிடச்சே என்னுயிரைவாங்குமென்றான்
அதற்குமபிழைத்தோமே யாண்டவனார்புண்ணியத்தால்
பின்னையொருயோசனை செய்தான்பெரும்பாவி
அரப்புகிண்ணங்கைகொடுத்து அபிஷேகமாடுமென்றான்
நீரில்வசிநாட்டி வைத்தானே நிர்மூடன்
பாரவசிகளை பர்வதம்போல்நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
உண்ணுகிறபாத்திரத்திலே ஒருக்கால்பாருநஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைகாரன் நஞ்சையிட்டானே
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி

சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
நடுபெறித்து ராச்சியந்தனைக்கொள்ளை கொண்டான்
சீமைத்துரைத்தனமுந் தேசத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையுங்கெலித்து ஆஸ்தானமுங்கெலித்து
காற்றுநுழையாத கல்லறைக்கிடங்கில்வைத்தான்
ஐவருடதேவியரை அம்பலத்திற்கொண்டுவந்து
தமையனுடபெண்சாதி தாயென்றெண்ணாமல்
மூலையிலிருந்தபெண்ணை முந்தத்திலிழுத்துவந்து
அம்பலமேற்றியவன் அவமானத்தாழ்வுபண்ணான்
வாடியென்றும்போடியென்றும் வம்புசிலபேசினான்
அரசர்சபைநடுவே அம்பலத்துரைகள்முன்னே
சொல்லாதசொல்லியே துகிலுரிந்தானே
பாரவனவாசம் பரதேசம்போனபின்பு
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்தபின்பு
அஞ்ஞாதவாசமல்லோ ஆரணியமொருவருஷம்
வேஷம்விட்டுவேஷமாறி வீற்றிருங்களென்றுசொன்
னான், பதிமூன்றுவருஷஞ்சென்று பட்டணத்தில்வந்தா
க்கால், பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்றான்
ஆணையாலாண்டவரே ஆரணியம்வந்துவிட்டோம்
வருஷமொன்பதுபிறக்க வந்தோமிவ்வனந்தனிலே
உங்கள்வனந்தனிலே ஒருவருஷமவனவாசம்
உம்மைவருந்தினேன் உண்மையுள்ளரிஷியாரே
இந்தவனத்திலே இருக்கச்செலவருளும்
என்றல்லோதருமரவர் இறங்கயேதெண்டனிட்டார்
தவத்திற்பெரியவர்காண சனயாசியானவரும்
உற்றுற்றுக்கேட்டாரே உரோமரிஷியாரும
ஆயாசப்பட்டுமவர் அறவேமனஞ்சலித்து
இத்தனைவஞ்சனைகள் இட்டுச்செய்தபாவியவன்
கொல்லநினைத்தானே கொடுப்பாவிதுரியோதனன்
நாடுகொடுப்பதில்லை ராச்சியந்தருவதில்லை
சிறைகொடுப்பதில்லை சிங்காதனந்தருவதில்லை
ஐவர்தனிமேல்மெய்யாருவனை ஆனைபதியே பாணிராஜன்

ஆதிசிவன்கையில் அஸ்திரப்பேறுபெற்றால்
மாத்தானைக்கொன்றிடலாம வையகத்தை ஆண்டிடலாம்
அல்லாதேயாமானால் அரசுனக்குக்கிட்டாது
என்றதுசொல்லுகையில் ஏதுசொல்வார் தருமராயர்
ஐவரிலேயொருவர் அவ்விதியை அடையவென்றால்
ஆயாசொல்லல்லாது ஆகாதொருக்காலும்
மாயன்சொல்லல்லாது மற்றொன்றுமாகாது
அவ்வார்த்தைகேட்டு அரியரிஷியேதுசொல்வார்
மாயன்பெருமானை வரவழையுமிங்கேயென்றார்

தருமர் எம்பெருமானை நினைத்து தோத்திரம்
பண்ணுகிறது.

---

சாயாப்புமன்னவனார் தருமரவரேதுசொல்வார்
அடியனந்தமாயவரே ஆண்டவரேவாருமென்றார்
ஏழுலகையாண்டவரே எம்பெருமாள்வாருமென்றார்
மச்சவடிவுகொண்டு மறுகடலிற்பள்ளிகொண்டாய்
ஆலிலையிற்பள்ளிகொண்ட ஆண்டவரேவாருமென்றார்
தருமர்வருந்துகையில் சாமியவரறிந்து

தருமர் தோத்திரம்பண்ணினதை பெருமாளறிந்து
தருமரிடம்வருதல்.

---

ஏழுலகையாண்டவனார் எம்பெருமாள்வாராராம்
வட்டமாங்கருடனேறி மாயவனார்வநதுவிட்டார்
ஆயரைக்காணுகையில் ஐவருந்தாமெழுந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
தேடித்துமபையலரெடுத்து சிங்காதனம்போட்டார்கள்
சிங்காதனத்தின்மேல ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
என்னையழைததது ஏதுகருமமென்றார்
மனதிலிருக்கின்ற யர்மமுறையுமென்றார்
சாயாப்புமன்னவனா தருமரவரேதுசொல்வார்

மற்றொன் றுமில்லையையா மாயவரே நீர்கேளும்
இந்தவனத் திலே யிருக்கிறரோ பரிஷி
மாமுனியைத்தெரிசித்து வணங்கிபடிபணிந்தோம
ஆமென்றெனைக்கேட்டார் அரிதான மாமுனியும்
வந்தகருமங்களை வார்த்தையெல்லாம் நானுரைத்தேன்
திரியோதிரன்செய்த சேதியெல்லாம் நானுரைத்தேன்
அத்தனையுங்கேட்டு ஆயாசப்பட்டவர்காண்
திரியோதிரன் றன்னைச் செயிக்கவேவே ணுமென்று
ஐவரிலேயொருவனையும் அரன்பதிபோகவென்றார்
பஞ்சவரிலொருவனையும பரமபதிபோங்களென்றார்
ஆதிசிவன்கையிலே அஸ்திரம பெற்றுவந்தால்
மாற்றானைவென் றிடலாம் வையகத்தையாண்டிடலாம்
போங்களென வுரைத்தார் புனிதமகாமுனியும்
ஆகையாலும்மை அழையுமென்றார நதரிஷி
மயங்குகின் றவேளையிலே வந்தீரே மாயவரே
இனிநடக்குங்காரியங்கள் எம்பெருமாள்சொல்லுமென
ஆயனபெருமாளும் அவருமங்கேதுசொல்வார்
வாரும்பரியவரே வணம்வாழ்தபோதனரே
ஐவருடவார்த்தை அதிகாரமெந்தனுக்கேன்
பஞ்சவர்கள் தங்களுக்குப் பாட்டனிருக்கின்றார்காண்
அவரையுமிங்கே அழைத்தாற்றெரியுமென்றார்
வேதவியாசரை வேண்டியழையுமென்றார்

ஐவரும் வியாசபகவானை நினைத்துவணங்க
வியாசர் வருதல்.

---

ஐவர்பஞ்சபாண்டவர்கள் அங்கெணவேதான்வணங்கி
வேண்டிநமஸ்கரித்து வியாசரைக்கைதொழுது
வாருமென் றுதானினைக்க வந்தாவியாசரிஷி
சடையுஞ்சடையழகும் தம்பிரான்போலேவாரார்
ஐவர்க்குமந்த அடவியில்வந்தாரே
ஏழுலகையாண்டவனுர் எதிர்கொண்டார்வியாசருக்கு

ஐவரெழுந்திருந்து அடிபணிந்தார்மிருவருக்கும்
ஆயருமவியாசருமே ஆலிங்கனம்பண்ணிக்கொண்டார்
ஆசனத்துமேலாக அவரவருமவிற்றிருந்தார்
வேதவியாசருமே வேந்தரைப்பார்த்துரைப்பார்
என்னகருமமாக என்னையழைத்தீர்கள்
மனதிலிருக்கின்ற மருமத்தைசொல்லுமென்றார்
மாயன்பெருமாளுட வார்த்தையங்கேதுசொல்வார்
பரமன்பதமேநாக்கி பாரதஞ்செய்யவென்று
பாசுபதமபேருபெற்று பாரதத்தைவெல்லவென்று
ஆரைநாம்போகச்சொல்வோம் ஆன்பாதமகானுதற்கு
தருமனைரபபோகவிட்டால சாமிபாதந்தானறியார
வெற்றிமதயானை வீமனலாகாது
நகுலசகாதேவ ராஜர்லாகாது
அருச்சுனனைரப்போகவிட்டால் அவனுரைக்காணவல்லவ
ன், பரமசிவனருகில் பாசுபதம்பேறுபெற்று
வேணவரம்வாங்கி விஜயன்வரவல்லவர்காண்
என்றுமவர்யோசனையாய் எழில்விஜயனைப்பார்த்து
பார்த்திபாயர்ச்சுனரே பரமன்பதிநோக்கி
ஆதிசிவன்பதிக்கு அருச்சுனபோமரோ
கைலாசபதியிலே கர்த்தாவைநீகண்டு
அதிகவரம்பேறுபெற்று அர்ச்சுனரேவாருமென
காண்டீபருச்சுனரும் கடுங்காலேபேதுசொல்வார்
அடியேனையனுப்பிவைத்தால் அவசியம்போய்வாரேன்
அப்போபெருமாளும அருளாளரேதுசொல்வார்
கைலாசம்போனாலே கட்டழகாசொல்வேன்கேள்
ஏதும்வழிதனிலே இருப்பார்கள்வேனபெண்கள்
மின்னலரம்பையூர்வசியும் மேனகைதிலோத்தமையும்
அழகில்மிகுந்தபெண்கள் அனேகம்பேர்தானிருப்பார்
கண்டாலவிடுவதில்லை கடுகயேமோகங்கொள்வார்
பார்த்தாசைப்பட்டாலே பார்த்திபாவிடுவதில்லை
கண்மூன்றுடையவரைக் காணவர்தாகும்
அல்லதேயாமானல் அருச்சுனவுந்தனுக்கு

போறவழியிலே பெண்கள்தொடர்ந்தாலும்
தங்கைதமக்கையென்று தள்ளிவிட்டுப்போங்காணும்
பார்த்தாரைப்பட்டாகால் பரமசிவன்பாதம்
எத்தனைகாலம் பிருந்துதவம்பண்ணாலும்
பாரத்தவஞ்செய்தாலும் பரமசிவனைக்காட்சிதாரார்
பயபக்தியாயிருந்தால் பரமசிவன்வந்தருள்வார்
அந்திபகலும் அதிராத்திரிவேளையிலும்
நினைவுமறவாதே சிவனைநிலைநிறுத்தும்
மோனத்துடனறிவை மூட்டிதவஞ்செய்தாலே
சிவனுமனமகிழ்ந்து சேனைவரந்தருவார்
முப்பத்துமுக்கோடி முனிவரெல்லாக்கூத்தாட
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள்நடப்புரிய
பார்வதிசமேதராய் பரமசிவன்வந்திடுவார்
கோருவரங்களெல்லாங் கொடுப்பார்பரமசிவன்
அப்படிக்குப்போகவென்று லாகுயோவாள்விஜயா
மாயருரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
ஆதிசிவனைநான் ஆசைதழியறந்திருக்கேன்
நேசமாய்ப்பெண்களென்மேலாசைமிகக்கொண்டாலும்
வாரவழிமறைத்து வார்த்தைகள்பேசினாலும்
தாயென்பேனதங்கையென்பேன் சாமியே நீயுமென்பேன்
கத்தாவைக்கண்டுநான் கடுகிவரம்வாங்கிவாரேன்
போகசெல்வமும் போய்வாரேன்சாமியென்றான்
அதுவுமேயல்லாமல் ஆண்டவனேயெந்தனுக்கு
போறவழிதனிலே புதுமைநடந்தாலும்
சிவனார்பதியிலே செய்யுந்தவமழிக்க
மழுவேந்துஞ்சிவனாரும் வஞ்சனைகள்செய்தாலும்
எதுவினைவந்தாலும் எந்தனுக்குத்துணைவாரும்
மகாதேவரைக்கண்டு வாங்கிவாரேன்வரங்களென்றான்
அப்போதுமாயவரும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
போறவழியிலே பொற்கொடியாளொருகன்னி
ஆதிசிவனைநோக்கி அருந்தவஞ்செய்பவள்காண்
அப்பலமானைப்போலே அழகிலமிகுந்தவள்காண்

அர்ச்சுனரேவுனையணைய அதிகவரம்பெற்றவள்காண்
உன்னைக்கலியாணம்பண்ண உகந்துயிருக்கிறாள்காண்
அவள்-வந்துவழிமரிப்பாள் வாள்விஜயாமன்னவரே
மாதரைக்கண்டுநீ வார்த்தையொன்றுஞ்சொல்லாதே
தாயென்றுநதங்கையென்றுய் தார்வேந்தாசொல்லாதே
வரும்போதுபெண்ணேயுனை மாலையிட்டுக்கொள்வேனென்று
காயாம்புமேனியனே கண்டங்கருப்பழகா [ன்று
தக்கதுசொல்லிப்போம் சாமியுடபதிக்கு
அதிகவரம்பேறுபெற்று அருச்சுனரேவரும்போது
ஏலகன்னிமாதரசை இளங்கொடியைமாலையிட்டு
வரும்போதுமாலையிட்டு வந்துவிடுமர்ச்சுனரே
மற்றொருவினைவந்தால் வந்துநான்காத்திடுவேன்
போய்வாருமென்றுசொல்லி பெருமான்செலவுதந்தார்

அருச்சுனன் சிவனைகாணப்போவதற்கு சோடித்தல்.

---

சூலபாணிரூபப்போற் சோடித்தானர்ச்சுனனும்
மந்தெந்தமுலஸ்திப்பு இளவிஜயன் தான்தரிப்பான்
ஐந்துசடைகொஞ்ச அழகுசடையார்புரள
ஐந்துசடையங்கே குலுங்க அருச்சுனற்கு
உள்ளமெல்லாம்லிங்கம் உடம்பெல்லாம்வெண்ணீறு
ஆவியெல்லாம்லிங்கம் அங்கமெல்லாம்வெண்ணீறு
காவிகாசாம்பரமுங் கட்டினரைதனிலே
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கயிலாசமான்தோலும்
காதிலேகுண்டலமுங் கையிற்கமண்டலமும்
ஏகவேஷ்டிதானணிந்தான் இயலானயர்ச்சுனனும்
பிரமமுடித்தாழ்வடங்கள் பெரியருத்திராட்சமணி
பஞ்சமணித்தாழ்வடமாம் பலவிதயாலைகளாம்
நாகமணிக்கங்கணமாம் லாடமிகச்சங்கிலியாம்
வேலாயுதம்சூலாயுதம் வெண்புலித்தோலாசனமாம்
அரைசுத்திகிண்கிணியாம் அழகுமயில்தாழ்வடமாம்

குருயோகபுத்தகமாம் சுரையோடுகமண்டலமாம்
கஞ்சாக்குடுக்கைகளாம் கௌதமர்சோளிகளாம்
சங்குஜெயகண்டிகை தானணிந்தாரருச்சுனனும்
கணுக்கால்சிலம்புகளாம் காலில்மிதியடியாம்
அஷ்டாபரணமெல்லாம் அருச்சுனன்தான்தரித்தார்
வியாசரும்மாயவரும் மிக்கவரமொன்றுதந்தார்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
ஐவருக்குளுந்தனுக்கு அனுக்கிரகந்தந்தோமென்றார்
போய்வாருமர்ச்சுனரே பொன்னுலகந்தான்தேடி

அருச்சுனன் ஈஸ்வரரைக்காணப்போகிறது.

---

அந்தசமயத்தில் அருச்சுனனுந்தானெழுந்து
எல்லாரையும்பணிந்து எழுந்தானருச்சுனனும்
போய்வாரேனென்றுசொல்லி போனானருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அங்குவியாசருமே
எல்லாரையும் வாழ்த்தி யிருவருமேபோய்நடந்தார்
மாயன்பெருமாளும் வாழ்கருடனமேலேறி
ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
வில்வேந்தருச்சுனரும் விரைவாய்வனந்தாண்டி
காடுசெடிதாண்டி கடுகியேவாரானே
அரனையவனைக்காணவென்று அதிதுரிதமாகவாரான்
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாரானே

எம்பெருமாள் பெண்வேஷமாய் வருகிறது.

---

அருச்சுனன் நினைவறிய அரிராமரேதுசெய்வார்
மோககன்னிப்பெண்போல் முடிமன்னர்வடிவுகொண்டா
சின்னஞ்சிறியபெண்ணாய் ஸ்ரீராமர்வடிவுகொண்டார் [ர்
மின்னலொளிபோல மேகவண்ணர்வடிவெடுத்தார்
அல்லார்தலையிரும் ஐந்துமுழமாறுமுழம்
ஆரணங்குகூந்தலது அறுபத்துநானகுமுழம்
காசாம்பழத்திலும் கறுத்தகறுப்பழகும்

ஈச்சப்பழத்திலும் இரண்டு சரப்பழமும்
வாரிக்குழல்முடித்து மான்கவுரியட்சொருகி
கொண்டைக்குக்குப்பியிட்டு கொலுசுமுத்துத்தொங்கலிட்
டு, கம்மல்ஜிமிக்கிகளும் காதிலேயிட்டாளாம்
கழுத்திலணிந்தாளாம் கனகமணிக்காழ்வடமும்
நல்லதொருபொன்காரை நடுக்கழுத்திலேதரித்தாள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுராம்பொன்சரிகை
இரட்டைச்சாடுகளாம் இராஜலிங்கப்பொன்தாலி
மூத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
அரைக்கிசைந்தஒட்டியாணம் அடைபோற்றரித்தாளாம்
காலுக்குத்தண்டைகளாம் கணைக்கொலுசுகளாம்
காலாழிபீலிகளும் கல்லணையும்புல்லணையும்
அழகுபணிகளெல்லாம் அலங்காரம்பண்ணினர்
கதம்பமுஞ்சந்தனமுங் கஸ்தூரிமணங்கள்வர
அன்னம்போலேநடந்து ஆண்டவனார்வாரூரே
அருச்சுனன்போனதொரு அடவியிலேவந்துவிட்டார்
அருச்சுனரைத்தான்பார்த்து ஆண்டவரேதுசொல்வார்
ஐயாபெரியவரே அறிவுள்ளசங்கமரே
திரப்படித்தவரே தெளிவுள்ளசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
எங்கிருந்துபோறீர்காண் இயலானசங்கமரே
கோடிசரணமையா கும்பிட்டேன்சுவாமியென்றார்
உன்னழகும்பாவனையும் உலகத்தில்கண்டறியேன்
உம்மைக்கண்டபோதே உருகுதேதேகமெல்லாம்
காமவிகாரத்திற் களைதாங்கிப்போறேனையா
மோகவிகாரத்தால் மூர்ச்சைபட்டுப்போறேனையா
காமக்களையைத்தான் களைதீர்க்கலாகாதோ
மோகவிகாரமதை மூர்ச்சையைத்தீருமையா
மன்மதனெய்தகணை மார்புருகிப்போகுதையா
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதையோ [தோ
அரைநாழியென்னுடனே அணைந்திருந்துபோகொணு
ஒருநாழியென்னுடனே உளமகிழ்ந்துபோகொணுதோ

மார்பைப்பார்தோளேப்பார் வண்ணஸ்தனத்தைப்பார்
என்னழகுப்பாவனையும் ஏறெடுத்துப்பாருமையா
என்னைப்போலபெண்கள் எங்கேகிடைப்பார்கள்
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கலியுகத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைத்து மகாவிடாய்தீருமையா
தோளோடேதோளணைந்து சுகத்தைகொள்ளத்தாருமை
யா, பஞ்சணைமெத்தையிலே கொஞ்சிவிளையாடுமையா
குங்குமமெத்தையிலே கூடிவிளையாடுமையா
வாருமையாசங்கமரே என்றுவழிமறித்தாள்

அருச்சுனன் மோகினியைப்பார்த்துசொல்லுகிறது.

---

ஏறெடுத்துப்பார்த்தானே எழிலாமருச்சுனனும்
என்னதுமென்னுகிறான் இளவிஜயனப்போது
மாயவனுசொன்னதொருவார்த்தையெல்லாம்மெய்யாச்சு
என்றல்லோவான்விஜயன் எதுரைப்பானகன்னியற்கு
ஆதிகைலாசம அரனைபதியேபோரேனம்மா
கத்தாவைக்காணவென அகைலாசம்போரேனம்மா
வம்புகளைச்சொல்லாதே வழிதனைமறிக்காதே
பெற்றுவளர்த்தவொரு பேர்பெரியதாயலவோ
கூடப்பிறந்தவள்நீ கூட்டுப்பாலுண்டவள்காண்
தங்கைதமக்கையுநீ தாயாருநீயலவோ
தூரநில்லுமாச்சியரே தோதகங்கள்பண்ணாதே
இடையநில்லுமாச்சியரே என்னருகேவாராதே
என்றுநடந்தானே ஏறெடுத்துப்பாராமல்
மற்றுமந்தக்கன்னியரும் வார்த்தைகளேதுசொல்வாள்
சேரவென்றுவந்தேனே செல்லுமென்றுசொல்லலாமோ
பெண்சாதியென்றுவந்தால் பெற்றதாயென்னலாமோ
ஆத்தாளென்றெண்ணலாமோ அடுத்தமுறைவந்தாலே
தாயனுறுற்றுறைபோமோ தனிமுறைவந்தாக்கால்
ஆண்டிக்குமுறையுமில்லே அரியாளுக்குரையுமில்லே

எருதுக்குப்பேச்சுமில்லே இடையனுக்குமுறையுமில்லே
அரைநாழிபோகம் அயர்ந்திருந்தால்போதுமையா
மார்போடேமாபணைந்து மருவிமுத்தநதாருமென்ருள்
இன்னப்பழமிருக்க சேனேதூரம்போவானேன்
கானலிலும்வெயில்களிலும் காட்டுவழிபோவானேன்
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கத்தாதியுண்டு
சோழிசதுரங்கம் சொக்கட்டானுடலாம்வா
இன்னநல்லபாக்குமுண்டு செலவழிக்கரொக்கமுண்டு
வாருமையாசங்கமரே மனைக்குநாம்போயிருப்போம
தானுகவந்தபெண்ணே தள்ளிவிட்டுப்போகலாமோ
போனுற்பலனுமில்லே பித்தனேக்காணரிது
விளேயாடிப்போனுலே வித்தகரைக்கண்டிடலாம்
தனமிரண்டைக்காட்டியே தான்மறித்தாள்மோககன்னி
இவளுடையவார்த்தைகளே இளவிஜயன்தான்கேட்டு
கோபம்வருகுது கொல்லமனந்துணிந்தான்
வில்லெடுத்துக்கைபிடித்து வில்நாரிபூட்டிவிட்டு
அம்புருத்தூணியிலே அலம்பைதானெடுத்து
கொல்லநினேத்தானே கோதைமறைநதாளே

அருச்சுனன் பாணமெடுக்க பெண்மறைந்து
பெருமாள் வருதல்.

---

கோபாலகிருஷ்ணரவர் கொப்பெனவேமாயவனுர்
கண்டானேவாள்விஜயன் கத்தனுடமாயையென்று
இளவிஜயன் அருச்சுனனு மினியவனம்போகையிலே
மாயனபெருமாளும் வாராரேயநதவழி
வட்டமாங்கருடனேறி வாராரேயந்தவழி
கண்டானே அருச்சுனனும்கடுகியவன்தெண்டனிட்டான்
மாயன்பெருமாளும வார்த்தையங்கேதுசொல்வார்
இன்னேரமெங்கிருந்தீர் இயலானவாள்விஜயா
காளேயந்த அருச்சுனனும் கடுகியேவதுசொல்வான்
மாயவரேசொன்னது நீர் வனத்திலேமெய்யாச்சு

ஆரோஒருதெய்வகன்னி அனேகநேரமென்னமறித்தாள்
வந்துவழிமறித்து வார்த்தைகளாடிறாளே
சொல்லாதுஞ்சொல்லியே தோதங்கள்பண்ணுறாளே
என்றுசொல்லி அருச்சுனனும் ஏறெடுத்துப்பார்த்தானே
கன்னிஇனமையுமே கழுத்திலேகரிமணியும்
கண்டானேவாள்விஜயன் கடுகிநகைத்தானே
அனைத்துங்கொலைத்திரே ஆயன்பெருமானே
மைமையைக்கொலைக்க மறந்திரோமாயவரே
மணிமையைவிழ்க்க மறந்திரோமாயவரே
பொட்டைக்கொலைக்க மறந்திரோபுண்ணியரே
ஆபரணந்தான்கழற்ற மறநதிரோ அச்சுதரே
என்னகோலம்வநதாலும் ஏற்குமையாவுந்தனுக்கு
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார
ஆயன்பெருமாளும் அங்கெனவேபதுசொல்வார்
மைத்துனுஉந்தனுட மனைவனுமையென்னசொல்வேன்
அருச்சுனுஉந்தனுட ஆண்மையுமென்னசொல்வேன்
வாள்விஜயாஉந்தனுட மனதரியவந்தேன்காண்
கத்தாவைக்காணவல்லாய் கடிவரம்வாங்கவல்லாய்
பரமனைக்காணவல்லாய் பாசுபதம்வாங்கவல்லாய்
ஈஸ்பரனைக்காணவல்லாய் இனியவரம்வாங்கவல்லாய்
போய்வாருமென்றுசொல்லி பெருமாளனுப்பினுர்
ஆறுலமுருமன்னன் அருச்சுனராசதுரை
விடைபெற்றுக்கொண்டானே வேந்தனருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அரிராமரேதுசெய்தார்
வட்டமாங்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்தநெதொரு மூங்கில்வனந்தாண்டி
இல்லென்றுபூத்தநெதொரு செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போய்ச்சேர்ந்தார்

ஒன்பதாவது ரோமரிஷிவனம்

முற்றிற்று.

## ய-வது, பேரண்டவனம்.



பத்தாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்கலைகாலகத்தில்
கோலிவைத்தசிமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்விவைத்தசிமாடு வனவாசம்போருர்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோருர்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகுளைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
பேரண்டவனத்திலேதான் பிரியமாய்ப்பஞ்சவர்கள்
வந்தார்குடித்தனமாய் வனத்திலேவாசம்பண்ண
ஐந்தடுக்குப்பர்னசாலை அழகாகஉண்டுபண்ணா
எழடுக்குப்பர்னசாலை எழிலாகவுண்டுபண்ணா
அந்தவனத்திலே அவர்குடியிருந்தார்
இப்படியாக இவர்இருக்கும்வேளையிலே
பூந்தாதனைத்தேடி போரானேவாள்விஜயன்
அரகராவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
ஓம்சிவாவென்றுசொல்லி ஒலித்தானேசங்குதனை
ஒருவன் அரனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகஞ்சிவனேயென்னும்
இந்தவனத்திலே இருக்கிறபேரண்டன
அனேகநாளாயபோயிருந்தானுகாரந்தேடிவர

பேரண்டச்சி அருச்சனன்மேல் மோகித்தல்.



பேரண்டராட்சதன்றன் பெண்சாதியானவளும
தன்னந்தனியவளாய் தானிருந்தாளமண்டபத்தில்
அரகராவென்றசத்தம ஆரணக்குத்தான்கேட்டு
கொத்தளம்போல்மூக்கழகும்மத்தளம்போல்புட்டங்களு
உலமுஞ்சிதுராங்குதலை ஒன்றுமுதுகழகாம் [ம
செம்பட்டமயிரழகாம் சிங்காரப்பல்லழகாம



அருச்சுனன் மீதுர் காதல்கொண்ட அரக்கியின் கணவனைக்கொன்
று தெய்வப்பெண்கள் வேண்டுகோளால் மீண்டும் அவனை எழுப்பல்.

பனைமரம்போற்பல்லழகாம்பருவதம்போற்கண்ணழகாம்
கழுத்தைச்சுத்திகண்டமாலை இப்பைசுத்தி அரைக்கடுவ
ன், இடையைச்சுத்திஒட்டிபுள் தோளைசுத்திபெருஞ்சிர
ங்கு, நின்றாளையாமாகில் நிலத்தில்விழும இரண்டுதனம்
இன்னமுஞ்சொல்லுகிறேன் இரண்டுதனத்தழகை
கப்பலின்மேல்வாரதொரு கொப்பரைத்தேங்காய்போல்
தோணிமேல்வாரதொரு சொரக்காய்போல்தானிருக்கும்
பல்லிலேபடிந்திருக்கும் பாசிபடர்தாமரைப்போல்
சீழுஞ்செலநீரும் தேகமெல்லாம்நாற்றமவரும்
காயமதிற்படிந்தழுக்கு கற்றாழைநாற்றம்வரும்
அருகேவந்துநின்றாலே அசங்கிகநாற்றம்வரும்
மரவுரியைத்தான் உடுத்தி வாராளேபேரண்டச்சி
ஆண்டிபெரியவர்தான் அருகில்வந்தாள்ராட்சசியும்
பண்டாரம்பெரியவனைப் பார்த்தாசைப்பட்டாளாம்
வாயைத்திறந்தவள் வார்த்தைகளைச்சொல்வாள்
நில்லுமையாசங்கமரே நெடுந்தூரம்போகாதே
உன்றனாசைப்பட்டதல்லால் உலகில்வேறாசையில்லை
மார்பைப்பார்தோளைப்பார் மருவிவிளையாடவேபார்
அரைநாழியென்னுடனே அமர்ந்திருந்துபோங்காணு
ம், வருவீர்வருவீரென்று வழிபார்த்துக்காத்திருந்தேன்
மன்மதபாணமது மார்புருகிப்போகுதையா
மோகவிகாரமதை மூர்ச்சையைத்திருமையா
என்னைப்போல்பெண்ணுமக்கு எங்கேகிடைப்பார்கள்
தேடிப்புறப்பட்டாலுந் தேசத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைந்து மருவிவிடாய்தீருமையா
தோளோடேதோளணைந்து சுகங்கள்தெளியுமிப்போ
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சியிருப்போமென்றாள்
ஏறெடுத்துப்பாரானே என்னென்றுகேளானே
ஆகரா ஆரனேயென்று ஆண்டியுநதானடநதான்
காமவிகாரத்துடனே கடிகியந்தராட்சசியும்
பேரண்டராட்சசியும் பின்னேதுவார்த்தைசொல்வாள்
கண்டாசைபட்டுவந்தேன் கண்ணெடுத்துப்பார்க்கவில்லை

என்னென்றுகேட்கவில்லை ஏறமுகம் பார்க்கவில்லை
எனை-பாராமல்போனீரே பாதகனுசையாலே

பேரண்டச்சி அருச்சுனனுடன் சபதங்கூறுதல்.

---

என்புருஷன்வந்தபின்பு இட்டுன்னைவரவழைத்து
என்னெண்ணப்பிரகாரம் இருநதுமருவிடுவேன்
என்றுசபதமிட்டு இயலானராட்சசியும்
காமவிகாரக் களையுடன்தானடந்தாள்
மோகவிகார மூர்ச்சையுடன்தான்போனுள்
வளையலைத்தானுடைத்து மார்பெல்லாந்தான்கிழித்தாள்
முகத்திலறைந்துகொண்டு மோதிப்புலம்புகிறுள்

பேரண்டச்சி யழுதகுரல்கேட்டு பேரண்டன்வருதல்.

---

அழுதகுரல்சத்தம் அறிந்தானேபேரண்டனும்
ஏதுக்கழுகிறுள் என்னுடையதேவிபரும்
வயிறுபசியாகி வாய்விட்டழுதாளோ
என்று-ஐம்பதுயானை அவன்கையில்தானெடுத்து
சினந்துமறிந்தானே தேவியருகில்விழ
பின்னும்புலம்புகிறுள் பேரண்டராட்சசியும்
ஏதுக்கழுகிறுள் இளங்கொடியாளென்தேவி
இத்தனை நாளில்லமை லின்றுப்புலம்புவதேன்
அறிந்துவருவோமென்று ஆங்காரமுள்ளவனும்
ஏதுக்கழுகிறுய்நீ என்னுடையதேவியரே

பேரண்டச்சி தன்புருஷனுடன் தன்வரலாறுகூறிச்
சண்டைக்குப் போகச்சொல்ல பேரண்டன்
சண்டைக்குப் போகிறது.

---

பேரண்டராட்சசியாள் பிரியமுடனேதுசொல்வாள்
மாலையிட்ட நாள்முதலாய் மனதுகுறைவந்ததில்லை
நான்-பெண்பிறந்தபாவமது போதுமையாஎந்தனுக்கு
என்-பாவிதலையிலே பத்தெழுத்தைஎழுதிவிட்டான்

செல்வத்தலையிலே செப்போடெழுதினது
அல்லல்படவோ அமைத்துவிட்டார்பிர்மதேவர்
ஐயையோபெண்பிறப்பு ஆகாதுயென்னசெய்வேன்
நான்-புத்தியில்லாவாசியல்லோ போண்டராட்சசனே
வாரவழிதனிலே வைத்திர்சமுசாரம்
என்னைத்தனியேவிட்டு இனிப்போகஞாயமுண்டோ
உன்தேவியாயிருக்கதும் ஊருக்குப்பெண்டாவேனோ
சுந்தரப்பெண் தானல்லோ சொரூபமுடையவள்காண்
அழகிலமிருந்தவளை ஆரோவொருவனவன்
பத்தினியாளென்றலுமே பாராமலிங்கொருவன்
உத்தமியாளென்றுசொல்லி வுணராமலிங்கொருவன்
ஆண்டிபெரியவன்காண் அரண்மனையில்வந்தார்காண்
வந்தபெரியவரை வணங்கியேதெண்டனிட்டேன் [ருர்
தண்கஞ்சாக்குடுக்கைக்குத் தண்ணீர்கொண்டுவாருமென்
தண்ணீரும்தான்கொடுத்தேன் சரணங்கள்தான்செய்தே
ன், நெருப்பெடுத்துவாவென்றுர் நெருப்பைக்கொடுத்தே
னே, அள்ளியே நீறுதநதா ரணிந்துகொண்டேன்நெற்றி
யிலே, வாடிநீயோடிபென்றுன் வலதுதுடையேறுமென்
றுன், கையைப்பிடித்திழுத்துக் கடிகிமருவவென்றுன்
பொல்லாத்தனங்கள்செய்துபோய்நடந்தான்சங்கமனும்
அவனை-கைப்பிடியாகவே கட்டியேகொண்டுவாரும்
அல்லாதேயபோனல் அநீதமாய்மாண்டிடுவேன்
போண்டச்சியமுகையிலே போண்டன்தானெழுந்து
எழுந்தானேராட்சதனும் என்றுமில்லாக்கோபமுடன்
ஆலமரம்பிடுங்கி தோளிலேவைத்தவனும்
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேயோடிவந்தான்
நில்லு நில்லும்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
ஆரடாபண்டாரம அறிவுகெட்டசங்கமரே
என்னுடையபெண்சாதியை எந்தனிருகண்மணியை
அழகில்மிருந்தபெண்ணை ஆகடியஞ்செய்ததென்ன
வழியிலேவீடுகட்டி வனத்தில்குடியிருநதால்
பிச்சையெடுக்கிறவன் பெண்டோபிடிக்கிறவன்

பேரண்டனுக்கும் அருச்சுனனுக்கும் சண்டை.

---

அரைநாழிகைக்குள்ளேயிலே அவசியங்கொன்றிடுவேன்
இட்சணப்போதையிலே எமபுரஞ்சேர்த்திடுவேன்
என்றேவுருமினன் இயலானராட்சதனும் .
ஆனைவழருமல்லன் அருச்சுனனேதுசொல்வான்
வாடாநீராட்சதனே வார்த்தையொன்றுநீகேளாய்
ஆதிசிவன்பாதம் அரன்பாதங்களையென்று
பாரத்தபசுபண்ண பரமர்பதிபோகையிலே
வாரவழிதனிலே வழிமறித்தாளுலைதேவி
கண்டாசைப்பட்டேனென்று சடிகினையல் திருமென்றான்
பொல்லாதாள்சேர்ந்தலைந்து போகச்சொன்றானந்தே
வி, நான்-வாயைத்திறக்கவில்லைவன்னமுகம்பார்க்கவில்
என்னென்றுகேட்கவில்லை ஏறெடுத்துப்பார்க் வில்லை[லே
வீணைவார்த்தையிது மேல்போட்டுவாராதே
அனியாயசசண்டையிது அமாதுசெய்யாதே
என்னுடைதிராதாலே இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
பெண்சாதிவார்த்தையினல் பிராணனையழிக்காதே
மானவதுதருமமல்ல மன்னுநடவுமென்றான்
எத்தனைசொன்னாலும் இரங்காமல்ராட்சதனும்
எதிர்த்தானமர்ப்போரு இருண்டவனமந்டுங்க
கண்டானருச்சுனனுங் கண்கள்சிவப்பேற
கோபம்பெரிதாகி கோல்லமனந்துணிந்தான் .
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
காதுமட்டாய்நாணிழுத்துக் கைக்கணைவாங்கினன்
பேரண்டராட்சதன்றன் பிராணனைப்போக்கவென்று
அலகப்பைத்தானெடுத்து அஸ்திரக்கைப்பூட்டினன்
மந்த்ரவுபதேசஞ்செய்து மார்புரளவாங்கினன்
மேலிட்டுராட்சதன்மேல் விழுந்தது அஸ்திரந்தான்
பேரண்டன்தன்தலையைப் பரிவிட்டுத்தானறுத்தே

### அருச்சுனன்பாணத்தால் பேரண்டன் தலைவிழ பேரண்டச்சி புலம்பல்.

---

அறுந்ததலைமேலேவிழா தாகாசமாயெழும்ப
மற்றொருகணைதொடுத்தான் வாள்விஜயனர்ச்சுனனும்
அறுந்ததலையுமல்லோ அவன்தேவிவாசலிலே
கொண்டுபோய்போடுமென்றான் கொப்பெனவேவாள்விச
யன், தள்ளிப்போய்விட்டதுவேசண்டாளன்தன்தலையை
அவன்மாண்டபிற்பாடு அருச்சுனனுந்தானடந்தான்
அந்தச்சமயத்தில் அடைவானபேரண்டச்சி
தலையைப்பார்த்துபேரண்டச்சி தன்புருஷன் தலையென
வே, கண்ணீரைச்சோரவிட்டுக் கதறிப்புலம்புகிறாள்
விழுந்தாளெழுந்தாள் மண்மேலேபுரண்டழுதாள்
மாரடித்துத்தலையடித்து மண்தூற்றியேயழுதாள்
கோவென்றசத்தமுடன் குமிறிப்புலம்புகிறாள்
மலையேபருவதமே மண்மேலேசாய்ந்தீரோ
மேகமலையே நீ விண்ணுலகஞ்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியங்கள் நிண்ணயத்தைநானறியேன்
வச்சிரத்தூணே நீ மண்ணோடுறுந்தீரோ
கல்லான தூணைக் கறையானரித்ததுவோ
இரும்பான தூணே நீ இற்றுவிழுந்தாயோ
எங்கேயோவானம் இடித்ததுயென்றிருந்தேன்
தப்பாமல்வானம் தலையிலிடித்ததையோ
தெருவிலேகையையிட்டுத் தினகரனைசாட்சியென்றாள்
சந்தியிலேகையையிட்டுச் சந்திரனைசாட்சியென்றாள்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்களானதையோ
மலையேபருவதமே மாண்டுமடிந்தீரோ
செயமலையேபருவதமே செத்துமடிந்தீரோ
செத்துமடிந்தீரோ சிவலோகஞ்சேர்ந்தீரோ

மாண்டுமடிந்திரோ வைகுந்தஞ்சேர்ந்திரோ
நீமடியுங்காரியத்தின் நிண்ணயங்கள் தானறியேன்
சந்தனமிருபுஜத்தை சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுஜத்தை குளிரவெட்டிப்போட்டாரோ
கொண்டைபரிகொடுத்த கோழியைப்போலானேனே
செட்டைபரிகொடுத்த செம்பருந்துபோலானேன்
உன்னைப்பறிகொடுத்து ஊதாரிபோல னேன்
அடிவானத்திடிபோலே அழுதுபுலம்புகிருள்
பேரண்டராட்சசியாள் பிரண்டுபிரண்டழுதாள்

பேரண்டச்சி யழுகிறதுகேட்டு தெய்வகன்னிகள் வருதல்.

---

அந்தச்சமயத்திலே அழகானதெய்வகன்னி
எழுபேர்சத்தகன்னி இளங்கொடிமாதர்களும்
தீரதங்களாடவென்று தெய்வகன்னிவாரார்கள்
அழுத ரல்கேட்டு ஆயாசப்பட்டார்கள்
ஒருவற்கொருவர் ஒற்றுமையாய்ப்பேசுகிருர்
ஆரோதெரியாது அழுதுபுலம்புகிருள்
இத்தனைநாள்வரையில் இவ்வோசைகேட்டதில்லை
அழுதகுரல்கேட்டு அப்புறம்போகொணுது
அழுதவிடத்திலே யாவரும்போவோமென்று
புலம்புமிடத்திலே பொட்டெனவேவந்தார்கள்.
ஆரடியங்கையரே அழுதுபுலம்புவதேன்
பேரண்டராட்சசியும் பிரண்டழுதுசொல்லலுற்ருள்
ஆரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குரைக்கழுத்தியானேனே
மஞ்சளிழநதேன் மணமிழந்தேன்பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சே
எதென்று நானுரைப்பேன் என்னுடையயக்கமாரே
ஆரோவொருபண்டாரம ஆரன்பதிக்குப்போருன்கா ல்
வாடியென்றுப்போடியென்றும் வம்பாகப்பேசினனே
சொல்லாதுஞ்சொலலியே சேர்ந்தயணையவந்தான்

புருஷனுடனுரைத்தேன் போய்க்கேட்டார்சங்கமனை
என்-கணவனைக்கொன்றுவிட்டு கடிகியேபோனார்காண்
மங்கிலியப்பிட்சை வரங்கொடுத்துபோங்கவம்மா
என்றவுரைகேட்டு இயலானகன்னியர்கள்
ஆயாசப்பட்டுமெல்லோ அதிகமனஞ்சலித்து

தெய்வகன்னியர் அருச்சுனனைக்கண்டு இரக்கஞ்
சொல்லல்.

---

சங்கமரைத்தேடியே நடந்தார்கள்தையலர்கள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
நில்லும்நில்லும்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
போறவழிதனிலே பொல்லாங்குசெய்யலாமோ
சிவபூசைகள்பண்ணி சிவனைபதியேபோகலாமோ
ஆதிசிவன்வாழும் அரன்பதிக்குப்போனாலும்
கோரும்வார்த்தைக் கொடுப்பாரோபரமசிவன்
ஐயாசங்கமரே இப்படிக்குச்செய்யலாமோ
ஆகாதகாரியங்கள் அழிவுதேடிப்போகலாமோ
என்றுமறித்தார்கள் இளங்கொடிமார்கன்னியர்கள்
ஆனைவழுதுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
சிவனார்பதிக்குநான் தெரிசிக்கப்போறேனென்ன
அவள்-வந்துவழிமறித்தா வார்த்தைகள்பேசினளே
சொல்லாதசொல்லியே சேர்ந்துயணையுமென்றாள்
அவள்புருஷனைவந்தென்னை அநீதமாய்க்கொல்லவந்தா
ன், எத்தனைசொன்னாலும் இரங்காமற்கொல்லவந்தான்
ஆயுதத்தினாலே அறுத்தேனவன்றலையை
என்மேலேகுற்றமுண்டோ ஏனோதடுக்குகிறீர்
இருவர்விசேஷமெல்லா மெதிராகக்கேட்டிடுவோம்
வாருமையாவென்றுசொல்லி வரவழைத்தார்சங்கமரை
பெண்டாட்டியவள் பிரண்டுமழுமிடத்தே

அருச்சுனராஜாவை அழைத்துவந்துவிட்டார்கள்
தெய்வலோககன்னியர்கள்தேன்மொழிமாரேதுசொல்வா
ர், இருவருடவார்த்தைதனை யெல்லாமிவர்கேட்டு
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
பெண்ணின்பிழையைப் பொறுத்தருளும்புண்ணியனே
அடியார்கள்செய்தபிழை ஆண்டவரே நீர்பொறுதது
மங்கிலியப்பிட்சைதந்து மகதேவர்பதிபோனால்
ஆதிசிவனார் அதிகவரமருள்வார்
எங்களைப்பற்றியே இவனையெழுப்பிவிடும்
என்றுவணங்கியே இறங்கியேதெண்டனிட்டார்
அருச்சுனராஜாவும் அதிகமனமகிழ்ந்து

தெய்வகன்னியர் அருச்சுனனைக்கேட்க அருச்
சுனன் மகிழ்ந்து தேவேந்திரனுக்கு ஓலை
யெழுதி அனுப்புதல்.

---

சேமக்குருத்தோலை சிக்கெனவேதான்வாரி
வாரியவோலையிலே வக்கணைகள்வைத்தெழுதி
என்னவென்றுவோலை யெழுதுமருச்சுனனும்
அமராபதியாளும் அங்கபிரான்யென்தகப்பா
தெய்வலோகமாளும தேவேந்திரன்யென்தகப்பா
மந்தாரக்குந்திபெற்ற வாள்விஜயனர்ச்சுனனும்
ஆதிசிவன்பாதம அடியேனுங்காணவென்று
வாரவழிதனிலே வதைத்தெறிந்தேன்பேரண்டனை
அமாதுசெய்தான்காண அறுத்தேனவன்றலையை
பேரண்டன் தன்னுயிரை பிர்மலோகத்திருந்தாலும்
இங்கேயிருந்து எமலோகம்போனாலும்
அவனுடையதன்னுயிரை அனுப்பிவையும் என்தகப்பா
எந்தனைப்பற்றியே இட்சணமனுப்பிவையும்
அல்லாதேயாமானல் அமராபுரம்வருவேன்
தேவேந்திரன்பதியை சிதறவேகொள்ளைகொள்வேன்

ஆடுகொள்ளை மாடுகொள்ளை அழகானவீடுகொள்ளை [ன்
ஐயாவும்பட்டணத்தை யனைத்துமேகொள்ளைகொள்வே
என்றுயெழுதினான் இயலானவோலையிலே
ஓலைசுருள்மடித்து உகந்துசெந்திரிக்கையிட்டு
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
அந்தச்சுருளோலைதனை அம்புவாயில்தானெடுத்து
ஐந்துமணியசைக்கி அம்பே நீபாயுமென்று
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானஸ்திரத்தை
மாபுரளத்தானெடுத்து தோள்புரளவாங்கிவிட்டான்
வருகுதுமஸ்திரந்தான் வானுலகந்தானதேடி
தேவேந்திரனுடைய தேசுமணிக்கம்பத்திலே
வான்விஜயனஸ்திரத்தால் மணியசைந்காடிற்று
மணிக்கண்டருகேவந்து வாங்கினனஸ்திரத்தை

அருச்சுனன் ஓலையைத் தேவேந்திரன்பார்த்து எம
னிடத்திற்சென்று கெண்டபேரண்டன்
உயிரைவாங்கி அனுப்புதல்.

---

செந்திரிக்கையோலைச்சுருள் தேவேந்திரன்விரித்து
எழுதியவாசகத்தை இந்திரனும்தான்படித்தான
அதிலிருக்கும்லட்சணத்தை யாவுமறிந்துகொண்டேன்
இக்கணவேதானெழுந்து தேவேந்திரன்வருவான
எமபுரந்தேடி எமனருகிற்போய்ச்சேர்ந்தான்
கண்டானேயேமனும கடுகியெழுந்திருந்து
எதிர்கொண்டழைத்துமே இட்டுவந்தான்மாளிகையில்
ஏதுகருமமாய் இங்குவந்தீர்ராஜாவே
அத்திமரப்பூத்ததுபோல் யதிசயமாய்த்தோணுதுகாண்
என்றபொழுதேயவ ரேதுசொல்வாரிந்திரரும்
எல்லாருயிர்வாங்கும் எமதர்மா நீர்கேளும்
பொல்லாதபாவியவன் புகலும்பேரண்டனுயிர்
இங்குவந்ததுண்டானால் எந்தனுக்காய்தயவுபண்ணும்
என்றுவுபசாரனை இரக்கமாய்த்தானுரைத்தார்

செக்கிலேபோட்டு திருப்புகிறானந்நேரம்
எண்ணெயும் புண்ணாக்கா யேற்படுத்து போதையிலே
பேரண்டன் தலை னுயிரைப்பொட்டெனவே தான்கொடுத்தா
ர், மாபாதகனுயிரை மைச்சிமிளிலேயடக்கி
அப்புவாய்தனிலடக்கி அனுப்பினானிந்திரனும்
வாய்வேகமாகவே வந்ததுமர்ச்சுனர்முன்

அருச்சுனன் பேரண்டனுக்கு உயிரளித்தல்.

---

மைச்சிமிளைத்தான் திறந்து வல்லுயிரைமாற்றினான்
வெண்ணீறுதான்போட்டு வேறுபட்டதலையெடுத்து
அறுத்ததலைமுண்டமும் அணைத்துதண்ணீர்தெளித்தா
ன், தட்டியெழுப்பினான் தன்னுடையபொற்பிரம்பால்
தூங்கிவிழித்தவன்போல திடுக்கிட்டெழுந்திருந்தான்
ஆரடாபண்டாரம் அறிவுகெட்டசங்கமனே
என்றுயெழுந்தானே இயலானபேரண்டனும்
எழுபேர்கன்னியர்கள் இளங்கொடிமாரேதுசொல்வார்
ஆங்காரராட்சதனே ஐயரைச்சரணம்பண்ணும்
அபசாரமுன்யேலே அனந்தங்குற்றம்வந்திருக்க
உன்னுயிர்தான்கொடுத்த உம்பர்பிரானுக்குமடா
சாஷ்டாங்கமாகவே சரணம்பண்ணுமையருக்கு
என்றுசொன்னபோதையிலே இரங்கியேதெண்டனிட்டா
சரணஞ்சரணமென்று சரணமிட்டானபேரண்டனும் [ன்
இறந்துவிட்ட ஜீவனை எழுப்பிவிட்டீராண்டவனே
உமக்-கேதுதரப்போறேன இயலானசங்கமரே
ஆபத்துவேளையிலே அழைத்தால்வருகிறேன்
உந்தனுக்குவுதவியாக ஒத்தாசைபண்ணுகிறேன்
எனறுவுபசரித்தான் இயலானராட்சதனும்
அனைவரையுங்கையமர்த்தி அருச்சுனனும்போய்நடந்தா
ன், அரகரா அரனேயென்று அரனைமேலேதியானமானான்
சிவசிவாசிவனேயென்ன சிவன்மேலேதியானமானான்
ஒருவன் அரனேயென்ன உலகம் அரனேயென்னும்

ஒருவன்சிவனேயென்ருல் உலகஞ்சிவனேயென்னும்
அடித்தானேசெயகண்டிகை தொனித்தானேசங்குதனே
ஏலகன்னிதன்வனத்தில் எழில்விஜயன்போகலுற்ருன்

ஏலகன்னி அருச்சுனனைப்பார்த்து
அழைத்தல்.

---

அரகராவென்றசத்தம் அறிந்தாளேயேலகன்னி
ஆடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
வாரவரார்களும் மயிலனையேபாருமென்ருள்
திக்கெல்லவேதானெழுந்து தெருவீதிவந்தார்கள்
வருகிறசங்கமனை மாதர்கள்தானறிந்து
ஓட்டம்நடையமா யோடிவந்தார்தாதியர்கள்
என்தாயேயேலகன்னி எவரோதெரியாது
ஆதிசிவனைப்போலே அழகுபடைத்தவர்காண்
இருக்காலும்வந்ததில்லை உச்சிதமாய்வாரார்காண்
என்றசத்தந்தானைக்கேட்டு எழுந்தாளேயேலகன்னி
கண்ணடையசையவே தாழ்குழலாள்தானடந்தாள்
அருச்சுனனைக்கண்டு அதிகமயலானுள்
கண்டாசைப்பட்டாளே கட்டழகியேலகன்னி
வடிவழகும்வெட்பனையும் வாளவிஜயனசேபழகும்
உற்றுற்றுப்பார்த்துமவள் உள்ளமுருகுகிருள்
காமவிகாரத்தாலே கட்டழகியதுச்சொல்லுவாள்
ஐயாபெரியவரே அழிவைப்படைத்தவரே
திருப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
வருவீர்வருவீரென்று வழிபார்த்துநானிருந்தேன்
எப்போவருவீரென்று இந்தவனங்காத்திருந்தேன்
உன்னாசைப்பட்டிருந்தேன் உலகில்வேருசையில்லை
காமவிகாரத்தாலே களைபட்டுப்போறேனையா
மன்மதனெய்தகணை மார்புருகிப்போகுதையா

சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதையா
அதிகவிகாரங்கொண்டேன் ஐயாபெரியவரே
மார்பைப்பாரதோளைப்பார் வணணமுகம் நீர்பாரும்
என்னிலுமழகுடையாள் எங்குங்கிடையாது
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கருதினுற்கிட்டாது
மாரபோடுமார்பணைந்து மகாவிடாய்தீருமையா
தோளோடுதோளணைந்து சுகத்தைமெள்ளத்தெளியுமை
யா, கட்டிலுண்டு மெத்தையுண்டு கால்பிடிக்கத்தாதியுண்டு
பொன்னும்பொருளுமுண்டு பொக்கிஷங்கள்மெத்தவுண்
டு, தின்ன நல்லபாக்குமுண்டு செலவழிக்கரொக்கமுண்டு
ஆடவென்ருல்ஊசலுண்டு அமர்ந்திருக்கமேடையுண்டு
பத்தியுலாவுதற்குப் பர்னசாலைமெத்தவுண்டு
மருவிவிளையாடி மன்மதரேவீற்றிருப்போம
வாருமையாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டா
ள், ஏறெடுத்துப்பாரானும் இளவிஜயனர்ச்சுனனும்
ஏலகன்னிமாதுபவள் இளங்கொடியாளேதுசொல்வாள்
ஏன்காணுமர்ச்சுனரே யந்தணமுகம்பார்க்கொணுதோ
முத்தானவாய்திறந்து உத்தாரஞ்சொலலொணுதோ
வாயைத்திறந்தாலே வச்சிரமுதிர்ந்திடுமோ
வச்சிரமுதிர்ந்தாலே வாரியெடுக்கேனே
தாளைத்திறந்தாலே தங்கமுதிர்ந்திடுமோ
தங்கமுதிர்ந்தாலே தடவியெடுக்கேனே
எனனுடன்பேசினுல ஏதுகுறையுமுண்டோ
கல்லுங்கரையுமே கட்டைதுளிர்த்திடுமே
இரும்புகரையுமே இரங்கலையோயுன்மனது
மார்பைப்பார்தோளைப்பார் வண்ணமுகத்தைப்பார்
முகத்தோடேமுகமணைந்தால் மூர்சசைதெளிந்திருப்பே
ன், மார்போடேமார்பணைந்தால் மகாவிடாய்தீர்ந்திருப்
பேன், தோளோடேதோளணைந்துசுகங்களைத்தீருமையா
வாருமென்றுசொல்லி மறித்தாளேயேலகன்னி

வாயைத்திறவானும் வண்ணமுகப்பாரானும்
என்னவென்றுகேளானும் ஏறமுகம்பாரானும்
சிவனைமறவாமல் சிவன்மேலேதியானமானான்
அரனைமறவாமல் அரன்மேலேதியானமானான்

ஏலகன்னி அருச்சுனனைக் கோடுகிழித்து
ஆணையிட்டு நிறுத்தல்.

---

ஏலகன்னியாளு இளங்கொடியாள்கோபமானாள்
ஏழுகோடுகீழ்கிழித்து இங்கே நீர் நில்லுமென்றான்
உன்-தருவின்மேலாணைகாணுங்கோடுவிட்டுப்போகாதே
ஐவர்மேலாணைகண்டாய் அடிவிட்டுப்போகாதே
தம்பிதமையன்மார் தாய்மேலேஆணையிட்டாள்
ஆணையிட்டேலகன்னி அரண்மனைக்குப்போய்ச்சேர்ந்தாள்
மாளிகைவாசலுக்குள் மண்டபத்தில்வீற்றிருந்தாள்
அவன்-வருவதற்குள்ளாக வாள்விஜயனேதுசெய்தான்
என்னுறுமெய்யனரியே ஏதேதுதானினைப்பான்
ஆரைநினைந்தாலே அளவற்றசிந்தையிலே
எவரைநினைந்தாலே எண்ணமுற்றசிந்தையிலே
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகமெல்லாம் வேற்றுமுகமாகுதையா
எவரைநினைத்தாலே இந்தவேளைகாத்திடுவார்
ஆபத்தைக்காப்பதற்கு ஆராலேயாகுமென்று

கோட்டில் நிற்கும் அருச்சுனன் காளியைத்
தோத்திரம் பண்ணல்.

---

அந்தவனக்கன்னியரை அருச்சுனன்தானினைந்தான்
சூலிகபாலியம்மா சுந்தரிதுர்க்கையரே
சண்டிப்பிடாரியம்மா சங்கரியேயேகவல்லி
மண்ணுப்பிடாரியம்மா வழக்காடுந்துர்க்கையரே
ஆபத்துவேளையிலே ஆதரிக்கவேணுமம்மா

அருச்சுனன் காளியைநினைக்க காளிவந்து
வரலாறு வினவல்.

---

என்று நினைத்தானே இயலானகாளியரை
வாள்விஜயன்தான்வருந்த மாகாளிதான்வருவாள்
டேகையொருகையில் டமாரமொருகையில்
வாளுமொருகையில் வளைதடியொருகையில்
அம்புவில்லுங்கைப்பிடித்து ஆயுதமாகவந்தாள்
ஆராடாதம்பிநீ அடவியிலேயெலெ நினைந்தாய்
ஊரேதுபேரேது உன்னுடையவண்மையென்ன
என்றவள்கேட்கையிலே யிறங்கிசரணமிட்டான்
ஆரென்றுகேட்டாயே ஆச்சியரேசொல்கிறேன்கேள்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களைவருண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவரில அருச்சுனராஜனென்பேர்
மாயவனார்மைத்துனன் வாள்விஜயனென்பேரும்
ஆதிகைலாசம் அரன்பதியேபோறேனம்மா
பரமனைநோக்கியே பாரதவஞ்செய்யநான்
போறவழிதனிலே பொற்கொடியாளேலகன்னி
கலியாணயபண்ணென்று கடிகியென்னைமறித்தாள்
கோடுகிழித்துயென்னைக் குறுக்கேதடுத்தாளே [டான்
ஆணையிட்டுயென்னைமறித்து அரண்மனைக்குப் போய்விட்
மறுபடியும்வருவேனென்று மாளிகைக்குப்போய்விட்டா
ள், ஆகையாலெனதாயே அபயமிட்டுவுனையழைத்தேன்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாள்ஈஸ்பரியும

காளியம்மன் அருச்சுனனை ஆணைவிடுவித்
தனுப்புதல்.

---

அஞ்சாதேயென்மகனே ஆணையிட்டேன்தோஷமில்லை
மூக்காலுநதோஷமில்லை முத்திரையைநீகழற்றி
நீதரித்தமுத்திரையை நிலந்தனிலேவைத்துவிடும்

இந்தவனங்கடந்து என்னை நினைத்தாக்கால்
உங்களுடமுத்திரையை உனக்கே தயவுசெய்வேன்[ஜயன்
என்றுசொல்லக்காளியம்மாள் ஏய்ந்துவிட்டான்வாள்வி
தரித்திருந்தமுத்திரையைத் தாயாரின்கைக்கொடுத்தான்

காளி அருச்சுனன்போல் நிற்பதை ஏலகன்னி
கண்டு தான் அலங்காரம் பண்ணிக்
கொள்ளல்.

---

வான்விஜயன்போனபின்பு மாகாளியென்னசெய்தாள்
அருச்சுனனைப்போலாக அங்கேவடிவுகொண்டாள்
காவிகாசாம்பரமும் கட்டியரைதனிலே
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
வான்விஜயன்போலே மறைப்பிலே நின்றாளாம்
இப்படிக்குக்காளி யிருக்கிறவேளையிலே
ஏலகன்னிமாது இளங்கொடியாளேதுசெய்தாள்
மஞ்சள்குளித்தாள் மையெழுதிப்பொட்டுமிட்டாள்
வாரிமுடித்தாளாம் வான்சவுரியுட்சொருகி
கொண்டைக்கழகாக கொண்டையயிர்தான்முடித்தாள்
சந்திரபிறைசூரியபிறை தலையிலணிந்தாளாம்
ஆண்மயிலும்பெண்மயிலும் அழகாகத்தான்முடித்தாள்
முத்தாலேசுட்டியும் முன்னாலேதொங்கலிட்டாள்
காதுக்குப்பொன்னோலை கைக்குவளையலிட்டாள்
செண்பகப்பூநாசியிலே சேர்த்தணிந்தாள்மூக்குத்தி
தோள்வந்திகைவந்தி தொடுத்தாள்ரவிக்கைதனை
கண்டசரமாம் கல்பதக்கமோதிரமாம்
கொத்துச்சரப்பளியாம் கொசதுமுத்துத்தாழ்வடமாம்
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
சன்னல்பின்னல்தாழ்வடமாம் தாயித்துபேரொளியாம்
கடகஞ்சரிபவளங் கைநிறையப்பொன்வளையல்
தண்டைகொலுசுடனே சலங்கையும்பாடகமும்
காலாழிபீலி கல்லணையாம் புல்லணையாம்

அரைக்கிசைந்தஒட்டியாணம் அலங்காரப்பண்ணுளாம்
பொனனிழைத்தபட்டாடை பூவாடைதான்தரித்தாள்
சாந்துசவ்வாதுடனே சந்தனமுமபூசினுள்
மருவுமருக்கொழுந்தும் மல்லிகைப்பூமுடித்தாள்
வாசனைபரிமளிக்க வாராளேயேலகன்னி
ஆடிதாதி அலங்காரத்தோழிகளே
எடுத்துவாகனகதண்டி இட்சணமேபோகவேணும
தாதிமாரோடிவந்து தண்டிகைகொண்டுவந்தார்
ஏறினுள் தண்டிகையை எடுத்தார்நெடுங்குடையை
சங்கமர்தானிருக்கும் தாவுதேடிவாருராம
பலலக்கைவிட்டிறங்கிப் பாதஞ்சரணமென்ருள் [ருள்
ஆணையிட்டேன்தோஷமில்லை ஆண்டவனேவாருமென்
ஏறினூர்பல்லக்கில் இயலானசங்கமரும்
ஏலகன்னிதாமும் ஏறினுள்பல்லக்கில்
மளிகைவாசலிலே வந்துமிறங்கிளுராம்
ஆசனத்தின்மேலே அயர்ந்தாளேயேலகன்னி

ஏலகன்னி அருச்சுனனுக்கு விருந்திடச்
சமைபல் பண்ணல்

---

இளங்கொடிதாமரை ஏலக்கன்னிதானழைத்து
அடிசில்சமையுமென்ருள் ஆரண்மனையிலெல்லவர்க்கும்
சர்க்கரைப்பாலபோஜனங்கள் சமையுங்கள்மாதர்களே
பஞ்சணைமெத்தையும் பள்ளியறைசோடியுங்கள்
இவ்வார்த்தைசொல்ல எழுந்தார்கள்தோழியர்கள்
நித்தமுறைசெய்யுஞ் சித்தினித்தாதியர்கள்
இந்தமுறையெங்களுது என்றுயெழுந்தாகள்
அடுப்புமெழுகுவார் அட்சதைக்காப்பிடுவார்
வெங்கலப்பானையிலே வெண்ணீருலைசாய்ப்பார்
பால்சபபாவரிசி பதின்கலந்தான்களைந்து [ர்
கொதிப்பாற்றியேயிறக்கக் கொப்பெனவேதான்சமைத்தா

வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பரிவார்
ஈழப்பலாக்காயை இளமுள்ளுபோக்கிடுவார்
கொத்தவரைக்காயதனைக் கூட்டியரிந்திடுவார்
செம்பொன்னவரைக்காய் சேர அரிந்திடுவார்
பாவற்காய்தானரிவார் பரங்கிக்காய்தானரிவார்
இளசுசுரைக்காய் இளந்தமர்த்தைதானரிவார்
தேங்காய்திருகிடுவார் மாங்காயரிந்திடுவார்
பாம்புப்புடலங்காய் பாதரிப்பீர்க்கங்காய்
பிஞ்சுமுருங்கக்காய் பேரானகொத்தவரை
கண்டக்காய்வண்டக்காய் சுத்தமுள்ளமுள்ளாங்கி
வள்ளிக்கிழங்குகளும் வாழைத்தண்டுகீரையுடன்
சிறுகிழங்குசிறுவள்ளி சிறப்பானசேமத்தண்டு
கருணைகாராக்கருணை காராத ஆள்வள்ளியும்
அரைக்கீரைசிறுகீரை அகத்திமுருங்கக்கீரை
முன்னைமுசுட்டை மூக்கரண்டைகீரையுடன்
காசரிபிரண்டையும் கடற்கீரையுள்ளதுவும்
பிடுங்கிஞரிங்கீரை பேருனகொத்தமல்லி
கடலைஉளுந்துபச்சை காருமணிப்பருப்பும்
அவரைதொவரையொடு அநேகஞ்சிறுபருப்பும்
கொள்ளுடனேஎள்ளுகளுங் கோதுமையுங்கலந்து
பத்துவகைத்தப்பளமும் பாங்கானகூட்டமுது
பத்துவகைப்பச்சடியும் பாங்கானகீரையுடன்
புளிக்கீரை அவரைக்கீரை பிரட்டினகீரையுடன்
ஆயிரத்தெட்டுவகை அரிக்கறிபொறிக்கறியும்
ஐஞ்ஞூறுவகைக்குழம்பும் அடவுடனேதான்சமைத்து
காரமும்உப்பும் கலந்த அறுசுவையும்
புத்துருக்குநெய்த்துளியைப் போதவேதான்வார்த்து
வடகப்பொடிபோட்டு மணிச்சீரகம்போட்டு
சீரகமும் வெந்தயமும் சீராகத்தானபோட்டு
கருவேப்பிலையும் கறிக்குத்திட்டமாய்ப்போட்டு
சையுஞ்சையுமென்று தனித்தனியேதான்மணக்க
மணங்கள்கமகமென்ன யாதர்க்குப்புறையேற

தாளித்திறக்கினர் தாமவர்கையாலே
செப்பொன்பிரிமணமேல் சேரவுகிக்கினர்
ஊறியகாய்சேர்ந்த உகமைகளைச்சொல்கிறேன்கேள்
இஞ்சிமெழுமிச்சை இபவானதமரத்தையும்
நாரத்தைகிச்சிலியும் நல்லகடுக்காயுடனே
மூங்கில்குருத்துகளும் முற்றுவள்ளிககிழங்கு
அத்திக்காய்மாவுலிங்கம் அழகானதூதுவேளை
வில்வக்காய்சுக்கங்காய் விளாம்பிஞ்சுப்பச்சடியாம்
சுண்டைக்காய்களாக்காயும் சுருக்கானமுள்கருணை
மாங்காய்முதலான மற்றுமுள்ளஊறுகாயும்
வத்தல்வகைசேர்ந்த வகைமானங்கேளுங்கள்
ஆதண்டங்காயும் அரிதானசுக்கங்காயும்
பாவற்காய்கோவற்காய் பச்சைமிளகாயும்
சுக்கங்காய்தூதுவேளை சுருக்கானபாவற்காயும்
அறுசுவைவர்க்கமுடன் அறுபதுஊறுகாயும்
பழவகைகள்தான்சேர்த்த பலவகையைத்தான்கேளும்
மாம்பழம்வாழைப்பழம் பலேயின்பலாப்பழமும
செவ்வாழைகரிவாழை திரண்டகொட்டைவாழையும்
மாதளைகிச்சிலியும் மாவொட்டுமாம்பழமும்
அன்னசியருநெல்லி அழகுகொய்யாப்பழமும்
தமர்த்தம்பழங்களும் தலைவிரித்தமாதளையும்
மற்றுமுண்டானபழ வகையெல்லாஞ்சேர்த்தார்கள்

ஏலகன்னிக்குத் தாதிகள் பள்ளியறை சோடித்தல்.

---

அதிலேயொருதாதி ஆரணங்குதானெழுந்து
பள்ளியறைதானதிறந்து பைங்கிளியாள்சுத்திபண்ணி
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரச்சுவர்பூசி
கண்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி

கார்பரிந்தமல்லிகையைக் கட்டிலின்மேலேசொரிந்து
கண்ணாடிசல்லி கட்டி கவுரிபாலசுங்குவிட்டு
மாவிலைதோரணமும் மல்லிகைபாலைகட்டி
எங்குமலங்கரித்து ஏந்திழைமாரோடிவந்து
ஏலகன்னிமுன்னாலே இளங்கொமமார்தெண்டனிட்டார்
அடிசல்சமைத்ததென்று ஆரணங்குதெண்டனிட்டார்
கெண்டியில்தீர்த்தமதுகொண்டுவந்துமுன்னேவைத்தார்
ஏலகன்னிசங்கமரும் எழுந்தாரிருவருமாய்
கைபூசிக்கொண்டு கடுகியேவந்தமர்ந்தார்
வாழையிலைபோட்டு வரிசையுடனே நீர்தெளித்து
இட்டாரேபோசனங்கள் இருவருக்கழகாக
பச்செனற பூவலையும் பசசடியும்பாலித்தார்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
காராவின்நெய்வார்த்து கடுகிபபுசியுமென்றார்
சிமிட்டிமுழிப்பளவிலே சகமாதாகாளியம்மை
வைத்தசோறுசாதமெல்லாம் மாயையாயுண்டுவிட்டாள்
மற்றுமொருக்கால் வட்டித்தார்போஜனங்கள்
மறுபடியும்போஜனத்தை மாயையாயுண்டுவிட்டாள்
ஆயிரம்பேருக்கு சமைத்த அடிசிலெல்லாம
ஐயரொருவருக்கு அன்புடனே வட்டியென்றாள்
கடுகளவுநாழிகையில் காளியம்மைவுண்டுவிட்டாள்
இன்னஞ்சோறில்லையோ எனபசியாறுகைக்கு
வயிறுபசியாற்றுமல மாலையிட்டுக்கொள்வேனே
மேதினியிலெப்படிகரு விவாகமதுசெய்வேன்காண்
இவ்வார்த்தைதானகேட்டு ஏலகன்னிவதுசொல்வாள்
எரியோ உனவயிறு இயலானசங்கமரே
மடுவோகுளமோஉன வயிறுகுஞ்சங்கமரே
பெண்டுபிள்ளையில்லாமல பிழைத்தீரோஊர்திரிந்து
இன்றையதினத்திலே போஜனமிட்டாச்சு
நாளையத்தினத்திலே நன்றாய்ப்புசித்திடுவீர்
வாருமென்றுசொல்லியே வருநதியே நீர்கொடுத்தாள்
வாய்பூசிக்கைபூசி மாளிகைக்குப்போய்நடந்தார்

பள்ளியறைவீட்டிலே பஞ்சணையில்வந்தார்கள்
சங்கமர்மனமகிழ தபபுருதான்தொனித்தான்
கின்னரவாத்தியங்கள் கோஷ்டமுடன்தான்படித்தாள்
காதாரக்கேட்டுமே காளியம்மைதான்மகிழ்ந்தாள்

ஏலகன்னி காமவிகாரத்தால் அருச்சுனனென்று
அணையப்போக காளி நான் அருச்சுன
னல்லவென்று சொல்லல்.

---

காமம்பொறுக்காமல் கடிகியேஏலகன்னி
மார்பில்விழுந்து மருவியணையவந்தாள்
காளியென்றுதானறிந்து கைவிட்டாளேலகன்னி
என்னைக்கெடுத்திரோ என்பாவங்கொண்டீரோ
ஆணையிட்டுவநதேனே அடிவைக்கஞாயமுண்டோ
அருச்சுனராஜாவை அங்கெனவேபோய்மறைத்தாள்
நில்லுநில்லுஞ்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
ஆணையிட்டுவநதேனே அடிவைக்கஞாயமுண்டோ
என்னைக் கலியாணஞ்செய்து கடுகநடவுமென்றாள்
ஆறுலழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
ஆதிகைலாசம் அரன்பதிக்குப்போறேனே
சிவனார்தன்கையாலே ரேசனவரம்பெற்று
வரும்போதுஏலகன்னி மாலையிட்டுக்கொள்ளுகிறேன்
என்னைமரிக்காதே ஏலகன்னிநாயகமே
போகச்செலவுதாராய் போய்வாரேன்பெண்மயிலே
ஆணையிட்டாலாகாது அடியேன்செலவுகொடேன்
என்றதுகேட்டுமே ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஆணையிட்டுத்தந்தானே ஆரணங்கைவிவாகஞ்செய்ய
மாதாசெலவுகர வாள்விஜயன்போய்நடந்தான்
அந்தவனங்கடந்து அப்புறம்போகலுற்றான்
பத்தாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

பேரண்டவனம் முற்றிற்று.

---



சிவபெருமானுடைய நந்தவனங்காத்திருந்த பிராமணன் பார்வதியின் நந்தவனக்காவற்பெண்ணை இச்சித்ததனாலுண்டானபாபம் விமோசனமானது.

## கக்ஷைது, சப்பாமிருகடவனம்.



அந்தவனத்தைவிட்டு ஐவர்பஞ்சபாண்டவர்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தரியோடு கூடைத்தலைமேலேவைத்தார்
பள்ளிவைத்தரியோடு வனமேகுடிபுகுந்து
காடுகடந்து கரியமலைதான்காண்டி
சப்பாமிருகந்தானிருக்கும் தனிவனத்திற்போனார்கள்
ஐந்துபேர்க்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
எடுத்துபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அங்கே குடித்தனமாய் ஐவர்கள்தானிருந்தார்
இப்படியாகச் சிலநாளிருக்கையிலே
சப்பாமிருகவனந்தனிலே தனஞ்சயனுமப்போது
வெள்ளையானைதனிலே விச்சிஜயன்வாரானும்
உலகமதிர்ந்திடவே உத்தமனும்வாரானும்
ஒருவன் அவனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
ஆகாவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
சிவசிவாவென்றுசொல்லி தொனித்தானேசங்குதனை
சங்குதொனிகேட்டு சப்பாமிருகந்தானெழுந்து
வால்கிளப்பிருமாளமிட்டு வருகுதுவெள்ளானை
தன்னிழலையேபார்த்து தானோடுமதயானை
கொம்பினால்மலையைபெயர்த்து குத்திகிளப்பிவிடும்
அருச்சுனனைக்கொல்லவென்று ஆனைவருகையிலே

அருச்சுனன் யானையைக் கொல்லுகிறது.



கண்டானேவான்விஜயன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக்குணதொனித்தான்
அர்த்தசந்திரபாணமெடுத் தஸ்திரத்தைஉச்சரித்தான்
மதயானையைக்கொல்லவென்று மார்புரளவாங்கினான்

அருச்சுனன்விட்டதொரு அர்த்தசந்ரபாணமதி
மதயானைதன்னையே வகுத்துஇருபிளவாய்
வீரிட்டுவிழுந்ததே வில்விஜயன் தன்கையால்

அருச்சுனன்கையினால் விழுந்தயானை

ஒருபிராமணனாக வந்தது.

---

ஆனைமடிந்திடவே அதிலொருபிராமணன்தான்
பஞ்சாங்கப்பிராமணனாய் பார்ப்பான்வெளியானான்
கண்டானே அருச்சுனனும் கடுகிபிராமணனை
வாருப்பிராயணரே மதயானைமுழுங்கிற்றே
ஆனாற்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
தெய்வலோகந்தன்னிலே சிவனுடையபூங்காவனம்
ஐயர்பூங்காவனத்தில் அதிகாரமென்னுதுகாண்
அம்மைப்பூங்காவனத்தில் அலங்காரப்பெண்களுண்டு
அம்மைவனத்தார்கள் ஐயர்வனம்போகொணாது
ஐயர்வனத்தார்கள் அம்மைவனம்போகொணாது
ஒற்றைஒருநாளில் உச்சிதத்தைப் பார்ப்போமென்று
அம்மைவனங்களிலே அதிகாலைபோகையிலே
ஆயிரம்பெண்களிலே அதிலேஒருகாதி
கண்ணுக்கினியபெண்ணை கண்டாசைபட்டேனே
பார்த்தாசைப்பட்டேனே பைங்கிளியைக்கைப்பிடித்தேன்
என்னைத்திமிறிவிட்டு ஈஸ்பரியாள்பக்கஞ்சென்றாள்
ஈஸ்பரியாள்தன்னுடனே இச்சேதியுரைத்தாள்காண்
அம்மையதுகேட்டு ஆதிசிவன்பக்கஞ்சென்றாள்
உமையவளதுகேட்க உம்பர்பிரான்பக்கல்வந்து
ஐயரேஉன்வனததில் அதிகாரஞ்செய்கிறவன்
எந்தன்வனக்கன்னியரை இவன்பிடிக்கஞாயமுண்டோ
என்றுமிகச்சொல்லுகையில் ஈஸ்பரனார்தான்கேட்டு
என்னைவரவழைத்து ஈய்ந்தார்பெருஞ்சாபம்
என்னுடையசாபமது எப்போதுலையுமென்றேன்
ஆதிகைலாசம அருச்சுனன்வருகிறான்

அருச்சுனரைச்சொல்லவே ஆங்காரமாய்போகையிலே
அருச்சுனனைக்கோபமுற்று அம்பாலேகொன்றிடுவான்
என்றதுபோலநீரும் என்சாபம்போக்கிவிட்டீர்
வாருமென்றிருவருமாய் வனத்திலேபோறார்கள்
போகப்பிராமணனும் புதுமையொன்றுசொல்லலுற்றான்

அருச்சுனனுக்குப் பிராமணன் குயவன்வரலாறுகூறுதல்.

---

ஆனாற்கேள்சங்கரரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
செப்பும்மொழிதவறான் திருநீலகண்டரவர்
கோடிகடவாதார் குயவன்குயத்தியரும்
இப்படியாக இவரிருக்கும்நாளையிலே
மகாராஜன்வாசலிலே மங்களகாரியத்தால்
கோவுங்குயமுட்டி கொண்டுவரவென்றுரைத்தார்
அக்ஷணம்நீலகண்டன் அனேகமுட்டிசொப்பனிட்டு
பொன்போலிழைத்துமே போட்டான்பெருஞ்சூளை
சூளைகலைந்து சுட்டெடுத்துமுட்டிகட்டி
மகாராஜன்வாசலிலே வைத்தானேகொண்டுவந்து
மகாராஜன்தான்பார்த்து மகிழ்ச்சியாய்குயவருக்கு
சொர்ணமணிமுத்தும் துகிலாடையுமெடுத்து
நீரில்லாப்பூஷணத்தை நீலகண்டனுக்கருளி
போய்வாருமென்றுமே போகச்சிலவருள
வெகுமானம்பெற்றுமவன் வீதிவருகையிலே
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
காற்றுமழையாங் கடுகிவருகுது
தேவதாசிவீதி தெருத்திண்ணையோரத்தில்
வந்துயிறங்கினன் வான்மழைபோகளவும்
அந்தச்சமையத்தி லவ்வீட்டுத்தாசியவள்
போஜனமுண்டுமே பொற்கலத்தைத்தான்கழுவி
சன்னல்கதவையவள் தான்திறந்துஊற்றினள்
மண்ணுடையான்தன்மேலே வந்துவிழுந்தது
சபபோசிவசங்கரனே சலந்தெளித்தாரென்றார்

அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணக்குதாசியவள்
அஞ்சிப்பயந்துமே ஆரென்றுகேட்கலுற்றாள்
மன்னுடையான்நான்சாணா வந்தேகனிவழியாய்
வான்மழைக்குமாசரசேலக்குறைதங்கினேன்
ஆரோதெரியாது அள்ளிஜலந்தெளித்தார்
என்றதுகேட்டுமே ஏலம்பசுங்கிளியாள்
மெத்தப்பயந்தாளவள் வீட்டோங்கொண்டுசென்று
அபிஷேகமாட்டிவைத்தாள் ஆனந்தமாரனுக்கு
ஈரமுலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
ஆபரணமிட்டு அலங்காரம்பண்ணினாள்
போஜனமிட்டவள் புட்பமுந்தான்கொடுத்தாள்
சந்தனமுந்தார்பூலம் தான்கொடுத்தாள்தையலரும்
அன்றையராத்திரி அங்கிருந்து குயவனவன்
மற்றநாட்காலையிலே வந்தானேவாழ்மனைக்கு

குயவன் மனையாளுக்கும் குயவனுக்கும் தர்க்கம்.

---

குயவனுடதேவி கொம்பனையாள்கண்டாளாம்
கண்டுபுருஷனைக் கண்ணீரைத்தானுகுத்தாள்
கோவென்றசத்தமுடன் குமிறியழுதாளாம்
ஆரோடேபோகம் அயர்ந்திருந்தீரன்னவரே
என்னைவிட்டுப்பிரிவதற்கு எனைமனம் வருமோ
வேசியர்கள்வீட்டிலே விளையாடிவந்தீரோ
உன்னுடனேபேசேனே உன்முகத்தைப்பாரேனே
பெற்றதகனைப்போல் பிரியமுடன்பார்த்திருப்பேன்
குருக்களுடமையை கொள்ளைகொண்டுபோனவர்கள்
தாயில்லப்பிள்ளைகளை தலையிலடித்தவர்கள்
சிசுவதைபண்ணவர்கள் ஸ்திரீவதைபண்ணவர்கள்
பெரும்பாவிசேருகிற பெருநரகில்சேர்ந்திடுவேன்
என்றுசபதமிட்டாள் இளங்கொடியாளக்குயத்தி
இவ்வார்த்தைகேட்டுமவன் எரிபறந்து நீலகண்டன்
கண்கள்சிவந்துமே காந்தாளப்பட்டானாம்

மெய்யானவார்த்தைதனை விளம்பினேன்மெல்லியற்கு
பொல்லாதவார்த்தையினால் புலப்புரிருந்துசெய்வேன்
என்றுமனஞ்சலித்து ஐதுசொல்வான் நீலகண்டன்
இன்றுமுதலாக இனிமேகடுநாள்வரைக்கும்
உன்னுடனேபேசினால உனக்குத்தகப்பனென்றான் [ன்
அவ்வார்த்தைதன்னினால் அனேகபாவஞ்சொல்லுகிறே
அபயமென்றுவந்தவனை அநியாயம்பண்ணாவி
பெருமபாவிசேருகிற பெருநரகம்சேர்ந்திடுவேன்
என்றுசபதமிட்டான் இயலான நீலகண்டன்
அப்படியாக அனேககாலந்தானிருந்தார்

ஆதிசிவனும் பார்வதியும் பண்டாரவேஷமாக
வந்து இருவரையும் ஒருமைப்படுத்தி
மோட்சமீதல்.

---

ஆதிசிவனுக்கும் ஆதிபரமேஸ்பரிக்கும்
பொறுக்குமுடியவில்லை பொல்லாச்சபதமிது
இருவரையும் பேசிவைக்க ஈஸ்பரனுவந்தாராம்
மெத்தப்பெரியவராம் மேல்நாடடுச்சங்கமராய்
ஆண்டிபெரியவராய் ஆண்டவன்வடிவெடுத்தார்
அம்மையுமை வரும் ஆண்டிச்சிவடிவெடுத்தார்
விநாயகன்வீரபத்ரன வேலம்பெருத்துக்கந்தனுமே
அன்றுஈர்த்தம்சேந்தோலும அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கைலாசமானதோலும்
சடையுஞ்சடைமுடியும் தம்பிரானைப்போலாக
நீலகண்டனுக்காக நினைந்தார் திருவோடு
கதிரோனைப்பாத்திரமாய் கடுகெனவேகைபிடித்து
வாரார்பரமசிவன் வனமாய்வனங்கடந்து
காடுசெடியும் கரியமலைதான்கடந்து
நீலகண்டன்வாசலுக்கு நிமலருமவந்துவிட்டார்
ஆடாபதாரதீ அறிவுள்ளபுண்ணியனே
என்பிள்ளைபெண்சாதி யிங்கிவர்களெல்லோரும்

பசியோடே நாங்கள்வந்தோம் பசியாற்றி நீரனுப்பும்
பிள்ளைபசியாற்றில் புண்ணியங்களவேணதுண்டு
குழந்தைபசியாற்றில் குமாரனைப்பெற்றிடுவாய்
உந்தனுறன்முறையார் உன்னுடையபெண்சாதி
வாழ்ந்துசுகமாவீர் மகாதேவர்புண்ணியத்தால்
என்றல்லோசங்கமரும் ஈய்ந்துவிட்டார்வெண்ணீறு
வாங்கியணிந்துகொண்டு வணங்கியேதெண்டனிட்டான்
நல்லதுசங்கமரே நான்செய்தபாக்கியத்தால்
வந்தீர்களிப்போநான் வாழ்ந்துசுகமானேன்
பத்துநாழிகைப்பொழுதில் பசியாறநீங்கள்வந்தால்
போசனமுமைபீகாண் போய்வாருஞ்சங்கமரே

ஈஸ்பரர் நீலகண்டன் மனஞ்சோதித்தல்.

---

என்றதுகேட்டுமவ ரேதுசொல்வார்சங்கமரும்
நான்-போசனம்பண் ணுகிற பொன்னுனதிருவோடு
இங்கேவைத்துநான்போறேனெடுத்துப றவாமல்லவையும்
ஊர்திரிந்துநான்வாறேன் உன்வசத்திருக்கட்டென்றார்
என்-பாட்டனார்நாளையிலே பண்ணின திருவோடு
பாத்திரம்போய்விட்டால் பழிவந்துசேருமென்றார்
என்றதுகேட்டு ஏதுசொல்வான் நீலகண்டன்
ஆனாற்கேள்சங்கமரோ ஐய பெரியவரே
என்னுடையதேவியுடன் இவ்வார்த்தைநீருரைத்து
சாதங்கறிவகைகள் சமைக்கவேசொல்லுமையா
பாவற்பயிர்பந்தலின்மேல் பாத்திரத்தைவைத்துவையும்
ஆரமனைக்குள் நுழைந்து ஆச்சியாரைத்தானழைத்து
மண்ணுடையான்வார்த்தைகளை மாதருடனுரைத்தார்
பந்தலின்மேலாகப் பாத்திரங்கள்வைத்தபின்
பாத்திரத்தைப்பார்த்திரென்று பண்டாரந்தானடந்தார்
செப்பிநடந்தாரே திருநீலகண்டன்வாழும்
அத்தெருவுதான்கடந்து அடுத்ததொருவீதிவந்தார்
அதிதிநிழலருகில் ஆதிசிவன்வந்தமர்ந்தார்

அந்தச்சமையத்தில் ஆதித்தன்போய்மறைந்தான்
சுக்கலாதேவிமகன் சூரியன்தானுமறைந்தான
குயவனுடைதேவியரும் குடிவாழ்க்கைசெய்திருந்தாள்
ஆனைகடுநெடும்போது ஆனபிறகாக
மண்ணுடையான்தானெழுந்து வாசலிலேவந்துநின்று
பாவைப்பந்தலைப்பார்த்தான் பாத்திரத்தைக்காணோமென்று
தேவியெதிரிலவந்து திகைத்தாற்போல்நின்றுவிட்டான்
கைகட்டி நீலகண்டன் கண்காட்டிக்கேட்குகிறுன் [ள்
ஆரணங்குமாதுகன்னி அறியேனென்றுசாடைபண்ணு
மனதுசஞ்சலமாக மண்ணெடுத்துப்பண்ணுகிறா
பன்னிருநதானெடுத்து பாத்திரப்பண்ணினன்
கடிகியேகுளேபோட்டு கவிழ்த்துவைத்தான்பந்தலிலே
ஐயருமம்மையுமாய் ஆதிசிவன்வாராம
திருநீலன்மாளிகையில் சிவசிவாவென்றுவந்தார்
கடிகியே நீலகண்டன் கைக்குச்சலங்கொடுத்தான்
கைப்பூசிக்கொண்டு கடிகியேவுள் நுழைநதார்
பாத்திரங்கொண்டுவந்தார் பண்டாரம்பார்த்துவிட்டார்
என்னுடையபாத்திரம் எங்கேயென்றூர்சங்கமரும்
வைத்து நீர்போனபின்பு மாயமாய்ப்போச்சுதையா
ஆனையாலானைவனே அட்சணமேசெய்துவைத்தேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும்
என்பாட்டனும்பூட்டனுமே பண்ணிவைத்தபாதிரத்தை
ஏமாத்திமோசம்பண்ணி இல்லையென்றுசொல்லலாமோ
மகாராஜனிடத்தில்வாரும் வழக்கைப்போய்ச்சொல்வோ
மடிபிடித்துசங்கமரும் வாராரேதானிழுத்து [மென்றூர்
முடிமன்னன்றனசபைக்கு முன்பாகவந்துசொன்னூர்
பசித்தேனென்றுசோறுகேட்டேன்பகலைக்குவாருமென்றூர்
வச்சிரத்தாலிழைத்த மாணிக்கப்பாத்திரத்தை
இவர்கையிலநான்கொடுத்துயிஷ்டரிடம்போயிருந்தேன்
வந்துபின்கேட்டாலே மாபாவிகாணோமென்றுன்
ஆனையினலேதான் அழைத்துவந்தேனும்மிடத்தில்
ஆதிபரதேசி யாருமில்லையெந்தனுக்கு

ஆண்டியுடமையென்று அவடரித்தில் நீர்கேட்டு
வாங்கியேதாருமெனுர் மகாராஜ்ராஜாவே
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மகாராஜன்
ஆரடா நீலகண்டா அறிவுகெட்டபாதகனே
பரதேசியுடமையை நீ பறிக்கிறதுதருமமோடா
குயவன்குயத்தியரைக் கொப்பெனவேகட்டுமென்ருர்
வெள்ளிப்பிரம்பாலே வீசியடியுமென்ருர்
மாறியடியுமெனுர் வந்தகுயவனைத்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தார்தலையாரி
எருக்கமலராலே கட்டியடித்தாரே
உள்ளமநடுங்கமேனி உதிரமவடியுதங்கே
அப்போமகாராஜரிடம் ஆண்டியவரேதுசொல்வார்
இன்னஞ்சிலராஜரண்டை இடடுயானபோறேனையா
கட்டவிழ்த்துவிட்டிடெனுர்கடிகி நீலகண்டனைத்தான்
அரண்மனையைத்தாண்டி அப்புறமபோகையிலே
ஆதிசிவனாரும் அங்கேமனமகிழ்ந்து
ஈசனரிஷபத்திலே ஈஸ்பரிசிங்கத்திலே
பேழைவயிற்ருேனும் பெருச்சாளிவாகனத்தில்
கந்தர்மயில்மேலே கடிகிமேவந்துநின்ருர்
தங்கருடவாகனத்தில் சாமிகளுமேறிவந்தார்
வந்தாரெதிராக மன்னனுடையானகண்டுவிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
குயவன்குயத்தியுட குறைகளைத்தீர்த்தாராம
காட்சிகொடுத்துக் கைலாசம்போனாராம்
நீலகண்டன்பேறுபெற்ற நிலமாகுமிவ்வனந்தான்
என்றதுகேட்டு ஏதுசொல்வானருச்சுனனும்
புண்ணியவனத்திலே போய்ஸ்நானம்பண்ணிவந்தால்
என்பாவந்தீரவே ஈஸ்பரனார்வரமளிப்பார்
என்று-பொய்கைதனிலே பொட்டெனஸ்நானம்செய்து
சிவனை நினைந்து திருநீறுக்காப்பணிந்து
அரனை நினைந்து அள்ளியிட்டான்வெண்ணீறு
பஞ்சாட்சரமணிந்து பகவானைப்பூசைசெய்து

ஆகாரமென்ன அடித்தானே ஜெயகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானே சங்குதனை
ஒருவன் சிவனேயென்றான் உலகத்திலவனேயென்னும்
ஆகாரமென்றுசொல்லி அந்தவனந்தாண்டினான
மற்றுமொருவனத்தில் வாராரிருவருமாய்
இந்தவனமாருடையதென்றுனிளவிஜயன்

சபாமிருகவனங்கடந்து ஊர்க்குருவிவனம் வருதல்.

---

ஊர்க்குருவிபேறுபெற்ற வனமென்று உத்தமனும்
வாயில்லாச்சீவன் மாமெறுபட்சிகள்தான்
எந்தவிதமாய்த்தான் ஈஸ்பரனைக்கண்டதாகாண்
அந்தவிசாரத்தை ஆண்டவனேசொல்லுமென்றார்

பிராமணன் அருச்சுனனுக்கு ஊர்க்குருவி
வரலாறு கூறுதல்.

---

அப்போபிராமணனும் அருச்சுனற்குவதுசொல்வான்
ஊர்க்குருவிபட்சியிதி லுண்டாணும்பெண்ணுமாக
இந்தவனமதனி லிருந்துவாழுமந்நாளில்
பிள்ளைகள்பெற்றிருக்கப் பெருத்தவனங்களிலே
போவார்வருவார்குஞ்சைப்பேர்யெடுத்துக்கொள்வார்கள்
இறைதேடிவருவதற்குள் எடுத்துக்கொண்டுபோவார்கள்
கூண்டினிடமாகக் குருவிவந்துபார்த்தவுடன்
அழுதுபுலம்பியே ஆயாசப்பட்டிருக்கும்
மனுகாலொருதரமும் மைந்தனுண்டாயிருக்கும்
பெண்குருவியானது புருஷனுக்கேதுசொல்லும
என்புருஷாயென்கணவா என்வார்த்தைநீகேளும்
நான்பெற்றபிள்ளையெல்லாம் நானுக்கிரைகொடுத்தேன்
போவார்வருவோர்கள் பிள்ளையைக்கொண்டுபோனார்
இப்போதுபிள்ளைபெற்றால் எவராகிலுமெடுப்பார்
ஆசைகள்தோனுது ஆணழகாவென்னசெய்வேன்
எங்கேநான்பெற்றெடுப்பேனு எனக்கறியச்சொல்லுமென

ஆணற்சேன்பெண்மயிலே ஆணங்கேயொருவார்த்தை
இந்தவனத்திலே இங்கேகுளிகுளித்தால்
நமக்கு-அன்னங்கிடையாது அன்னமே நீர்கேளும்
சமுத்திரக்கரையோரம் தாவுண்டுபிள்ளையெற
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்லும்பெண்குருவி
அலைபெருகிதண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோய்வி
இப்போதுபிள்ளைபெற்று ஏமாந்துபோவேனே [டுமே
என்றதுகேட்டு ஏதுசொல்லுமாண்குருவி
இவ்விடத்தில்பிள்ளைபெற்றால் ஏதுகுற்றம்வந்தாலும்
சமுத்திராராஜருடன் சண்டைகள்செய்திடுவேன்
யுத்தங்கள்செய்திடுவேன் உன்பிள்ளைவாங்கிடுவேன்
என்று-தலையிலிடித்துமே சத்தியங்கள்செய்திடுமாம்
சபதங்கள்பண்ணினதை சமுத்திராராஜன்கேட்டு
இது-எவ்வளவுஊர்க்குருவி என்னுடனே சண்டைபண்ண
சொல்லாதுவார்த்தையைச் சொல்லுதுசிட்டினங்கள் [ன்
ஆண்மையைப்பார்ப்போமென் றவ்வருணன்றானிருந்தா
அப்போதுசிட்டினத்தில் அழகானபெண்குருவி
செத்தையைத்தான்பொறுக்கி சிறுவீடுகட்டிடுமாம்
இருமுட்டையிட்டு இருந்து அடைகாக்க
பின்னுமடைகாத்துப் பெற்றகுருஞ்சுகளை
கொப்பெனவேதான்பறந்து குழந்தைக்கிரைதேடும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
தாயுந்தகப்பனுந் தானில்லாவேளையிலே
சமுத்திராராஜனவன் தண்ணீர்பெருகிவந்து
குழந்தையிரண்டையும் கொப்பெனவேகொண்டேகி
பாதாளந்தன்னிலே பத்திரம்பண்ணினாராம்
பட்சிசமர்த்துகளைப் பார்ப்போமென்று தானிருந்தார்
அந்தச்சமயத்தில் அழகானபெண்குருவி
குழந்தைக்கிரைதேடிக் கொண்டுவந்துபார்க்கையிலே
மக்களைக்காணாமல் மருகிப்புலம்புகுது
மார்பிலேயுந்தோளிலேயும் வண்ணமுகத்திலேயும்
அறைந்துபுலம்புகுது ஐயோமகனேயென்று

மக்களைப்பறிகொடுத்து மண்மேலேதங்குவேனோ
மைந்தனைப்பறிகொடுத்து வயிற்றிலறைந்துசொல்லும்
பாவிகொடுத்தாரோ தன் பாலகரைக்கொல்லவென்று
என்றம்மையாளி யேற்பட்டானெந்தனுக்கு
புதல்வனைப்பறிகொடுத்து புலம்புதுபெண்குருவி
ஐயையோதெய்வமென்று அலையுதுபெண்குருவி
அந்தச்சமையமதி லாண்குருவியேதுசொலலும்
மனதுசலியாதே மக்களைவாங்கிதாரேன்
சமுத்திராஜருடன் சண்டைமிகச்செய்து
புதல்வரைவாங்கித்தாரேன் புலம்பாதேபெண்மயிலே
என்றுமொழிந்ததது இப்பாலானபெண்குருவி
மூக்கிறைப்பிலேவிழித்து மூலையாலெழுதுகுது
என்னவென்றுவோலை யெழுதுதுசிட்டினந்தான்
காக்காய்குருவி கழுகுகள்பருந்துகளாம்
மாடப்புறவாம் மயிலுங்குயிலினமாம்
காடைக்குருவிகளாம் கவுதாரிடேகைகளாம்
அன்னமயிலோழ்வாரும் ஆனமயிலினமும்
கூளிகழுகுமேகம் கோட்டானுமாந்தைகளும்
ஓலைகண்டநாழிகைக்குள் ஓடியேவாங்களென்று
சமுத்திராஜருடன் சண்டைபண்ணபோகவேணும்
என்னுடயினைசுதார்க ளெல்லோரும்வாங்களென்று
வருந்திமொழிதியே வாயசத்தைத்தானழைத்து
ஓலையைக்கைகொடுத்து உண்மையிலதுசொல்லி
தெய்வலோகத்தாருக்கும் சேதிசொல்லிவாருமென
வாயுவேகமாகவே வருகுதுவாயசந்தான்
அவனியிலுள்ளவர்க்கும் அந்தரமுள்ளவர்க்கும்
செப்பித்திருப்புகையில் திருமாலருகிருக்கும்
ஆபருடவாகனம் அவ்வாரெழுந்திருந்து
மாயனைத்தெண்டனிட்டு வணங்கியேயதுசொல்லும்
தன்குலராஜனுக்கும் சமுத்திராஜனுக்கும்
யுத்தங்களாகிறதாம் உலகளந்தபெருமாளே
என்னைவரவழைத்தார் யானும்போய்ச்சேரவேணும்

சாஷ்டாங்கதெண்டனிட்டு சுவாமிக்குரைத்ததப்போ
குலுங்கநகைத்துக் கொப்பெனவிடைகொடுத்தார்
பிரமருடவாகனம பேடன்னத்தோரினமும்
கந்தருடவாகனம் கானமயிலினமும்
மன்மதவாகனம் வர்னக்கிளியினமும்
சனியனுடவாகனம் சமர்த்தானவாயசமும்
அவரவர்தேவரண்டை அடிபணிந்துதெண்டனிட்டு
சமுத்திரராஜருடன் சண்டைபண்ணப்போறோமென்றார்.
அமராதுநடக்குதென்று ஆளோலையனுப்பினது
ஆகையாலாண்டவனே அடியேனும்போகவேணும்
எங்களுக்கு செலவருளும் எனறுபணிந்தது
அத்தண்டதேவர்களும் ஆச்சரியப்பட்டார்கள்
சமுத்திராஜருடன் சண்டைகளெப்படியோ
இப்புதுமைபார்ப்போமென்று இலானதேவரெல்லாம்
நாமும்வருகிறோம் நடவுங்கள் முன்னேயென்றார்
தெய்வலோகப்பட்சி திரும்புதுபூமியிலே
தனித்தனிபட்சியெல்லாம் சமுத்திரக்கரையோரம்
தன்குலத்துராஜருக்குச் சரணமிடும்பட்சியெல்லாம்
அப்போதுசிட்டினந்தான் அனைவருக்குமேதுசொல்லு
சமுத்திரக்கரையோரம் தாவுதேடிபிள்ளைபெற்றால் [ம்
அலைபெருகித்தண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோன
என்னுடையபிள்ளைதனை எடுத்துக்கொண்டுபோனது [து
ஆகையாலுங்களையும் அவசியம்நானழைத்தேன்
வாருமென்றபோதையிலே வந்தீர்கள்தயவுசெய்து
சமுத்திரராஜருடன் சண்டைகள்செய்திடுங்கள்
என்னுடையபிள்ளையை எவ்விதமும்வாங்கிடுங்கள்
உகந்துமனேவேர்க்கும் உபசாரஞ்செய்கையிலே
அத்தண்டபட்சிகளும் அதிககோபமுண்டாகி
காக்காயொருவரிசை கழுகொருவரிசை
அன்னமொருவரிசை ஆழ்வாரொருவரிசை
பருந்துமொருவரிசை பச்சைக்கிளியொருவரிசை
மயிலுமொருவரிசை வல்லூறொருவரிசை

குயிலுமொருவரிசை குருவியொருவரிசை
காடையொருவரிசை கவுதாரியொருவரிசை
புல்புல்லொருவரிசை புறக்களொருவரிசை
உள்ளானொருவரிசை ஊர்க்குருவியொருவரிசை
நாரையொருவரிசை நாகணவாயொருவரிசை
கொக்குவொருவரிசை கோட்டானொருவரிசை
அந்தச்சமையமதில் அனேகவிதபட்சியெல்லாம்
அந்தப்புறங்களிலே அவ்வகுப்பார்சேர்ந்திருப்பார்
அப்போதுமூவர்களும் அயிராவதத்தோனும்
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவர்களும்
ஆகாயமார்க்கமதில் அந்தரமாய்நின்றுகொண்டு
பட்சிகள்நின்றிருக்கும் பாவனையைப்பார்த்தார்கள்
எழும்பியேயந்தரமாய் எட்டிப்பிடிக்கிறதும்
தானாகவேபிறந்து தண்ணீரில்தான்குதித்து
இருபக்கமிறெக்கையிலே எடுத்துசலங்கொண்டுவந்து
பாரெல்லாய் நீர்தளும்ப பறந்துதெளிக்கிறது
அரைநாழிகைகொன்னையிலே அடியோடேவற்றிவிட
சமுத்திரமானதெல்லாம் தண்ணீர்வரண்டுவிட
சமுத்திராஜன் சகிக்கமுடியாமல்
தேவர்கள்தன்னுடனே செப்பிமுறையமிட்டான்
அத்தனைபேரும் அனைவரும்வந்திறங்கி
கிட்டினத்தைத்தானழைத்து செப்புவார்தேவரெலலாம்
உன்தனையினவமைத்தாரோ சமுத்திரநீருண்டுபண்ணு
எப்போதும்போலே நீ எற்படுத்துசமுத்திரத்தை [ம்
என்றுசொல்லப்பட்சியினமெல்லாமொருமித்து
மயிலையருகழைத்து வாத்தைகளேதுசொல்லும்
கந்தருக்குச்சொன்னீரானால் கைவேலாலுண்டுசெய்வார்
என்றுசொல்லமயிலினங்களெல்லாமொருமித்து
வேலவனார்தன்பதத்தில் விழுந்துமுறையமிட்டு
ஆண்டவனேயென்சாமி அடியேனால்முடியாது
நீர்நினைத்தாலிக்ஷணமே நீரும்பெருகிவிடும்
அடியேனைப்பற்றியே அலைகடலையுண்டுபண்ணும்

என்றுபணிந்து இறங்கியேதொழுதுநிற்க
சந்தாமனமகிழ்ந்து கடிகியேவில்வளைத்து
வில்லெடுத்துநாண்பூட்டி வேலெடுத்துமந்திரித்து
அலைகடலில்நீரையெல்லாம் அம்பிலொருமுத்தாக
பூமியதிரவே போய்ப்பாயும்வேலிதுதான்
மண்ணிலுள்ள நீரையெல்லாம் வழித்தொருமுத்தாக
முத்தால்வளர்ந்து முனிந்துகடல்பெருக
சந்தோஷப்பட்டானே சமுத்திரராஜனவன்
குருவியுடபிள்ளையை கொண்டுவந்துதந்தாராம்
ஆதிசிவனுரும் அதிகவரந்தந்தாராம்
முப்பத்துமுக்கோடி முனிவர்தேவரெல்லாம்
சுகமாகச்செல்வத் துடனேயிருப்பீரென்று
வாழ்த்திவிடைகொடுத்து மகாதேவர்போய்நடந்தார்
ஊர்க்குருவிபேருபெற்ற ஓங்கும்வனமிதுகாண்
என்றதுதான்கேட்டு எழிலவிஜயராஜாவும்
உற்றுற்றுக்கேட்டு உள்ளமிகமகிழ்ந்தார்
அந்தச்சமயம் அருச்சுனராஜரிடம்
போகவிடைதாருமெனப் புகன்றுன்பிராமணனும்
போய்வாருமென் றுசொல்லிபோகலுற்றுன்போர்விஜயன்

பதினோர்வது ஊர்க்குருவிவனம்

முற்றிற்று.

---

## கஉ-வது, காளபயிரவவனம்.

பனிரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலையேலே குடிவாழ்க்கைகானகத்தில
கோலிவைத்தசியாடு கூடைதலையேலேவைத்தார்
அந்தவனத்தைவிட்டு அப்புறம்போருர்கள்
காளபயிரவ வனத்திலேகாவலர்கள்
அங்கேகுடித்தனமாய் ஐவர்குடியிருந்தார்

காண்டாவனமெரித்த காளையருச்சுனனு
காளபயிரவ கானகத்திலவந்தயாந்தான்
அங்கேதவ முனிகள் அனேகம்பேரப்பா
சாமியென்றுவந்தோமே தவசுதலந்துதையா
சிவனென்றுவந்தோங்காண் செய்ததவர்வீணாச்சு
என்றுமனங்கலங்கி எப்போதும்போலிருந்தார்
அந்தரிஷிகளண்டை அருச்சுனன்தவஞ்செய்தான்
அங்கிருக்குமரிஷிகள் அனேகம்பெரியவர்கள்
இத்தனைகாலமட்டும் இருந்துதவம்பண்ணினோம்
இருந்துதவம்பண்ணி ஈஸ்பரனும்வந்ததில்லை
ஆதிசிவனை ஆண்டவரைக்காணவில்லை
பரமசிவனை பார்க்கஅரிதாகும்
கைலாசவாசலிலே கடுகதவம்பண்ணினாலே
பரமசிவனாரும் பாக்கியந்தந்திடுவார்
சுகமாகவாழ்ந்திடலாம் துரிதமாயேநடவென
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானவான்விஜயன்
எல்லோர்க்குந்தெண்டனிட்டு எழில்விஜயன்போய்நடந்தா
கடிகிநடந்தானே கைலாசபருவதத்தில் [ன்
பொய்கையில்ஸ்நானமபண்ணி பூசைதவமுடித்து
காளபயிரவனைக் கருதித்தியானம்பண்ணி
எழுபதடிக்கம்பம் எழில்விஜயன் நாட்டினான்
எழுபதடிக்கம்பத்தின்மேலேழுயிளநீரைவைத்தான்
ஏழுயிளநீரின்மேல ஏழுவிளாம்பழத்தைவைத்தான் (ன்
ஏழுவிளாம்பழத்தின்மேல் எலுமிச்சங்கனியைவைத்தா
எலுமிச்சங்கனியின்மேல் ஏழுகொட்டைபாக்குவைத்தா
ன், ஏழுகொட்டைபாக்குமேலேழுருண்டுமணியைவைத்
தான், ஏழுருண்டுமணியின்மேல் ஏழுகடுகுவைத்தான்
ஏழுகடுகதன்மேல் ஏழுசெப்பூசிவைத்தான்
ஏழுசெப்பூசியின்மேல் ஏழுசெவ்வலரிவைத்தான்
ஏழுசெவ்வலரியின்மேல ஏறினான்தேர்விஜயன்
ஒருக்காலைத்தானூன்றிஒருக்கால்முழங்காலில்வைத்தான்
கண்ணிரண்டுமூடியே கர்த்தன்மேல்தியானமானான்

அரகரா அரனேயென்று அடிக்கானேசெபமாலண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலிக்கானேசங்குதனை
ஒருவன்சிவனேயென்றால உலகமசிவனேயென்னும்
அருந்தவமபண்ணுகிறான் அருச்சுனராசனுமை
அகோரதவசுபண்ணுறான் ஆண்டவனைக்காணவென்று
ஆதிசிவனுக்கு அருச்சுனன்செய்ததவம்
பொறுக்குமுடியவில்லை போர்விஜயன்செய்ததவம்
ஆதிசிவனுக்கு அக்கினியாய்வீசுது
காலனைகாலாலுதைத்த கைலாசநாதரவர்
கோபம்பெரிதாகி கொப்பெனவேயேதுசொல்வார்
ஆரடாதூதவனே அழையுங்கள்மாயவரை
எமன்பிரமாவை இங்கேயழையுமென்றார்
விண்ணாட்டுத்தேவனை விரைந்தோடியழையுமென்றார்
விக்கினவிநாயகனை வேலவனையழையுமென்றார்
ஓடியழைத்து ஒருநொடியில்வாங்களென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிவிரைவாய்வோடிவந்தா
ன, வைகுந்தபமோடிவந்து மாயவரைத்தெண்டவிட்டு
ஆதிசிவனார் அழைத்துவரச்சொன்னாரென்றார்
அமராபதியாளும் ஆயிரங்கண்ணனுக்கும்
எமபுரமாளும எமதர்மராஜனுக்கும
பிரமலோகந்தன்னிற் பிரமதேவனவர்க்கும்
வசிஷ்டரும்வால்மிகர் மகாதவமுடையவர்க்கும்
அந்தண்டதேவர்முதல அனைவருக்குஞ்சொல்லினான்
சிவனார்வரவழைத்தார் சீக்கிரமவாருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அவரவர்பயணமானார்
வாழ்கருடனேறியங்கு வந்துவிட்டாமாயவனார்
மத்தகஜமேறியங்கு வந்துவிட்டார்இந்திரனார்
எமன்கிடாவேறி ஈசருகில்வந்தான
அன்றுபிரமாவும் அன்னத்தின்மீதிலவந்தார்
கானமயிலேறிக் கந்தரும்வந்துவிட்டார்
மூஷிகவாகனத்தில் மூன்றோனும்வந்துவிட்டார்
முப்பத்துமுக்கோடி முனிவரும்வந்துவிட்டார்

ஆதிசிவன்பக்கலிலே அனைவரும்வந்துவிட்டார்
வந்துபணிந்தார்கள் மகாதேவன்பக்கலிலே
ஆத்தியுரித்தவனார் ஆதிசிவனேதுசொல்வார்
மாயன்பெருமாளே வார்த்தையொன்றுகேட்டீரோ
ஆரோதெரியாது ஆதிகைலாசம்வந்தான்
எவனோதெரியாது இங்கேதவம்பண்ணுகிறான்
கைலாயந்தன்னிலேதான் கடிநிவாரணாயமுண்டோ
கைலைக்கு அப்பாலே கானகந்தன்னிலேதான்
கருதிதவம்பண்ணுக்கால் காட்சிவரம்தந்திடுவோம்
இங்கேதவம்புரிய ஏற்குமோசொல்லுமென்றார்
இவன்-ஆரோதெரியாது ஆண்மையாய்வந்துவிட்டான
என்-தலைமாட்டில்நின்று சத்தங்கள்போடுகிறான்
ஆரோதெரியாது அறிந்துவந்துசொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களைவருண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளைவருண்டு
நாவிலேநட்சத்திரம் நயனவிழிப்பார்வையுள்ளோன்
மீசைமுருக்கழகன் விழிவிற்கப்பழகன்
தோளில்துளசிமாலை தொப்புளில்அமிர்தகலசம்
பல்லில்பாசவினை பாதத்தில்செந்தாமரை
பஞ்சவரிலிவனொருவன் பார்த்திபனென்றார்காண்
இடதுகால்பேமனைவிருது வலதுகால்வீரதண்டை
சலவிருதுகுலவிருது சமர்த்துகள்படைத்தவன்காண்
சிவபூசைகுருபூசை சிவன்பாதமறவான்காண்
என்னதவம்வேண்டி யிங்குவந்தானென்றறியேன்
என்றதுதான்கேட்டு யேதுசொல்வாரீஸ்பாரும்
தருமர்தம்பியானாலும் சமர்த்துடையோனானாலும்
கைலாயந்தன்னிலே கடிகிவாரணாய்முண்டோ
இவன்-இந்தவிதமாயிருந்து ஏதுதவம்பண்ணாலும்
வருந்தியிருந்தாலும் வரமருளப்போறேனோ
தவசைக்கெடுத்திடுவேன் தருமர்தம்பிஅர்ச்சுனனை
என்றுமகாதேவர் எரிபறந்துகண்சிவந்து

வாயுராஜன் தன்னையே வாவென்றழைத்தாராம்
அருச்சுனன் செய்யுமந்த அருந்தவசுக்கம்பமதை
தவசுநிலைக்கம்பமதை சமுத்திரத்திற்போடுமென்றார்
அரைநாழிகைக்குள்ளேயிலே அதமாக்கிவாருமென்றார்
என்றதுதான் கேட்டு எழுந்தானே வாயுராஜன்
ஆயன் பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்தார்
கைமோசமவந்ததென்றே கரியமாலப்போது
அருச்சுனராஜருக்கு அனர்த்தம்வரநாளாச்சு
காக்கவேணுமென்று கரியமாலோடிவந்தார்
மாயையாய்வந்தாரே வான்விஜயன்முன்னாலே
காண்டீபா அர்ச்சுனரே கைமோசம்வந்ததடா
ஆதிபரமசிவன் அதிககோபங்கொண்டாரே
வாயுராஜன் தன்னையிப்போ அனுப்பினார்மகாதேவர்
தவசுநிலைக்கம்பமதை சமுத்திரத்திற்போடவாரான்
வாயுவுராஜனுக்கு வலுவாயிருப்பாயா
என்றதுகேட்டு எழில்விஜயனேதுசொல்வான்
உய்மையேநம்பியே உம்பர்புரம்வந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியனைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைதஞ்சமென்பேன்
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாதே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகாதே
பெட்டியில்பூஷணம் பெருமைகுலையாதே
காக்கக்கடனுமக்கு கரியமாலெம்பெருமாள்
அண்ணருந்தம்பியரும் அனுப்பினார்வுன்னைநம்பி
ஆரைநம்பியிங்குவந்தேன் ஆதிகயிலாசம்
என்னமாயிருந்தாலும் ஈஸ்பரனாரெந்தனுக்கு
வந்தவினைமாற்றி வரமருளச்செய்யுமையா
என்றவனேங்கினான் இயலானவான்விஜயன்
சிந்தைமனங்குளிர்ந்து ஸ்ரீராமரென்னசெய்தார்
தருமர்தம்பியர்ச்சுனன்றன் தவசுநிலைக்கம்பமது
வாயுராஜன்வந்து வலுவாயசக்கினாலும்
ஆதிசிவன்வந்து அசைக்கிவலித்தாலும்

தேவாதிதேவரொன்றாய்ச் சேர்ந்துயசக்கினாலும்
அருச்சுனன் தவசுநிலை அசையாமலிருக்கவென்றார்
மாயவனார்வாங்கொடுத்து வந்துவிட்டார்கைலையிலே
ஆருமறியாமல ஆதிசிவனருகில்வந்தார்
அந்தச்சமயத்தில் ஆங்காரவாயுராஜன்
மண்ணுவிணையும் தானதிர வாரானேவாயுராஜன்
தெற்கேயிருந்து திசைவடக்குமுகம்நோக்கி
இறைந்துவந்துயோகினன் இளவிஜயன்தவசடியை
அப்புறத்துக்கிப்புறந்தான் அசையாமல்தானிருக்கும்
மறுகலொருதாமும் வந்து அறைந்தானும்
சாயாமல்நின்றது தவசுநிலைக்கம்பமது
தன்னாலேயாகாமல் சங்கரிக்கமுடியாமல்
திரும்பினான்வாயுராஜன் சிவனுற்குச்சேதிசொல்ல
அருச்சுனனைப்பார்த்து அதிகப்பிரியமுமாய்
என்னிலும்வல்லபிரான் என்றுமனயகிழ்ந்து
அருச்சுனுவுந்தனுக்கு அஸ்திரந்தாரேனென்றான்
வாயுவாஸ்திரத்தை வாள்விஜயன்கைகொடுத்தான
வாங்கிநமஸ்கரித்து வாள்விஜயனேதுசொல்வான்
எவரனுப்பிவந்தீர்காண் என்தவசை நீரழிக்க
என்றதுகேட்டு ஏதுசொல்வான்வாயுராஜன்
ஆதிசிவனழைத்து அனுப்பினார்வுன்னிடத்தில்
தவசுநிலைக்கம்பத்தை சமுத்திரத்திற்போடுமென்றார்
ஆகையாலிங்குவந்தேன் அசக்கினேன்கம்பமதை
என்னால்முடியவில்லை இளவிசயாவுனைசெயிக்க
ஆதிசிவன்வந்திடுவார் அதிகவரந்தந்திடுவார்
என்று நடக்கையிலே ஏதுசொல்வான்வாள்விஜயன்
உப்பர்பிரானுக்கு ஒருவார்த்தைசொல்லுமையா
என்னவென்றுசொன்னானெழில்விஜயனர்ச்சுனனும்
கிருபைவைத்துபாசுபதம் கிரீடிக்குத்தாருமையா
வேண்டும்வரங்கள்தனை விமலரேதாருமையா
கேட்டவரங்கள்தனை கிருபைவைத்துத்தாருமையா
வரங்கள்தந்தாலொழிய மலையைவிட்டுப்போவதில்லை

தவசு நிலையை விட்டுத் தனஞ்சயனும்போவதில்லை
ஆண்டவனே ஐயாவே அசட்டையாய் நீருந்தால்
மண்டையிளப்பேனென்று வாமதேவருக்குரையும்
தலையையுடைப்பேனென்று சங்கரற்கு நீருரையும்
என்றுவிஜய னெடுத்துரைத்தானப்போது
வாழ்த்திவிடைபெற்று வருகிறான்வாயுராஜன்
ஆதிசிவனுக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மான்மழுதரித்ததேவா மலர்ப்பாதம்சரணமையா
அருச்சுனன்தவசழிக்க ஆண்டவனேமுடியாது
உம்பர்கோனே உமைமாலுமாகாது
காட்சிதராவிடிலோ காண்டிபத்தாலடிப்பேனென்றான்
வரங்கள்கொடாவிடிலோ மண்டையிளப்பேனென்றான்
என்றதுகேட்டு ஈஸ்பரனார்கோபமானார்
கேட்டீரோமாயவரே கெர்வத்துடன்சொன்னது
மண்டையுடைக்கவும் வரம்வாங்கவல்லவனோ
காண்டீபத்தாலடித்து கடிகிவரம்வாங்குவானோ
தலையையுடைப்பேனென்ற தனஞ்சயனையிப்போதே
மண்டை தலையுடைத்து வல்லுயிரைவாங்கிடுவேன்
என்றுபரமசிவன் எறிபறந்து கண்சிவந்து
ஆரடாயிடிபகவான் அதிவிரைவாய்வாருமென்றார்
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாயிடித்து
அருச்சுனன்றன்றலையை அறுபதுசுக்கலாக்கி
கொன்றுயதமாக்கிக் கொப்பெனவேவாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆங்காரயிடிபகவான்
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்து நடுநடுங்கமுற
எழுந்தானிடிபகவான் ஏழுலகந்தானதிர
அந்தச்சமயத்தில் அரிராயர்ஓடிவந்தார்
அருச்சுனபார்த்திபா ஆதிசிவன்கோபமானார்
இடிபகவான்தனையே ஈஸ்பரனாரனுப்பினார்
தலையையுடைக்கவென்று தான்வாரானிடிபகவான்
தப்பித்துக்கொள்ளுமென்று சாமியவர்போய்விட்டார்
அந்தச்சமயத்தில் ஆங்காரமிடிபகவானை

தெய்வலோகந்தானதிர தேவர்கிடுகிடென்ன
பாதாள ஆதிசேஷன் பயந்துகிடுகிடென்ன
கெர்ப்பங்கிடுகிடென்ன கிளிகள்கபரிகொள்ள
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துகிடுகிடென்ன
எட்டுதிசைநடுங்க ஏழுலகந்தத்தளிக்க
எழிடியுங்கூடியொரு பேரிடியாய்த்தானிடித்து
அருச்சுனற்குநேராக ஆகாயமீதிருந்து
ஊழியாய்ப்பலக்கூட்டி உச்சியிலேதானிடித்தான்
ஏராடும்பிடிபகவான் என்றல்லோவாள்விஜயன்
இடிபகவான்வருகையிலேஎழில்விஜயனென்னசெய்தான்
ஒஞ்சரித்தந்தானிருந்து ஒருபக்கம்யிடிக்கிடவே
கண்முழிபிதுங்குது கண்ணீருந்தன்வடிய
இளைப்புந்தவிப்புமா யிருக்குதிடிதேவருக்கு
மெச்சினேனமருமகனே விட்டுவிடுமென்னையென்றார்
எனையகன்றாயின்றுனிலை ஈய்ந்திடுவே னுந்தனுக்கு
இப்பொழுதுந்தனுக்கு இடியாஸ்திரந்தரேனென்றான்
அவ்வார்த்தைதானகேட்டு அருச்சுனனேதுசொல்வான
இனிமேல்கலியுகத்தில் எங்கேயிடித்தாலும்
அருச்சுனனென்றுசொன்னால் அப்பால்நீர்போரீரோ
என்பேருசொன்னக்கா லேழுகாதம்போரீரோ
அவசியம்போறேனென்று ஆணையிட்டானிடிபகவான்
எவரானுடபவந்திரானை எவனையடித்துக்கொல்ல
என்றதுகேட்டு ஏதுசொல்வ னிடிபகவான்
ஆதிசிவனார் அனுப்பினருநனிடத்தில்
ஆங்காரத்துடனேவந்து அகப்பட்டேனுன்றன்கையில்
சத்தியமாயென்றன்தலையை தப்பிவிட்டாய்மகாராஜா
உன்-புண்ணியத்தினாலே பிழைத்துமேநான்போறேன்
அவ்வார்த்தைதானகேட்டு அருச்சுனனேதுசொல்வான்
ஆதிசிவனுக்கு அடிபணிந்தேனென்றுசொல்லும்
ஏதுவருத்தமக்கள் என்னையிடர்சொன்னாலும
அருச்சுனன்வார்த்தைக்கு அழிவுவரப்போறதில்லை
ஈஸ்வரரேவுன்னையில் எந்தவிதமானாலும்

வரம்வாங்கவல்லபிரான் வாள்விஜயனென்றுசொல்லும்
இடிபகவானுக்குரைத்து எழில்விஜயன் தானனுப்பி
அரனையறவானும் அரனபேலேதியானமானும்
சிவனைமறவானும் சிவன்மேலேதியானமானுன்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனரிடத்தில்
வந்தானிடிபகவான் வணங்கியேநமஸ்கரித்தான்
ஆண்டவனேஐயாவே அடியேனெருவிண்ணப்பம்
உன்வார்த்தைகேட்டுப்போய் உயிரிழக்கநாளாச்சே
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாய்த்தானிடித்தேன்
இறங்கித்தலைசாய்த்து என்னையேபிடித்துக்கொண்டான்
சத்திய வானர்ச்சுனனும் தப்பவிட்டானென்தலையை
ஏதுநீர்செய்தாலும் இளைத்துவிடானருச்சுனனும்
வரம்வாங்கிபோகவல்லான் வாள்விஜயனர்ச்சுனனும்
அவனை-சித்தத்தில்நினைக்கத் தேகம்நடுங்குதையா
பின்னும நினைவுகொண்டால் பிராணன்பதைக்குதையா
என்றுசொல்லயிடிபகவான் ஈசனதற்குரைப்பார்
அத்தனைக்கும் வல்லவனே ஆண்பிள்ளையருச்சுனனே
அரைநாழிக்கொள்ளையிலே அதயாக்கிப்போடுகிறேன்
அனேகமானசெல்லுகளை ஆண்டவனுர்வுண்டுபண்ணுர்
செல்லுகளை நீரும்போய் சீக்கிரம்விஜயனுட
சரீரமாதியந்தமெக்குஞ் சல்லடைக்கண்களாகத்
துளைத்துவிட்டுவாருமென்று சொன்னுர்பரசுபாணி
வருகுது செல்லதுதான் வாள்விஜயன் தன்னருகே
அந்தச்சமையத்தில் அரிமாயர்வோடிவந்தார்
அருச்சுனவாள்விஜயா அனேகமோசம்வருகுதடா
ஆண்டவன்கோபமதாய் அனேகஞ்செல்லனுப்பிவைத்
தார், எச்சரிக்கையாகவே இருங்காணருச்சுனரே
என்றதுசொல்லியே எம்பெருமாளேகிவிட்டார்
அந்தச்சமயத்தில் அனேகமானசெல்லுவர
சுரேந்திரன்மைந்தனையுஞ் சூழ்ந்ததுசெல்லுகள் தான்
கண்டானேயர்ச்சுனனும் காண்டீபன்தான்வளைத்தான்
விலவளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்

அக்கினி அஸ்திரத்தை அருச்சுனன் உச்சரித்து
பார்பிரளவாங்கினன் வளரவிட்டான் அக்கினியை
அருச்சுனன் சவசு நிலை கம்பத்தருகாக
அக்கினிவருகுது அண்டமுடியாது
செல்லுகளண்டாமல் செந்தணலாய்ப்பத்துகுது
பார்த்துப்பயந்து பறந்ததுசெல்லுகள் தான்
சங்கான் தன்னருகே சரணமிட்டுரைதுசொல்லும்
ஐயாவேவாஸ்வரே ஆண்டவரே நீர்கேளும்
அருச்சுனன் தன்னருகே அக்கினிவளருகுது
ஆற்றமுடியாமல் ஐயாவேவந்துவிட்டோம்
ஆதிசிவன்கேட்டு அதிககோபமுண்டாகி
அத்தனைக்கும்வல்லவனே அருச்சுனராசனுந்தான்
எனதுபாமசிவன் எரிபறந்துகோபமுடன்
வருணபகவானை வாருமென்றுதானழைத்து
யானையுடகால்பெருமன் யானைமழைபெய்யுமெனக்
கட்டளையிட்டுக் கடிகியேபோமென்றார்
ஆதிசிவன்வார்த்தை அவ்வருணன் தவருமல்
சமுத்திரத்தின் நீரையுண்டு தான்வருதுமேகங்களும்
கார்மேகமேழும் கறுத்துஎழும்பியது
ஆனைக்காலைப்போலவே அவ்வருணன்மழைபொழிய
அந்தச்சமயத்தில் ஆயுருவ்வோடிவந்தார
அருச்சுனனைவான்விஜயா ஆண்டவனார்கோபமதாய்
வருணபகவானை மழைபொழியஅனுப்பினார்
எச்சரிக்கையாகவே இருமென்றுதானடந்தார்
அந்தச்சமயத்தில் ஆயருபவோடிவந்தார்
மேகமெழும்பி மின்காலவருகையிலே
கண்டானேவான்விஜயன் கனமோசமவருகுதென்று
விலவளைத்து நாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
சங்காமாரிபோலே சரமேற்சரம்பொழிந்தான்
அம்பினால்மூடுபந்தல் அருச்சுனன்போட்டுவிட்டான்
வான்மழைபொழியாமல் வாள்சரத்தாலபநதலிட்டான்
வருணபகவானும வந்துமழைபொழிந்தான்

வெள்ளமாய்க் காண்பெருக வேணமழைபொழிந்தான்
அருச்சுனன்வளார் தினை அக்கினிக்குச்சேதமில்லே
வருணபகவானும் பனகுமிகக்குளிர்ந்து
சந்தோஷப்பட்டாரும் தார்விசையனர்ச்சுனன்மேல்
என்னிலுபவல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
வருணஸ்திரத்தை வாள்விஜயன்கைக்கொடுத்தான்
வாங்கியேவாளவிஜயன வருணனுக்கேதுசொல்வான்
ஆரனுப்ப நீர்வந்தீர் அமராதுசெய்யவென்று
என்றதுகேட்டு ஏதுசொல்வான் வருணராஜன
ஆதிசிவனர் அனுப்பினர்வந்தேனெனருன்
எழில்விஜயாஉனேஜெயிக்க என்னுல்முடியாது
ஈசனர்தன தமக்கு இவ்வார்த்தைசொல்லப்போறேன்
ஆனல்வருணரே நீர் அரனர்க்கெடுத்துரையும்
கோடிசரணமும் கும்பிட்டேனென்றுசொல்லும் [னே
ஆகச்சாடல்செய்வதேனே அருச்சுனன்மேல் கோபமே
கடிகியேவந்தெனக்கு காட்சிதரச்சொல்லுமையா
போய்வாருமென்று பொட்டெனவேசரணமிட்டான்
வாயுவேகமாகவே வருணராஜன்வந்துவிட்டான்
ஆதிசிவனுக்கு அடிவணங்கிதெண்டனிட்டான்
அருச்சுனனைஜெயிக்க ஆராலுமுடியாது
உம்பர்பிரானரே உம்மாலேமுடியாது
அத்தனைக்கு வல்லபிரானுங்கயிலைலிங்குவந்தான்
கோரினவரத்தை நீர் கொடுத்தனுப்புமீஸ்வரரே
என்றதுகேட்டு ஈசனர்கோபமானர்
வாள்விசயன்தனனுடைய மனமுடுக்கழிக்கிறேன்யார்
கழுகுகளுங்கூளிகளும் கடிகியேஉண்டுபண்ணூர்
அருச்சுனன்யாங்கிஷத்தை அடங்கலுமுனணுமென்று
கவ்விப்பிடிங்கியே கடிகியேயுண்ணுமெனருர் [ர்
இமையோர்பிரானரும் இன்னமேதுண்டுபண்ணூர்
கருவண்டுசெவ்வண்டு கணக்கில்லாதுண்டுபண்ணூர்
கொட்டுகின்றதுளவியை கேடியவருண்டுபண்ணூர்
தேவேந்திரனமகனுடலைத் துளையாத்துளையுமென்ருர்

ஆரை சண நாழிகையில் அருச்சுனனைக்கொல்லுமென
மகாதேவா சிலவருள வருகுதுசேனைகள்தான்
குளவிகளும் கூளிகளும் கூட்டமாய்வருகுதங்கே
கனபோசம்வருகுதென்று கரியமால்தானறிந்து
அருச்சுனராசனண்டை அரிமாமேரோடி வந்தார்
காணுமப்பா அர்ச்சுனரே கழுகுகள்வருகுதடா
குளவிகளும்கழுகுகளும் கூளிகளும் வண்டுகளும்
அனேகமவருகுது அங்கந்துளைப்படுத்த
எச்சரிக்கையாகவே யிருக்கணும் அர்ச்சுனரே
என்றதுகேட்டு இந்திரன்மகனே துரைப்பான்
அடியேனுலேதாரும் ஐயர்பெருமானே
உன்வலிமையாலே உயர்புரம்வந்தேனே
எந்தவிதத்திலேயும் ஈடேறப்பாருமையா
வணங்கிசரணம்பண்ணினான் மாயன்பெருமானை
தரணியளந்தவரும் சந்தோஷப்பட்டாராம
கழுகுகளும்கூளிகளும் கவ்விச்சதைகொண்டாலும்
அருச்சுனன்தேகத்துக்கு அழிவில்லாதேயிருக்க
என்றுவரமளித்து எம்பெருமான்போய்நடந்தார்
வந்துபிடுங்கிற்று வான்விசயன்தேகமெல்லாம்
சல்லடைக்கண்போலே சமமாய்த்துளைப்படுத்தும்
எப்போதும்போலே ஏற்படுத்தேகமெல்லாம்
கைகள்நகம்பேர்ந்து கடித்தபல்லுங்கூர்மழுங்கி
மூக்குகள்தானொடிந்து முண்டங்களாய்போகுது
ஆதிசிவனருகில் அடிபணிந்துதெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கழுகுகள்முறையிடும்
எங்களாலானமட்டும் எழில்விசயன்தேகமதை
சல்லடைக்கண்களைப்போற் சதையைத்துளைத்திடுவோம்
சதையைத்துளைத்திடுவோம் மெய்யைப்பிடுங்கிடுவோம்
குப்பல்குப்பலாகவேதான் குவிப்போமே மாமிஷத்தை
குவித்ததை நாழிகைக்குள் கூடிவிடுந்தேகமதில்
துளைத்ததை நாழிகைக்குள் தோன்றுமுடல்முன்போல
பின்னுஞ்சதைகவ்விப் பிடுங்கியெரித்திடுவோம்

அருச்சுனன்தேகமதை அழித்தோம் அழியவில்லை
கடித்தபல்லுங்கூர்மழுங்கி கைகள்நகம்பேர்ந்துதையா
ஙங்களால்முடியாது இளவிசயனைச்செயிக்க
ஆருலுமுடியாது அருச்சுனரைச்செயிக்க
கோரியவரத்தை கொடுத்துவிடும் ஆண்டவரே
அவ்வார்த்தைகேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
எத்தனைநாள்தவசிருந்தும் ஏனென்றுகேட்பேனே
எனறுபரமசிவன் இருந்தார்சிங்காதனத்தில்
கற்பூரமண்டபத்தில் கர்த்தர்கொலுவிருந்தார்
மாயன்பெருமாளும் மறுபடியுமோடிவந்தார்
அருச்சுனபார்த்திபா ஆதிசிவன்மோசஞ்செய்தார
கற்பூரக்கொடிமுடியில் கர்த்தர்கொலுவிருந்தார்
கற்பூரக்கொடிமுடியைக் கனலாறகொளுத்திவிட்டால்
கலகத்தைச்செய்துவிட்டால் காட்சிதனைத்தந்திடுவார்
என்றதுசொல்லி எம்பெருமான்போய்நடந்தார்
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசெய்வான
வில்வளைத்துநார்பூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அககினிபாணமதை அருச்சுனன்உச்சரித்து
மந்திரத்தைஉச்சரித்து மண்டபத்தை கொளுத்துமென்
மார்புரளவாங்கியே தோள்புரளவிட்டுவிட்டான் [று
வநததுபாணம் மகாதேவர்மண்டபத்தில்
கற்பூரமண்டபத்தைக் கடுகிக்கொளுத்திடவே
மணடபந்தானெரிய மகாதேவர்பார்த்துவிட்டார்
பார்த்திரோமாயவரே பார்த்திபன்தன்வலுமை
(என்) வீட்டைக்கொளுத்தியே வேணவரம்வாங்கவநதா
இப்படிச்செய்தவர்களெவர்களையும் நானறியேன் (ன்
சதுர்யுகமட்டும் தவசுகள்பண்ணலும்
அருச்சுனன்தன்தமக்கு அரியவரமதருவதில்லை
கற்பூரமண்டபத்தை கடுகியேவிட்டெழுந்து
சாம்ராணிமண்டபத்தில் சாமிவந்துகொலுவிருநதார்
சாம்ராணிமண்டபத்தைத் தணலாய்கொளுத்துமென்றார்
சொல்லிநடநதாரே சுவாமிபெருமாளும்

மறுகாலொருகரமும் வரிவில்வளைத்துக்கொண்டு
அக்கினியஸ்திரத்தை அருச்சுனன்முடுக்கிவிட்டான்
சாம்பானிமண்டபத்தைத் தணலாயுருக்கிறது
கண்டார்மகாதேவர் கடியக்கேதுசொல்வார்
கண்டீர்களோதேவர்களே காண்டீபன்ஆண்மைகளை
என்வீட்டைக்கொளுத்தியேவெணவரம்வாங்கவந்தான்
இந்தஆண்மையுள்ளவனை எங்குமேநானறியேன்
வெண்ணீறுமண்டபத்தில் விமலருப்போய்நடந்தார்
மாயவன்பெருமாளும் மாயமாயோடிவந்து
அருச்சுனா பார்த்திபா அதிகமோசம்வந்ததடா
விபூதிமண்டபத்தில் வேந்தரும்வந்தமர்ந்தார்
அப்பெரியமண்டபத்தை அகமாக்கிப்போடுமென்றார்
அவ்வார்த்தைசொல்லி அரிராமர்போய்நடந்தார்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
வருணபகவான் பரமளித்தயஸ்திரத்தை
மந்திரஜாபமிட்டு வாங்கினன்மார்புரள
வந்துவிழுந்ததய்யோ வல்லபாணர்மண்டபத்தில்
வானமழைபோலாக வந்துபொழிந்திடுதாம்
வெண்ணீறுமண்டபமும் மெத்தக்கரைந்திடவே
கண்டார்மகாதேவர் கண்கொள்ளாக்கோபமுடன்
ஆயன்பெருமாளே அருச்சுனனாண்மைதனை
கண்டீரோமாயவரே காண்டீபனாண்மைதனை
எத்தனைமண்டபத்தை இடித்துத்தகர்த்துவிட்டான்
இப்படிப்பட்டவற்கு எப்படிவரமருள்வேன்
இங்கிருந்தோமானால் இப்படிக்குப்பண்ணுகிறான்
பாதாளமண்டபத்தில் பரமசிவன்போகவென்று
எழுந்தார்மகாதேவர் எல்லோருங்கூடிவர
அந்தச்சபையத்தில் அரிராமரோடிவந்து
அருச்சுனாபார்த்திபா அதிகமோசம்வந்துதடா

பாதாளமண்டபத்தில் பரமசிவன்போனார்காண்
போய்விட்டாராமானால் பிற்பாடுகாணொணாது
காணக்கிடையாது சுத்தருடசேவை
போகாமலேதடுத்தால் பெருமானைக்கண்டிடலாம்
என்றதுசொல்லி எம்பெருமான்போய்நடந்தார்
மாயவனார்போனபின்பு வாள்விஜயனேதுசெய்தான
காண்டீபன்வில்வளைத்து கணையெடுத்துவுச்சரித்தான்
கடிகிமறித்துவிடும் என்றுகணைதொடுத்தான்
வந்துதடுத்தது வாள்விஜயன்விட்டபாணம்
மகாதேவர்முன்பாக வளர்ந்தஅயக்கினிபோல்
முக்கண்ணுடையவரை முன்னேதடுத்ததுகாண்
கண்டார்பரமசிவன் கண்கொள்ளாக்கோபமுடன்
கண்டீரோதேவர்களே காண்டீபனாண்மைகளை
இப்படிப்பட்டவற்கு எப்படிவரங்கொடுப்பேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்தேவரெலலாம்
தருமர்தம்பியருச்சுனற்கு சமர்த்துகள்மெத்தவுண்டு
இவருடன்வெதிர்த்தவர்கள் எவருப்பிழைப்பதில்லை
காட்சிதந்தாலல்லாது க்ஷேமோசமவந்துவிடும்
என்றதுகேட்டு ஏதுசொல்வாரீஸ்பாரும்
அருச்சுனன்சமர்த்துகளை ஆண்மைகளைக்காணுகிறேனெ
தவசுநிலைக்கம்பத்தை தரையோடமிழ்த்துகிறேன்
என்றுபரமசிவன் ஏமனைத்தானழைத்து
எமதர்மராஜரேநீர் ஏனம்போல்வடிவெடுத்து
அருச்சுனன்தன்னருகில் அபயமிட்டுவோடுமென்றார்
கடிகியனுப்பினர் கடவுளுமவனையங்கே
எமதர்மராஜன் ஏனம்போல்வடிவெடுத்து
பன்றிவடிவெடுத்து பார்த்திபனருகில்வந்தான்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவாறான்

அபயமென்றசத்தம் அருச்சுனன்தான்கேட்டு
அபயக்குரல்கேட்டால் ஆதரிக்கவேணுமென்று
அலகப்புயஸ்திரத்தை அருச்சுனன்விட்டுவிட்டான்
காட்டுப்பன்றிதனை ம்நீ கப்பத்தில்கட்டுமென்றான்
மந்திரதுபமிட்டு வாங்கினானருச்சுனனும்
வந்தவயஸ்திரந்தான் வளைந்துமேகட்டுது
கப்பத்துடனேதான் கட்டியேபோட்டுது
கட்டுண்டான்காலன் காண்டீபன்தன்சரத்தால்
அந்தச்சமையத்தில் ஆதிசிவனெழுந்தார்
மெத்தப்பெரியவருய் வேடன்வடிவெடுத்தார்
பிரமதேவனதானும் பெரியதொருவேடரானர்
விக்கினவிநாயகர் வேடர்வடிவெடுத்தார்
சூர்குலமவோஅந்த சுப்ரமண்யர்வேடரானர்
அமராபதியானும் அங்கபிரான்வேடரானர்
அடியானந்தமாயவரும் அங்கேவொருவேடரானர்
அருச்சுனனைவெல்லவென்று அனைவரும்வேடருனர்
சவ்பாரியைத்தானழைத்து இப்போசமயமென்றார்
சவ்பரியாள்தனனுடனே ஏழுபேர்வேடரானர்
வோயார்வடிவெடுத்து வாள்விஜயன்தன்னருகே
காற்செருப்புந்தோல்நல்லாவும் கையில்துப்பாக்கிகளும்
மான்வலையுஞ்சிலலாக்கோல் மருந்துகேப்குண்டுகளும்
ரெட்டைக்குண்டுதுப்பாக்கி நேரிசயதோளில்வைத்து
சின்னவேடனபெரியவேடன் சிவனுங்கீழ்வேடரானர்
பொன்னுற்றழுக்கடித்துப் புறப்பட்டார்வேடரெல்லாம்
மற்றுமுள்ளதேவதைகள் வயிரவனர்வடிவெடுத்தார்
கருநாயுஞ்செந்நாயும் கணக்கில்லாநாய்கள்வர
காட்டைவளைத்தார்கள் கருநாயைச்சுத்திவிட்டார்
அட்டபுவில்லாயுதமும ஆண்டவனர்கைப்பிடித்து

வாரார்கள்வேடரெல்லாம் வளைத்துத்துரத்தியல்லோ
அத்தண்டவேடுவரும் அருச்சுனருகில்வந்து
ஆகாணுஞ்சங் மரே அறிவுடைப்படைத்தவரே
புதிதாய்த்தவசுபண்ணிப் புத்திமெத்தக்கற்றவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
ஏழைகண்டாய்வேடுவனான் எட்டுநாள்காத்திருந்தேன்
காத்திருந்திவ்வேனபத்தை கணையாலேஎய்துவிட்டேன்
காயப்பட்டுயேனம் கங்கியேவந்துதிங்கே
ஏனம்வநதசாடையிது இப்போதடிபிடித்து
அடிபிடித்துவந்தோமநாம் ஆனதொருசங்கமரே
கம்பத்துடனே நீர் கட்டிவைத்தகாரியமேன்
பசியோடிருக்கிறோம் பன்றிதனைவிட்டுவிடும்
பிள்ளையுங்குட்டிகளும் பெரும்பசியாய்ப்புலம்புகிறோம்
கட்டவிழ்த்துவிட்டுவிடும் கடுகப்புசித்திடுவோம்
என்றுசொல்லிக்கொண்டு ஈஸ்பரனுந்தான்வரவே
காண்டீபனர்ச்சுனனுங் கடுகியேதுசொல்வான்
சிவத்தியானமாகவே சிலைவிஜயனேதுசொல்வான்
ஆடாவேடுவனே அப்புறத்தேபோய்விடுங்காண்
அபயக்குரல்கேட்டால் ஆதரிப்பேனல்லாமல்
இனியேல்விடுவேனென்று எண்ணாதேவுன்மனதில்
பன்றியைத்தின்றாலே பசியாறிப்போவாயோ [ண்
குழந்தைக்குழந்தனுக்குங் குலத்தார்க்குப்போதுமோகா
தனைப்போல்ஜீவன்களை தான்கொல்லஎண்ணுவரோ
சிவனாரைநோக்கியே செய்கிறேன்தவசுநிலை
எதிரிட்டுக்கொள்ளாதே இடையுங்கள்வேடுவரே
அரகராஅரனேயென்று அடித்தானேஜெயகண்டிகை
சம்போசிவனேயென்று தொனித்தானேசங்குதனை
ஆதிசிவனும் அருச்சுனற்குயேதுசொல்வார்

எத்தனைசொன்னாலும் இரங்கிலையோயுன்மனது
தருமம் நினைத்தாக்கால சாமிவந்துதுணையாவார்
வயிறுபசிதீர்த்தாக்கால் மகாதேவர்துணையாவார்
(உன்) தாயார்தகப்பனுக்குந் தமையற்குந்தம்பியற்கும்
ஒருகோடிமோட்சமுண்டு உச்சாகஞ்செய்யுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனரேதுசொல்வார்
ஒருகாலுரைத்தேனே மறுகாலுரைப்பேனோ
தவசுநிலைவேளையிலே சத்தங்கள்போடாதே
சந்திரர்சூரியர்கள் தவறிநிலைதப்பினாலும்
காலப்பிரண்டு கலியுகம்வந்தாலும்
நரிக்குப்பிறந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
வாயாறச்சொன்னசொல்லு மறந்துவிடப்போறதில்லை
ஆதரிப்போனையல்லாமல் அலையவிடப்போறதில்லை
மறுவார்த்தைபேசாதே வல்லுயிரைவாங்கிடுவேன்
எதிரேவரவேண்டாம் இடையநில்லும்வேடுவரே
ஆகாரம் அரனைப்பெறாருன் அரன்மேலேதியானமானான்
அப்போதுபாபசிவன் அருச்சுனற்குயேதுசொல்வான்
(நான்) ஏழையென்றோசங்கமரே எனைமிரட்டுகிறாய்
என்னைதுரத்திவிட்டேன் பன்றியைத்தின்னவென்றோ
என்னைமிரட்டுகிறாய் இவ்வார்த்தைநானறிவேன்
நான்போவேனென்று எண்ணாதேஉனமனதில்
ஆதுபேர்வேடுவர்கள் அருங்கிளியாள்வேடுவச்சி
உத்தமரே நீயொருவன் வுகந்துமேகூடியல்லோ
பன்றிதனைச்சுட்டு பங்கிட்டுக்கொள்ளுவோம்வா
பங்குபோட்டுத்தின்று பசியாறிக்கொள்ளுமென்றார்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும
ஜாதிக்குதக்கபுத்தி தானிருக்கும்வேடருக்கு
என்றுசொல்லிவேடுவரு மேதுசொல்வாரப்போது

ஆண்டிப்பயலுக்கு அறிவுகிடையாது
பசிக்குதெனவேண்டி பன்றிமேலம்புதொட்டேன்
தப்பித்துவோடிவாத் தமபமதிற்கட்டலாமோ
கீழேயிறங்கிவாடா கேடுகெட்டசங்கமனே
என்சமர்த்தும்உன்சமர்த்தும் இப்போதெரியுமடா
சண்டைக்குவாடா நீ சமர்த்துள்ளசங்கமனே
என்றவுடன்கம்பம்விட்டு இறங்கிஞன்வான்விஜயன்
வான்விஜயன்றன்முதுகில் மட்சரேகைபார்க்கவென்று
பரமசிவனும்வந்து பார்த்தனுடன்சண்டைபண்ணுர்
ஆண்டவனென்றறியாமல் அடித்தான்காண்வில்லாலே
பரமருங்கீழ்விழுந்து பார்த்தனையெடுத்துக்கொண்டார்
பார்வதியாள்பார்த்தாளே பார்த்தனிடமட்சரேகை
பார்த்திபனென்று பார்வதியாள்பேர்கொடுத்தாள்
பாசுபதாஸ்திரம் பரமருந்தான்கொடுத்தார்
அநேகவரம்பெற்று அருச்சுனனுந்தான்வாரான்
அண்ணனிடமவந்து ஆசையுடனுரைத்தான்
பன்னிரண்டுவருஷமும பாரவனந்திரிந்து
ஐவர்பஞ்சபாண்டவரே ஆரணியம்விட்டுநீங்கள்
அக்கியாதவாசம் அருந்தபசுசெல்லுமென்று
இச்சையுடனுரைத்து எம்பெருமான்பயணமாஞர்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்ருர்
துவாரகாபுரிநோக்கி சுவாமியவர்போகலுற்ருர்
அப்பாலபஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
பரமருடனதயவால் பன்னிரண்டுவருஷஞ்சென்று
வனவாசமேதிரிந்து வாரார்கள்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாணடவர்கள் ஆரணியம்விட்டலவோ
நாடேவருகுருர் பரமருடதன்தயவால்
பாரிலுள்ள ஆடவரும் பாலகரும்மங்கையரும்

ஆரியரும்மற்றோரும் யாவர்களுந்தான்படிக்க
முன்னாளில்மூதோர் மொழிந்தவனவாசமதை
இன்னாளிற்போற்ற வெழுதாவெழுக்கதனால்
அச்சுக்கூடத்திப ரனேகரிதுவரையில்
உச்சிதமாய்ச்சிலிதை போக்கிப்பதிப்பித்தார்கள்
அட்டதிக்குப்புகழு அச்சிலிதைத்தானியற்றி
கற்றோரும்மற்றோருங் களிப்பாய்படிப்பதற்குச்
சொற்குற்றமில்லாமல் சுத்தப்பிரதியதாய்
தப்பிதங்களைத்திருத்தி தன்னாலியன்றமட்டும்
பதிப்பித்தார்வித்தியா ரத்நாகரம்பிரசில்
இந்தகதையிலே எழுத்துப்பிழையிருந்தால்
தப்புப்பிழை திருத்தி தயவுபண்ணிஇரட்சிக்கவும்
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரூன்றி
பால்போல்ருசிக்கப் பாரில்மிகத்தான்வாழி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்தான்வாழி
ஓங்கியநால்வேத முனிபலவுந்தான்வாழி

விருத்தம்.

இப்பெருங்கதையை யுரைத்தவர்படித்தோ
ரெழுதினோர்பொருள்விரித் திசைத்தோர்
செப்பருமன்பாற் கேட்டோரிதன்பேர்
செப்பினோர் தினையிற் றீர்ந்தே
எப்பெருஞ்சிறப்பு மைந்தரும்வாழ்வு
பிசைந்த நிரக் காயுளுமுளராய்
ஒப்பருங்கீர்த்தி னிக பெறவிளங்கி
யுயபரும்புகழ வாழ்குவீரே.

## பஞ்சபாண்டவர் வனவாசம்.

முற்றிற்று.

---

உ

மகாகணபதிதுணை.

நீதிநெறி நாடக உபாத்தியாயர்

சங்கிலியா பிள்ளையவர்களியற்றிய

புதியவர்ணமெட்டுள்ள

நீதிநெறி

# அரிச்சந்திர நாடகம்

## அச்சிட்டு வந்து விட்டது.

இதற்கு முன் இப்பெரும் நாடகத்தை சில வர்ண மெட்டுகளிலமைத்து நீதிநெறி அரிச்சந்திர நாடகமெனப் பெயர் கொடுத்துப் பாடிய வித்வான் ம-ா-ா-ஸ்ரீ சங்கிலியாபிள்ளை யவர்களால் இப்போது தற்கால நாகரீகத்துக்கேற்றவாறு பாரீஸ்-இந்துஸ்தான்-திருப்புகழ் முதலிய பல வர்ணமெட்டுகளிற் புதிதாய் அமைத்து நீதிநெறி நாடக உபாத்தியாயர் சங்கிலியாபிள்ளை யியற்றிய புதிய வர்ணமெட்டுள்ள அரிச்சந்திரநாடகமெனப் பெயர்கொடுத்து ஷை உபாத்தியாயரைப் போல லெத்தகிராப் படமும் அத்துடன் ஷை புஸ்தகத்துக்கேற்ற ஐதீகப்படங்களும் சேர்த்து உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு நேர்த்தியான காலிக்கோபயிண்டு செய்து விற்பனைக்கு தயாராயிருக்கிறது. ஷைபுஸ்தகம் 1-க்கு விலை ரூ 1 4 0 பிரியமுள்ளவர்கள்நேரிலும், வி-பி-போஸ்டு மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

எமதுகம்பெனியின் கேட்லாக் தேவையானால் அரையணாஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்

இப்படிக்கு

பி. நா. சிதம்பரமுதலியார்.

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு மதராஸ்.

